பொன்னையழியாதுவளர்பொருளென்றுபோற்றியிப் பொய்வேடமிகுதிகாட்டிப்
பொறையறிவுதுறவீத லாதிநற்குணமெலாம் போக்கிலேபோகவிட்டுத்
தன்னிகரிலோபாதி பாழ்ம்பேய்பிடித்திடத் தரணிமிசைலோகாயதன்
சமயநடைசாராமல் வேதாந்தசித்தாந்த சமரசசிவானுபூதி
மன்னவொருசொற்கொண் டெனைத்தடுத்தாண்ட பின் வாழ்வித்தஞானகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன் மரபில்வருமௌனகுருவே. (ச)

போனகமிருக்கின்ற சாலையிடைவேண்டுவ புசித்தற்கிருக்குமதுபோற்
புருஷர்பெறுதர்மாதி வேதமுடனாகமம் புகலுமதினாலாம்பயன்
ஞானநெறிமுக்யநெறி காட்சியனுமானமுத னாவிதங்கடேர்ந்து
நானெனக்குளறு படைபுடைபெயர்த்திடவு நான்குசாதனமுமோர்ந்திட்
டானநெறியாஞ்சரியை யாதிசோபானமுற் றணுபக்ஷசம்புபக்ஷ
மாமிருவிகற்பமு மாயாதிசேவையு மறிந்திரண்டொன்றென்னுமோர்

மானதவிகற்பமற வென்றாங்றபதுநமது
 மரபென்றபரமகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
 மரபில்வருமௌனகுருவே. (ரு)

கல்லாதவறிவுமேற் கேளாதகேள்வியுங்
 கருணைசிறிதேதுமில்லாக்
காட்சியுங்கொலைகளவு கட்காமமாட்சியாக்
 காதலித்திடுநெஞ்சமும்
பொல்லாதபொய்ம்மொழியு மல்லாதநன்மைகள்
 பொருந்துகுணமேதுமறியேன்
புருஷர்வடிவானதே யல்லாதுகனவிலும்
 புருஷார்த்தமேதுமில்லே
னெல்லாமறிந்தநீ யறியாததன்றெனக்
 கெவ்வண்ணமுய்வண்ணமோ
விருளையிருளென்றவர்க் கொளிதாரகம்பெறு
 மெனக்குநின்னருடாரகம்
வல்லாலெனும்பெய ருனக்குள்ளதேயிந்த
 வஞ்சகனையாளநினையாய்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
 மரபில்வருமௌனகுருவே. (சா)

கானகமிலங்குபுலி பசுவொடுகுலாவுநின்
 கண்காணமதயானைநீ
கைகாட்டவுங்கையா னெகிடிக்கெனப்பெரிய
 கட்டைமிகவேந்திவருமே

போனகமமைந்ததென வக்காமதேனுநின்
பொன்னடியினின்றுசொலுமே
புவிராஜர்கவிராஜர் தவராஜனென்றுனை
போற்றிஜயபோற்றியென்பார்
ஞானகருணைகர முகங்கண்டபோதிலே
நவநாதசித்தர்களுமுன்
னட்பினைவிரும்புவார் சுகர்வாமதேவர்முதன்
ஞானிகளுமுனைமெச்சுவார்
வானகமுமண்ணகமும் வந்தெதிர்வணங்கிடுமுன்
மகிமையதுசொல்லவெளிதோ
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. (எ

சருகுசலபக்ஷணிக ளொருகோடியல்லாற்
சகோரபக்ஷிகள்போலவே
தவளநிலவொழுகமிர்த தாரையுண்டழியாத
தன்மையானந்தகோடி
யிருவினைகளற்றிரவு பகலென்பதறியாத
வேகாந்தமோனஞான
வின்பநிஷ்டையர்கோடி மணிமந்த்ரசித்திநிலை
யெய்தினர்கள்கோடிசூழக்
குருமணியிழைத்திட்ட சிங்காதனத்தின்மிசை
கொலுவீற்றிருக்குநின்னைக்
கும்பிட்டனந்தமுறை தெண்டனிட்டெண்மனக்
குறையெலாந்தீரும்வண்ண

மருமலரெடுத்துனிரு தாளையர்ச்சிக்கவெனை
வாவென்றழைப்பதெந்நாண்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. (அ)

ஆங்காரமானகுல வேடவெம்பேய்பாழ்த்த
வாணவத்தினும்வலிதுகா
ணறிவினை மயக்கிடு நடுவறியவொட்டாதி
யாதொன்றுதொடினுமதுவாய்த்
தாங்காதுமொழிபேசு மரிகரப்பிரமாதி
தம்மொடுசமானமென்னுந்
தடையற்றதேரிலஞ் சுருவாணிபோலவே
தன்னிலசையாதுநிற்கு
மீங்காரெனக்குநிக ரென்னப்ரதாபித்
திராவணுகாரமாகி
யிதயவெளியெங்கணுந் தன்னரசுநாடுசெய்
திருக்குமிதனொடெநேரமும்
வாங்காவிலாவடிமை போராடமுடியுமோ
மௌனோபதேசகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. (கூ)

பற்றுவெகுவிதமாகி யொன்றைவிட்டொன்றனைப்
பற்றியுழல்கிருமிபோலப்
பாழ்ஞ்சிந்தைபெற்றநான் வெளியாகநின்னருள்
பகர்ந்துமறியேன்றுவிதமோ

சிற்றறிவதன்றியுமெவரேனுமொருமொழி
 திடுக்கென்றுரைத்தபோது
சிந்தைசெவியாகவே பறையறையவுதரவெந்
 தீநெஞ்சமளவளாவ
வுற்றுணரவுணர்வற்றன் மத்தவெறியினர்போல
 வுளறுவேன்முத்திமார்க்க
முணர்வதெப்படியின்ப துன்பஞ்சமானமா
 யுறுவதெப்படியாயினு
மற்றெனக்கையநீ சொன்னவொருவார்த்தையினை
 மலையிலக்கெனநம்பினேன்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
 மரபில்வருமௌனகுருவே. (கo

## கருணாகரக்கடவுள்.

நிர்க்குணநிராமய நிரஞ்சனநிராலம்ப
 நிர்விஷயகைவல்யமா
நிஷ்களவசங்கசஞ் சலரகிதநிர்வசன
 நிர்த்தொந்தநித்தமுக்த
தற்பரவிஸ்வாதீத வ்யோமபரிபூரண
 சதானந்தஞானபகவ
சம்புசிவசங்கர சர்வேசவென்றுநான்
 சர்வகாலமுநினைவனோ
வற்புதவகோசர நிவர்த்திபெறுமன்பருக்
 கானந்தபூர்த்தியான

வத்துவிதநிச்சய சொரூபசாக்ஷாத்கார
வனுபூதியனுகூதமுங்
கற்பனையறக்காண முக்கணுடன்வடநிழற்
கண்ணூடிருந்தகுருவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (க)

மண்ணாதியைந்தொடு புறத்திலுளகருவியும்
வாக்காதிசுரோத்திராதியும்
வளர்கின்றசப்தாதி மனமாதிகலையாதி
மன்னுசுத்தாதியுடனே
தொண்ணூற்றோடாறுமற்றுள்ளனவுமெளனியாய்ச்
சொன்னவொருசொற்கொண்டதே
தூவெளியதாயகண் டானந்தசுகவாரி
தோற்றுமதையென்சொல்லுவேன்
பண்ணாருமிசையினொடு பாடிப்படித்தருட்
டான்மைநெறிநின்றுதவறாப்
பக்குவவிசேடராய் நெக்குநெக்குருகிப்
பணிந்தெழுந்திருகைகூப்பிக்
கண்ணாறுகரைபுரள நின்றவன்பரையெலாங்
கைவிடாக்காட்சியுறவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (உ)

எல்லாமுனடிமையே யெல்லாமுனுடைமையே
யெல்லாமுனுடையசெயலே

யெங்கணும்வியாபிநீ யென்றுசொலுமியல்பென்
றிருக்காதிவேதமெல்லாஞ்
சொல்லான்முழக்கியது மிக்கவுபகாரமாச்
சொல்லிறந்தவரும்விண்டு
சொன்னவையுமிவைநல்ல குருவானபேருந்
தொகுத்தநெறிதானுமிவையே
யல்லாமலில்லையென நன்றுவறிந்தே
னறிந்தபடிநின்றுசுகநா
ளுகாதவண்ணமே யிவ்வண்ணமாயினே
னதுவுநினதருளென்னவே
கல்லாதவறிஞனுக் குள்ளேயுணர்த்தினை
கதிக்குவகையேதுபுகலாய்
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே.

பட்டப்பகற்பொழுதை யிருளென்றமருளர்தம்
பக்ஷமோவெனதுபக்ஷம்
பார்த்தவிடமெங்கணுங் கோத்தநிலைகுலையாது
பரமவெளியாகவொருசொற்
றிட்டமுடன்மௌனியா யருள்செய்திருக்கவுஞ்
சேராமலாராகநான்
சிறுவீடுகட்டியதி னடுசோற்றையுண்டுண்டு
தேக்குசிறியார்கள்போல
நட்டணையதாக்கற்ற கல்வியும்விவேகமு
நன்னிலயமாகவுன்னி

நானென்றுநீயென் றிரண்டில்லையென்னவே
நடுவேமுளைத்தமனதைக்
கட்டவறியாமலே வாடினேனெப்போது
கருணைக்குறித்தாவனோ
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (ச)

மெய்விடாநாவுள்ள மெய்யருளிருந்துநீ
மெய்யானமெய்யையெல்லா
மெய்யெனவுணர்த்தியது மெய்யிதற்கையமிலை
மெய்யேதுமறியாவெறும்
பொய்யிடாப்பொய்யினே னுள்ளத்திருந்துதான்
பொய்யானபொய்யையெல்லாம்
பொய்யெனவண்ணமே புகலவைத்தாயெனிற்
புன்மையேனென்செய்குவேன்
மைவிடாதெழுநீல கண்டகுருவேவிஷ்ணு
வடிவானஞானகுருவே
மலர்மேவிமறையோது நான்முகக்குருவே
மதங்கடொறுநின்றகுருவே
கைவிடாதேயென்ற வன்பருக்கன்பாய்க்
கருத்தூடுணர்த்துகுருவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (ரு)

பண்ணேனுனக்கான பூசையொருவடிவிலே
பாவித்திறைஞ்சவாங்கே

பார்க்கின் றமலரூடு நீயேயிருத்தியப்
பனிமலரெடுக்கமனமு
நண்ணேனலாமலிரு கைதான்குவிக்கவெனி
னாணுமென் னுளநிற்றிநீ
நான்கும்பிடும்போ தரைக்கும்பிடாதலா
னென் பூசைசெய்யன் முறையோ
விண்ணேவிணுதியாம் பூதமேநாதமே
வேதமேவேதாந்தமே
மேதக்ககேள்வியே கேள்வியாம்பூமிக்குள்
வித்தேயவித்தின் முளையே
கண்ணேகருத்தேயெ னெண்ணேயெழுத்தே
கதிக்கானமோனவடிவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (ௐ)

சந்ததமும்வேதமொழி யாதொன்றுபற்றினது
தான்வந்துமுற்றுமெனலாற்
சகமீதிருந்தாலு மரணமுண்டென்பது
சதாநிஷ்டர்நினைவதில்லை
சிந்தையறியார்க்கீது போதிப்பதல்லவே
செப்பினும்வெகுதர்க்கமாந்
திவ்யகுணமார்க்கண்டர் சுகராதிமுனிவோர்கள்
சித்தாந்தநித்யரலரோ
விந்த்ராதிதேவதைகள் பிரமாதிகடவுள
ரிருக்காதிவேதமுனிவ

பெண்ணரியகணநாதர் நவநாதசித்தர்க
ளிரவிமதியாதியோர்கள்
கந்தருவர்கின்னரர்கண் மற்றையர்களியாவருங்
கைகுவித்திடுதெய்வமே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (எ)

துள்ளுமறியாமனது பலிகொடுத்தேன்கர்ம
துட்டதேவதைகளில்லை
துரியநிறைசாந்ததே வதையாமுனக்கே
தொழும்பனன்பபிடேகநீ
ருள்ளுறையிலென்னுவி நைவேத்தியம்ப்ராண
னுங்குமதிதூபதீப
மொருகாலமன்றிது சதாகாலபூசையா
வொப்புவித்தேன்கருணைகூர்
தெள்ளிமறைவடியிட்ட வமுதப்பிழம்பே
தெளிந்ததேனேசீனியே
திவ்யரசமியாவுந் திரண்டொழுகுபாகே
தெவிட்டாதவானந்தமே
கள்ளனறிவுடுமே மெள்ளமெளவெளியாய்க்
கலக்கவருநல்லவுறவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (அ)

உடல்குழையவென்பெலா நெக்குருகவிழிநீர்க
ளூற்றெனவெதும்பியூற்ற

ஆகிகாந்தத்தினைக் கண்டணுகல்போலவே
யோருறவுமுன்னியுன்னிப்
படபடெனநெஞ்சம் பதைத்துண்ணடுக்குறப்
பாடியாடிக்குதித்துப்
பனிமதிமுகத்திலே நிலவனையபுன்னகை
பரப்பியார்த்தார்த்தெழுந்து
மடலவிழுமலரனைய கைவிரித்துக்கூப்பி
வானேயவானிலின்ப
மழையேமழைத்தாரை வெள்ளமேநீடூழி
வாழியெனவாழ்த்தியேத்துங்
கடன்மனைதிறந்தனைய வன்பரன்புக்கெளிமை
கன்னெஞ்சனுக்கெளிமையோ
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணைகரக்கடவுளே. (கூ)

இங்கற்றபடியங்கு மெனவறியுநல்லறிஞ
ரெக்காலமும்முதவவா
ரின்சொறவறார்பொய்மை யாமிக்குரையா
ரிரங்குவார்கொலைகள்பயிலார்
சங்கற்பசித்தரவ ருள்ளக்கருத்தினுறை
சாக்ஷிநீயிகபரத்துஞ்
சந்தானகற்பகத் தேவாயிருந்தே
சமஸ்தவின்பமுமுதவுவாய்
ங்கத்தைபொத்தெனைப் பாயவருவினையினைச்
சேதிக்கவருசிம்புளே

சிந்தாகுலத்திமிர மகலவருபானுவே
தீனனேன்கரையேறவே
சங்கற்பபேராசை வெள்ளத்தின்வளரருட்
ககனவட்டக்கப்பலே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (கஎ)

---

## சித்தர்கணம்.

திக்கொடுதிகந்தமும் மனவேகமென்னவே
சென்றோடியாடிவருவீர்
செம்பொன்மகமேருவொடு குணமேருவென்னவே
திகழ்துருவனளவளாவி
யுக்ரமிகுசக்ரதர னென்னநிற்பீர்கையி
லுழுந்தமிழுமாசமனமா
வோரேழுகடலையும் பருகவல்லீரிந்த்ர
னுலகுமயிராவதமுமே
கைக்கெளியபந்தா வெடுத்துவிளையாடுவீர்
ககனவெட்டத்தையெல்லாங்
கடுகிடையிருத்தியே யட்டகுலவெற்பையுங்
காட்டுவீர்மேலுமேலு
மிக்கசித்திகளெலாம் வல்லநீரடிமைமுன்
விளங்கவருசித்தியிலையோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. (க)

பாட்டளிதுதைந்துவளர் கற்பகநனீழலைப்
　பாரினிடைவரவழைப்பீர்
பத்மநிதிசங்கநிதி யிருபாரிசத்திலும்
　பணிசெயுந்தொழிலாளர்போற்
கேட்டதுகொடுத்துவர நிற்கவைப்பீர்பிச்சை
　கேட்டுப்பிழைப்போரையுங்
கிரீடபதியாக்குவீர் கற்பாந்தவெள்ளமொரு
　கேணியிடைகுறுகவைப்பீ
ரோட்டினையெடுத்தா யிரத்தெட்டுமாற்றாக
　வொளிவிடும்பொன்னாக்குவீ
ருரகனுமிளைப்பாற யோகதண்டத்திலே
　யுலகுசுமையாகவருளான்
மீட்டிடவும்வல்லநீ ரென்மனக்கல்லையனன்
　மெழுகாக்கிவைப்பதரிதோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
　வித்தகச்சித்தர்கணமே.

பாரொடுநன்னீராதி யொன்றோடொன்றாகவே
　பற்றிலயமாகும்போழ்து
பரவெளியின்மருவுவீர் கற்பாந்தவெள்ளம்
　பரந்திடினதற்குமீதே
நீரிலுறைவண்டாய்த் துவண்டுசிவயோகநிலை
　நிற்பீர்விகற்பமாகி
நெடியமுகிலேழும் பரந்துவருஷிக்கிலோ
　நிலவுமதிமண்டலமதே

யூரெனவிளங்குவீர் பிரமாதிமுடிவில்விடை
　யூர்தியருளாலுலவுவீ
ருலகங்கள்கீழ்மேல வாகப்பெருங்காற்
　றுலாவினற்குரணையினன்
மேருவெனவசையாம னிற்கவல்லீருமது
　மேதக்கசித்தியெளிதோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
　வித்தகச்சித்தர்கணமே.　　(ரு)

எண்ணரியபிறவிதனின் மானுடப்பிறவிதா
　னியாதினும்மரிதரிதுகா
ணிப்பிறவிதப்பினு லெப்பிறவிவாய்க்குமோ
　வேதுவருமோவறிகிலேன்
கண்ணகனிலத்துநா னுள்ளபொழுதேயருட்
　கதனவட்டத்தினின்று
காலூன்றிநின்றுபொழி யானந்தமுகிலொடு
　கலந்துமதியவசமுறவே
பண்ணுவதுநன்மையிந் நிலைபதியுமட்டுமே
　பதியாயிருந்ததேகப்
பவுரிகுலையாமலே கௌரிகுண்டலியாயி
　பண்ணவிதனருளினலே
விண்ணிலவுமதியமுத மொழியாதுபொழியவே
　வேண்டுவேனுமதடிமைநான்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
　வித்தகச்சித்தர்கணமே.　　(சு)

பொய்திகழுமுலகநடையென்சொல்கேனென்சொல்கேன்
பொழுதுபோக்கேதென்னிலோ
பொய்யுடனிமித்தம் புசிப்புக்கலைந்திடல்
புசித்தபின்கண்ணுறங்கல்
கைதவமலாமலிது செய்தவமதல்லவே
கண்கெட்டபேர்க்கும்வெளியாய்க்
கண்டதிதுவிண்டிதைக் கண்டித்துநிற்றலெக்
காலமோவதையறிகிலேன்
மைதிகழுமுகிலினங் குடைநிழற்றிடவட்ட
வரையினெடுசெம்பொன்மேரு
மால்வரையின்முதுகூடும் யோகதண்டக்கோல்
வரைந்துசயவிருதுகாட்டி
மெய்திகழுமட்டாங்க யோகபூமிக்குள்வளர்
வேந்தரேகுணசாந்தரே
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. (௫)

கெசதுரகமுதலான சதுரங்கமனமாதி
கேள்வியினிசைந்துநிற்பக்
கெடிகொண்டதலமாறு மும்மண்டலத்திலுங்
கிள்ளாக்குசெல்லமிக்க
தெசவிதமதாய்நின்ற நாதங்களோலிடச்
சிங்காசனாதிபர்களாய்த்
திக்குத்திகந்தமும் பூரணமதிக்குடை
திகழ்ந்திடவசந்தகால

மிசையமலர்மீதுறை மணம்போலவானந்த
மிதயமேற்கொள்ளும்வண்ண
மென்றைக்குமழியாத சிவராசயோகமா
யிந்த்ராதிதேவர்களெலாம்
விஜயஜயஜயவென்ன வாசிசொலவேகொளு
விருக்குநம்பெருமைவெளிதோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. (சு)

ஆணிலேபெண்ணிலே யென்போலவொருபேதை
யகிலத்தின்மிசையுள்ளதோ
வாடியகறங்குபோ லோடியுழல்சிந்தையை
யடக்கியொருகணமேனும்யான்
காணிலேன்றிருவருளை யல்லாதுமௌனியாய்க்
கண்மூடியோடுமூச்சைக்
கட்டிக்கலாமதியை முட்டவேமூலவெங்
கனலினையெழுப்பநினைவும்
பூணிலேனிற்றைநாட் கற்றதுங்கேட்டதும்
போக்கிலேபோகவிட்டுப்
பொய்யுலகனுயினே னுயினுங்கடையான
புன்மையேனின்னமின்னம்
வீணிலேயலையாமன் மலையிலக்காகநீர்
வெளிப்படத்தோற்றல்வேண்டும்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. (எ)

கன்னலமுதெனவுமுக் கனியெனவும்வாயூறு
  கண்டெனவுமடியெடுத்துக்
கடவுளர்கடந்ததல வழுதழுதுபேய்போற்
  கருத்திலெழுகின்றதெல்லா
மென்னதறியாமையறி வென்னுமிருபகுதியா
  லீட்டுதமிழென்றமிழினுக்
கின்னல்பகராதுலக மாராமைமேலிட்
  டிருத்தலாலித்தமிழையே
சொன்னவனியாவனவன் முத்திசித்திகளெலாந்
  தோய்ந்தநெறியேபடித்தீர்
சொல்லுமெனவவர்நீங்கள் சொன்னவவையிற்சிறி
  து தோய்ந்தகுணசாந்தனெனவே
மின்னல்பெறவேசொல்ல வச்சொல்கேட்டடிமைம
  னம் விகசிப்பதெந்தநாளோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
  வித்தகச்சித்தர்கணமே. (அ)

பொற்பினெடுகைகாலில் வள்ளுகிர்படைத்தலாற்
  போந்திடையொடுக்கமுறலாற்
பொலிவானவெண்ணீறு பூசியேயருள்கொண்டு
  பூரித்தவெண்ணீர்மையா
லெற்படவிளங்குககனத்திலிமையாவிழி
  யிசைந்துமேனோக்கமுறலா
லிரவுபகலிருளான கனதந்திபடநூறி
  யிதயங்களித்திடுதலாற்

பற்பலவிதங்கொண்ட புலிகலையினுரியது
 படைத்துப்ரதாபமுறலாற்
பனிவெயில்கள்புகுதாமனெடியவான்றொடர்நெடி
 பருமரவனங்களாரும் [ய
வெற்பினிடையுறைதலாற் றவராசசிங்கமென
 மிக்கோருமைப்புகழ்வர்காண்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
 வித்தகச்சித்தர்கணமே. (கூ)
கல்லாதபேர்களே நல்லவர்கணல்லவர்கள்
 கற்றுமறிவில்லாதவென்
கர்மத்தையென்சொல்வேன்மதியையென்சொல்லு
 வேன் கைவல்யஞானநீதி
நல்லோருரைக்கிலோ கர்மமுக்கியமென்று
 நாட்டுவேன்கர்மமொருவ
னுட்டினுலோபழைய ஞானமுக்கியமென்று
 நவிலுவேன்வடமொழியிலே
வல்லானொருத்தன்வர வுந்த்ராவிடத்திலே
 வந்ததாவிவகரிப்பேன்
வல்லதமிழறிஞர்வரி னங்ஙனேவடமொழியின்
 வசனங்கள்சிறிதுபுகல்வேன்
வெல்லாமலெவரையு மருட்டிவிடவகைவந்த
 வித்தையென்முத்திதருமோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
 வித்தகச்சித்தர்கணமே. (க0)

## ஆனந்தமானபரம்.

கொல்லாமையெத்தனை குணக்கேட்டைநீக்குமக்
குணமொன்றுமொன்றிலேன்பாற்
கோரமெத்தனைபக்ஷ பாதமெத்தனைவன்
குணங்களெத்தனைகொடியபாழ்ங்
கல்லாமையெத்தனை யகந்தையெத்தனைமனக்
கள்ளமெத்தனையுள்ளசற்
காரியஞ்சொல்லிடினு மறியாமையெத்தனை
கதிக்கென்றமைத்தவருளிற்
செல்லாமையெத்தனைவிர் தாகோஷ்டியென்னிலோ
செல்வமெதெத்தனைமுயற்சி
சிந்தையெத்தனைசலன மிந்த்ரஜாலம்போன்ற
தேகத்தில்வாஞ்சைமுதலா
யல்லாமையெத்தனை யமைத்தனையுனக்கடிமை
யானேனிவைக்குமாளோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (க)

தெருளாகிமருளாகி யுழலுமனமாய்மனஞ்
சேர்ந்துவளர்சித்தாகியச்
சித்தெலாஞ்சூழ்ந்தசிவ சித்தாய்விசித்ரமாய்த்
திரமாகிநானாவிதப்
பொருளாகியப்பொருளை யறிபொறியுமாகியைம்
புலனுமாயைம்பூதமாய்ப்
புறமுமாயகமுமாய்த் தூரஞ்சமீபமாய்ப்
போக்கொடுவரத்துமாகி

யிருளாகியொளியாகி நன்மைதீமையுமாகி
யின்றாகிநாளையாகி
யென்றுமாயொன்றுமாய்ப் பலவுமாயாவுமா
யிவையல்லவாயநின்னை
யருளாகிநின்றவர்க ளறிவதல்லாலொருவ
ரறிவதற்கெளிதாகுமோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (உ)

மாறுபடுதர்க்கந் தொடுக்கவறிவார்சாண்
வயிற்றின்பொருட்டதாக
மண்டலமுவிண்டலமு மொன்றாகிமனதுமல
மாலாகிநிற்கவறிவார்
வேறுபடுவேடங்கள் கொள்ளவறிவாரொன்றை
மெணமெணென்றகம்வேறதாம்
வித்தையறிவாரெமைப் போலவேசந்தைபோன்
மெய்ந்நூல்விரிக்கவறிவார்
சீறுபுலிபோற்சீறி மூச்சைப்பிடித்துவிழி
செக்கச்சிவக்கவறிவார்
திரமென்றுதந்தம் மதத்தையேதாமதச்
செய்கைகொடுமுளறவறிவா
ராறுசமயங்கடொறும் வேறுவேறாகிவிளை
யாடுமுனையாவரறிவா
ரண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (௩)

காயிலையுதிர்ந்தகனி சருகுபுனன் மண்டிய
கடும்பசிதனக்கடைத்துங்
கார்வரையின்முழையிற்கருங்கல்போலசையாது
கண்மூடிநெடிதிருந்துந்
தீயினிடைவைகியுந் தோயமதின்மூழ்கியுந்
தேகங்களென்பெலும்பாய்த்
தெரியநின்றுஞ்சென்னி மயிர்கள்கூடாக்குருவி
தெற்றவெயிலூடிருந்தும்
வாயுவையடக்கியு மனதினையடக்கியு
மௌனத்திலேயிருந்து
மதிமண்டலத்திலே கனல்செல்லவமுதுண்டு
வனமூடிருந்துமறிஞ
ராயுமறைமுடிவான வருணிடுைடிமை
யகிலத்தைநாடன்முறையோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (சு)

சுத்தமுமசுத்தமுந் துக்கசுகபேதமுந்
தொந்தமுடனிர்த்தொந்தமுந்
தூலமொடுசூக்குமமு மாசையுநிராசையுஞ்
சொல்லுமொருசொல்லின்முடிவும்
பெத்தமொடுமுத்தியும் பாவமொடபாவமும்
பேதமொடபேதநிலையும்
பெருமையொடுசிறுமையுமருமையுடனெளிமையும்
பெண்ணினுடனாணுமற்று

நித்தமுமனித்தமு மஞ்சனநிரஞ்சனமு
நிட்களமுநிகழ்சகளமு
நீதியுமநீதியு மாதியொடனாதியு
நிர்விஷயவிஷயவடிவு
மத்தனையுநீயலதெ ளத்தனையுமில்லையெனின்
யாங்களுனையன்றியுண்டோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே (ரு)

காராருமாணவக் காட்டைக்களைந்தறக்
கண்டகங்காரமென்னுங்
கல்லைப்பிளந்துநெஞ் சகமானபூமிவெளி
காணத்திருத்திமேன்மேற்
பாராதியறியாத மோனமாம்வித்தைப்
பதித்தன்புநீராகவே
பாய்ச்சியதுபயிராகு மட்டுமாமாயைவன்
பறவையணுகாதவண்ண
நேராகநின்றுவிளை போகம்புசித்துய்ந்த
நின்னன்பர்கூட்டமெய்த
நினைவின்படிக்குநீ முன்னின்றுகாப்பதே
நின்னருட்பாரமென்று
மாராருமறியாத சூதானவெளியில்வெளி
யாகின்றதுரியமயமே
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (சா)

வானாதிபூதமா யகிலாண்டகோடியாய்
மலையாகிவளைகடலுமாய்
மதியாகியிரவியாய் மற்றுளவெலாமாகி
வான்கருணைவெள்ளமாகி
நானாகிநின்றவனு நீயாகிநின்றிடவு
நானென்பதற்றிடாதே
நானெனக்குள்ளறி நானவிகாரியாய்
நானறிந்தறியாமையாய்ப்
போனாலதிட்டவலி வெல்லவெளிதோபகற்
பொழுதுபுகுமுன்கண்மூடிப்
பொய்த்துயில்கொள்வான்றனை யெழுப்பவசமோ
வினிப் போதிப்பதெந்தநெறியை
யானாலுமென்கொடுமை யனியாயமனியாய
மார்பாலெடுத்துமொழிவே
னண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (எ)

பொய்யினேன்புலையினேன் கொலையினேனின்னருள்
புலப்படவறிந்துநிலையாப்
புன்மையேன்கல்லாத தன்மையேநன்மைபோற்
பொருளலாப்பொருளைநாடும்
வெய்யனேன்வெகுளியேன் வெறியனேன்சிறிய
னேன் வினையினேனென்றென்னைநீ
விட்டுவிடநினைவையேற் றட்டழிவதல்லாது
வேறுகதியேதுபுகலாய்

துய்யனேமெய்யனே யுயிரினுக்குயிரான
துணைவனேயிணையொன்றிலாத்
துரியனேதுரியமுங் காணுவதீதனே
சுருதிமுடிமீதிருந்த
வையனேயப்பனே யெனுமறிஞரறிவைவிட்
டகலாதகருணைவடிவே
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (அ)

எத்தனைவிதங்கடான் கற்கினுங்கேட்கினுமென்
னிதயமுமொடுங்கவில்லை
யானெனுமகந்தைதா னெள்ளளவுமாறவிலை
யாதினும்மபிமானமென்
சித்தமிசைகுடிகொண்ட தீதையொடிரக்கமென்
சென்மத்துநானறிகிலேன்
சீலமொடுதவவிரத மொருகனவிலாயினுந்
தரிசனங்கண்டுமறியேன்
பொய்த்தமொழியல்லான் மருந்துக்குமெய்மொழி
புகன்றிடேன்பிறர்கேட்கவே
போதிப்பதல்லாது சும்மாவிருந்தருள்
பொருந்திடாப்பேதைநானே
யத்தனைகுணக்கேடர் கண்டதாக்கேட்டதா
வவனிமிசையுண்டோசொலா
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. (கூ)

எக்காலமுந்தனக் கென்னவொருசெயலிலா
 வேழைநீயென் றிருந்திட்
டெனதாவியுடல்பொருளு மௌனியாய்வந்துகை
 யேற்றுநமதென்றவன்றே
பொய்க்காலதேசமும்பொய்ப்பொருளில்வாஞ்சை
 யும் பொய்யுடலைமெய்யென்னலும்
பொய்யுறவுபற்றலும் பொய்யாகுநானென்னல்
 பொய்யினும்பொய்யாகையான்
மைக்காலிருட்டனைய விருளில்லையிருவினைகள்
 வந்தேறவழியுமில்லை
மனமில்லையம்மனத் தினமில்லைவேறுமொரு
 வரவில்லைபோக்குமில்லை
யக்காலமிக்கால மென்பதிலையெல்லா
 மதீதமயமானதன்றோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
 யானந்தமானபரமே. (௧0)

---

## சுகவாரி.

இன்னமுதுகனிபாகுகற்கண்டுசீனிதே
 னெனருசித்திடவலியவந்
தின்பங்கொடுத்தநினை யெந்நேரநின்னன்ப
 ரிடையருதுருகிநாடி
யுன்னியகருத்தவிழ வுரைகுளறியுடலெங்கு
 மோய்ந்தயர்ந்தவசமாகி

யுணர்வரியபேரின்ப வனுபூதியுணர்விலே
யுணர்வார்களுள்ளபடிகாண்
கன்னிகையொருத்திசிற்றின்பம்வேம்பென்னினுங்
கைக்கொள்வள்பக்குவத்திற்
தணவனருள்பெறின்முனே சொன்னவாறென்னெ
னக் கருதிநகையாவளதுபோற்
சொன்னபடிகேட்குமிப் பேதைக்குநின்கருணை
தோற்றிற்சுகாரம்பமாஞ்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (க)

அன்பின்வழியறியாத வென்னைத்தொடர்ந்தென்
னை யறியாதபக்குவத்தே
யாசைப்பெருக்கைப் பெருக்கிக்கொடுத்துநா
னற்றேனலந்தேனென
வென்புலமயங்கவே பித்தேற்றிவிட்டா
யிரங்கியொருவழியாயினு
மின்பவெளமாகவந் துள்ளங்களிக்கவே
யெனைநீகலந்ததுண்டோ
தன்பருவமலருக்கு மணமுண்டுவண்டுண்டு
தண்முகைதனக்குமுண்டோ
தமியனேற்கிவ்வணந் திருவுளமிரங்காத
தன்மையாற்றனியிருந்து
துன்பமுறினெங்ஙனே யழியாதநின்னன்பர்
சுகம்வந்துவாய்க்குமுரையாய்

சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (உ)

கல்லேனுமையவொரு காலத்திலுருகுமென்

கருணைக்கிணங்காத வன்மையையுநான்முகன
கற்பிக்கவொருகடவுளோ
வல்லான்வகுத்ததே வாய்க்காலெனும்பெரு
வழக்குக்கிழுக்குமுண்டோ
வானமாய்நின்றின்ப மழையாயிரங்கியெனை

பொல்லாதசேயெனிற் றாய்தள்ளனீதமோ
புகலிடம்பிறிதுமுண்டோ
பொய்வார்த்தைசொல்லிலோதிருவருட்கயலுமாய்
புன்மையேனுவனந்தோ [ப்
சொல்லான்முழக்கிலோ சுகமில்லைமௌனியாய்ச்
சும்மாவிருக்கவருளாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (௩)

என்பெலாநெக்குடைய ரோமஞ்சிலிர்ப்பவுட
விளகமனதழலின்மெழுகா
யிடையறாதுருகவரு மழைபோலிரங்கியே
யிருவிழிகணீரிறைப்ப
வன்பினுன்மூர்ச்சித்த வன்பருக்கங்ஙனே
யமிர்தசஞ்சீவிபோல்வந்

தானந்தமழைபொழிவை யுள்ளன்பிலாதவெனை
யார்க்காகவடிமைகொண்டாய்
புன்புலான்மயிர்தோ னரம்பென்புமொய்த்திடு
புலைக்குடிலிலருவருப்புப்
பொய்யல்லவேயிதனை மெய்யென்றுநம்பியென்
புந்திசெலுமோபாழிலே
துன்பமாயலையவோ வுலகநடையையவொரு
சொற்பனத்திலும்வேண்டிலேன்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (ச

வெந்நீர்பொருதெனுடல்காலின்முட்டைக்கவும்
வெடுக்கென்றசைத்தெடுத்தால்
விழியிமைத்தங்ஙனே தண்ணருளோநாடுவேன்
வேறென்றையொருவர்கொல்லி
னந்நேரமையோவென் முகம்வாடிநிற்பதுவு
மையநின்னருளறியுமே
யானுமெத்தப் பயந்தவனியானென்னை
யாண்டநீகைவிடாதே
யிந்நேரமென்றிலை யுடற்சுமையதாகவு
மெடுத்தாலிறக்கவென்றே
யெங்கெங்குமொருதீர்வை யாயமுண்டாயினு
மிறைஞ்சுசுகராதியான
தொன்னீர்மையாளர்க்கு மானுடம்வகுத்தவரு
டுணையென்றுநம்புகின்றேன்

சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (ரு)

பற்றுவனவற்றிடுநிராசையென்றொருபூமி
பற்றிப்பிடிக்குமியோகப்
பாங்கிற்பிராணலய மென்னுமொருபூமியிவை
பற்றின்மனமறுமென்னவே
கற்றையஞ்சடைமௌனி தானேகனிந்தகனி
கனிவிக்கவந்தகனிபோற்
கண்டதிந்நெறியெனத் திருவுளக்கனிவினொடு
கனிவாய்திறந்துமொன்றைப்
பெற்றவனுமல்லேன் பெருந்தவனுமல்லேன்
யே
பெண்ணீர்மையென்னவிரு கண்ணீரிறைத்துநான்
பேய்போலிருக்கவுலகஞ்
சுற்றிநகைசெய்யவே யலையவிட்டாயெனிற்
சொல்லவினிவாயுமுண்டோ
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (சா

அரும்பொனேமணியே யெனன்பேயெனன்பான
வறிவேயெனறிவினூறு
மானந்தவெள்ளமே யென்றென்றுபாடினே
னாடினேனாடிநாடி
விரும்பியேகூவினே னுளறினேனலறினேன்
மெய்சிலிர்த்திருகைகூப்பி

விண்மாரியெனவெனிரு கண்மாரிபெய்யவே
வேசற்றயர்ந்தேனியா
னிரும்புநேர்நெஞ்சகக் கள்வனைனுமுனை
யிடைவிட்டுநின்றதுண்டோ
வென்றுநீயன்றநா னுன்னடிமையல்லவோ
யாதேனுமறியாவெறுந்
துரும்பனேனென்னினுங் கைவிடுதனீதியோ
தொண்டரொடுகூட்டுகண்டாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (௩)

பாராதியண்டங்க ளத்தனையும்வைக்கின்ற
பரவெளியினுண்மைகாட்டிப்
பற்றுமனவெளிகாட்டி மனவெளியினிற்றேய்ந்த
பாவியேன்பரிசுகாட்டித்
தாராளமாய்நிற்க நிர்ச்சிந்தைகாட்டிச்
சதாகாலநிட்டையெனவே
சகசநிலைகாட்டினை சுகாதீதநிலையந்
தனைக்காட்டநாள்செல்லுமோ
காராரவெண்ணரு மனந்தகோடிகணின்று
காலூன்றிமழைபொழிதல்போற்
கால்வீசிமின்னிப் படர்ந்துபரவெளியெலாங்
கம்மியானந்தவெள்ளஞ்
சோராதுபொழியவே கருணையின்முழங்கியே
தொண்டரைக்கூவுமுகிலே

சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (அ)

பேதித்தசமயமோ வொன்றுசொனபடியொன்று
பேசாதுதுறவாகியே
பேசாதபெரியோர்க ளிருவிகற்பத்திறைற்
பேசார்கள்பரமகுருவாய்ப்
போதிக்குமுக்கணிறை நேர்மையாய்க்கைக்கொண்
போதிப்பதாச்சறிவிலே [டு
போக்குவரவறவின்ப நீக்கமறவசனமாப்
போதிப்பதெவரையனே
சாதித்தசாதனமு மியோகியர்கணமதென்று
சங்கிப்பராதலாலே
தன்னிலேதானுயயர்ந்து விடுவோமெனத்

சோதிக்கமனமாயை தனையேவிளுலடிமை
சுகமாவதெப்படிசொலாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (சு

அண்டமுடிதன்னிலோ பகிரண்டமதனிலோ
வலரிமண்டலநடுவிலோ
வனனடுவிலோவமிர்த மதிநடுவிலோவன்ப
ரகமுருகிமலர்கவித்
தெண்டமிடவருமூர்த்தி நிலையிலோதிக்குத்
திகந்

திகழ்விந்துநாதநிலை தன்னிலோவேதாந்த
சித்தாந்தநிலைதன்னிலோ
கண்டபலபொருளிலோ காணுதநிலையெனக்
கண்டசூனியமதனிலோ
காலமொருமூன்றிலோ பிறவிநிலைதன்னிலோ
கருவிகரணங்களோய்ந்த
தொண்டர்களிடத்திலோ நீவீற்றிருப்பது
தொழும்பனேற்குளவுபுகலாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (க0)

எந்தநாள்கருணைக் குரித்தாகுநாளெனவு
மென்னிதயமெனைவாட்டுதே
யேதென்றுசொல்லுவேன் முன்பின்றெடுபின்மலைவ
றவு மிற்றைவரையாதுபெற்றேன்
பந்தமானதிலிட்ட மெழுகாகியுள்ளம்
பதைத்துப்பதைத்துருகவோ
பரமசுகமாவது பொறுப்பரியதுயரமாய்ப்
பலகாலுமூர்ச்சிப்பதோ
சிந்தையானதுமறிவை யென்னறிவிலறிவான
தெய்வநீயன்றியுளதோ
தேகநிலையல்லவே யுடைகப்பல்கப்பலாய்த்
திரையாழியூடுசெலுமோ
சொந்தமாயாண்டநீ யறியார்கள்போலவே
துன்பத்திலாழ்த்தன்முறையோ

சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (கக)

எந்நாளுமுடலிலே யுயிராமுனைப்போ
லிருக்கவிலையோமனதெனு
மியானுமென்னட்பாம் பிராணனுமெமைச்சடம
தென்றுனைச்சித்தென்றுமே
யந்நாளிலெவனோ பிரித்தானதைக்கேட்ட
வன்றுமுதலின்றுவரையு
மநியாயமாயெமை யடக்கிக்குறுக்கே
யடர்ந்தரசுபண்ணியெங்கண்
முன்னாகநீயென்ன கோட்டைகொண்டாயென்று
மூடமனமிகவுமேச
மூண்டெரியுமனலிட்ட மெழுகாயுளங்கருகன்
முறைமையோபதினுயிரஞ்
சொன்னாலுநின்னருளிரங்கவிலையேயினிச்
சுகம்வருவதெப்படிசொலாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (கஉ

---

## எங்குநிறைகின்றபொருள்.

அவனன்றியோரணுவு மசையாதெனும்பெரிய
வாப்தர்மொழியொன்றுகண்டா
லறிவாவதேதுசில வறியாமையேதிவை
யறிந்தார்களறியார்களார்

மௌனமொடிருந்ததாரென்போலுடம்பெலாம்
வாயாய்ப்பிதற்றுமவராரர்
மனதெனவுமொருமாயை யெங்கேயிருந்துவரும்
வன்மையொடிரக்கமெங்கே
புவனம்படைப்பதென் கர்த்தவியமெவ்விடம்
பூதபேதங்களெவிடம்
பொய்மெயிதமகிதமேல் வருநன்மைதீமையொடு
பொறைபொறாமையுமெவ்விட
மெவர்சிறியரெவர்பெரிய ரெவருறவரெவர்பகைஞ
யாதுமுனையன்றியுண்டோ [ர்
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. (க)

அன்னேயனேயெனுஞ் சிலசமயநின்னையே
யையாவையாவென்னவே
யலறிடுஞ்சிலசமய மல்லாதுபேய்போல
வலறியேயொன்றுமிலவாய்ப்
பின்னேதுமறியாம லொன்றைவிட்டொன்றைப்
பிதற்றிடுஞ்சிலசமயமேற்
பேசரியவொளியென்றும் வெளியென்றுநாதாதி
பிறவுமேநிலயமென்றுந்
தன்னேரிலாததோ ரணுவென்றுமூவிதத்
தன்மையாங்காலமென்றுஞ்
சாற்றிடுஞ்சிலசமய மிவையாகிவேறதாய்ச்
சதாஞானவானந்தமா

யென்னையெனை கருணை விளையாட்டிருந்தவா
றெம்மனோர் புகலவெளிதோ
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. (உ)

வேதமுடனாகம புராணமிதிகாசமுதல்
வேறுமுளகலைகளெல்லா
மிக்காகவத்துவித துவிதமார்க்கத்தையே
விரிவாவெடுத்துரைக்கு
மோதரியதுவிதமே யத்துவிதஞானத்தை
யுண்டுபணுஞானமாகு
மூகமனுபவவசன மூன்றுக்குமொவ்வுமீ
துபயவாதிகள் சம்மத
மாதலினெனக்கினிச் சரியையாதிகள்போது
மியாதொன்றுபாவிக்கநா
னதுவாதலாலுன்னை நானென்றுபாவிக்கி
னத்துவிதமார்க்கமுறலா
மேதுபாவித்திடினு மதுவாகிவந்தருள்செ
யெந்தைநீகுறையுமுண்டோ
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. (ங)

சொல்லானதிற்சற்றும் வராதபிள்ளையைத்
தொட்டில்வைத்தாட்டியாட்டித்
தொடையினைக்கிள்ளல்போற் சங்கற்பமொன்றிற்
றொடுக்குந்தொடுத்தழிக்கும்

பொல்லாதவாதனை யெனுஞ்சத்தபூமியிடை
  போந்துதலைசுற்றியாடும்
புருஷனிலடங்காத பூவைபோற்றானே
  புறம்போந்துசஞ்சரிக்கும்
கல்லோடிரும்புக்கு மிகவன்மைகாட்டிடுங்
  காணாதுகேட்டவெல்லாங்
கண்டதாக்காட்டியே யணுவாச்சுருக்கிடுங்
  கபடநாடகசாலமோ
யெல்லாமும்வலதிந்த மனமாயையேழையா
  மென்னாலடக்கவசமோ
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
  யெங்குநிறைகின்றபொருளே. (௪)

கண்ணாரநீர்மல்கி யுள்ளநெக்குருகாத
  கள்ளனேனானுமோ
கைகுவித்தாடியும் பாடியும்விடாமலே
  கண்பனித்தாரைகாட்டி
யண்ணாபரஞ்சோதி யப்பாவுனக்கடிமை
  யானெனவுமேலெழுந்த
வன்பாகிநாடக நடித்ததோகுறைவில்லை
  யகிலமுஞ்சிறிதறியுமேற்
றண்ணாருநின்னதரு ளறியாததல்லவே
  சற்றேனுமினிதிரங்கிச்
சாசுவதமுத்திநிலை யீதென்றுணர்த்தியே
  சகசநிலைதந்துவேறொன்

றெண்ணமதுள்ளபடி சுகமாயிருக்கவே
நள்செய்கண்டா
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. (ரு)

காகமானதுகோடி கூடுகின்றாலுமொரு
கல்லின்முன்னெதிர்நிற்குமோ
கர்மமானதுகோடி முன்னேசெய்தாலுநின்
கருணைப்ரவாகவருளைத்
தாகமாய்நாடினரை வாதிக்கவல்லதோ
தமியனேற்கருட்டாகமோ
சற்றுமிலையென்பதுவும் வெளியாச்சுவினையெலாஞ்
சங்கேதமாய்க்கூடியே
தேகமானதைமிகவும் வாட்டுதேதுன்பங்கள்
சேராமல்யோகமார்க்க
சித்தியோவரவில்லை சகசநிட்டைக்குமென்
சிந்தைக்கும்வெகுதூரநா
னேகமாய்நின்னோ டிருக்குநாளெந்தநா
ளிந்நாளின்முற்றுறுதோ
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. (சு)

ஒருமைமனதாகியே யல்லலறநின்னருளி
லொருவனுன்வந்திருக்கி
னுலகம்பொருததோ மாயாவிசித்ரமென
வோயுமோவிட மில்லையோ

வருளுடையநின்னன்பர் சங்கைசெய்திடுவரோ
வலதுகிர்த்தியகர்த்தரா
யகிலம்படைத்தெம்மை யாள்கின்றபேர்சில
ரடாதென்பரோவகன்ற
பெருமைபெறுபூரணங் குறையுமோபூதங்கள்
பேய்க்கோலமாய்விதண்டை
பேசுமோவலதுதான் பரிபாககாலம்
பிறக்கவிலையோதொல்லையா
மிருமைசெறிசடவினை யெதிர்த்துவாய்பேசுமோ
வேதுளவுசிறிதுபுகலா
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. (எ)

நில்லாதுதேகமெனு நினைவுண்டுதேகநிலை
நின்றிடவுமௌனியாகி
நேரேயுபாயமொன் றருளினையையோவிதனை
நின்றனுட்டிக்கவென்றாற்
கல்லாதமனமோ வொடுங்கியுபரதிபெறக்
காணவிலையாகையாலே
கையேற்றுணும்புசிப் பொவ்வாதெநாளுமுன்
காட்சியிலிருந்துகொண்டு
வல்லாளராயியம நியமாதிமேற்கொண்ட
மாதவர்க்கேவல்செய்து
மனதின்படிக்கெலாஞ் சித்திபெறலாஞானம்
வாய்க்குமொருமனுவெனக்கிங்

கில்லாமையொன்றினையு மில்லாமையாகவே
　யிப்போதிரங்குகண்டா
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
　யெங்குநிறைகின்றபொருளே. (அ)

மரவுரியுடுத்துமலைவனநெற்கொறித்துமுதிர்
　வனசருகுவாயில்வந்தால்
வன்பசிதவிர்த்துமனல் வெயிலாதிமழையால்
　வருந்தியும்மூலவனலைச்
சிரமளவெழுப்பியு நீரினிடைமூழ்கியுந்
　தேகநமதல்லவென்று
சிற்சுகவபேக்ஷையாய் நின்னன்பர்யோகஞ்
　செலுத்திடரியாம்பாவியேம்
விரவுமறுசுவையினொடு வேண்டுவபுசித்தரையில்
　வேண்டுவவெலாமுடுத்து
மேடைமாளிகையாதி வீட்டினிடைவைகியே
　வேறொருவருத்தமின்றி
யிரவுபகலேழையர்கள் சையோகமாயினே
　மெப்படிபிழைப்பதுரையா
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
　யெங்குநிறைகின்றபொருளே.

முத்தனையமூரலும் பவளவாயின்சொலு
　முகத்திலகுபசுமஞ்சளு
மூர்ச்சிக்கவிரகசன் னதமேற்றவிருகும்ப
　முலையின்மணிமாலைநால

வைத்தெமைமயக்கியிரு கண்வலையைவீசியே
மாயாவிலாசமோக
வாரிதியிலாழ்த்திடும் பாழானசிற்றிடை
மடந்தையர்கள்சிற்றின்பமோ
புத்தமிர்தபோகம் புசித்துவிழியிமையாத
பொன்னாட்டும்வந்ததென்றாற்
போராட்டமல்லவோ பேரின்பமுத்தியிப்
பூமியிலிருந்துகாண
வெத்தனைவிகாதம் வருமென்றுசுகர்சென்றநெறி
யிவ்வுலகமறியாததோ
விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. (க0)

உன்னிலையுமென்னிலையு மொருநிலையெனக்கிடந்
துளறிடுமவத்தையாகி
யுருவுதான்காட்டாத வாணவமுமொளிகண்
டொளிக்கின்றவிருளென்னவே
தன்னிலைமைகாட்டா தொருங்கவிருவினையினாற்
றருவுசுகதுக்கவேலை
தட்டழியமுற்றுமில் லாமாயையதனாற்
றடித்தகிலபேதமான
முன்னிலையொழிந்திட வகண்டிதாகாரமாய்
ப்ப
ம னடுப்பக்கமென்னுமன்
முற்றுமானந்தநிறைவே

யென்னிலைமையாய் கற்கவியல்புகூறருள்வடிவ
மெந்நாளும்வாழிவாழி
யிகபரமிரண்டினிலுமுயிரினுக்குயிராகி
யெங்குநிறைகின்றபொருளே. (கக)

---

## சச்சிதானந்தசிவம்.

பாராதிககனப் பரப்புமுண்டோவென்று
படர்வெளியதாகியெழுநாப்
பரிதிமதிகாணுச் சுயஞ்சோதியாயண்ட
பகிரண்டவுயிரெவைக்கு
நேராகவறிவா யகண்டமாயேகமாய்
நித்தமாய்நிர்த்தொந்தமாய்
நிர்க்குணவிலாசமாய் வாக்குமனமணுகாத
நிர்மலானந்தமயமாய்ப்
பேராதுநிற்றிநீ சும்மாவிருந்துதான்
பேரின்பமெய்திடாமற்
பேய்மனதையண்டியே தாயிலாப்பிள்ளைபோற்
பித்தாகவோமனதைநான்
சாராதபடியறிவி னிருவிகற்பாங்கமாஞ்
சாசுவதநிட்டையருளாய்
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. (க

குடக்கொடுகுணக்காதி திக்கினையுழக்கூடு
கொள்ளல்போலைந்துபூதங்

கூடுஞ்சுருங்கிலைச் சாலேகமென்பது
குலாவுநடைமனையைநாறும்
வடக்கயிறுவெண்ணாரம் பரவென்புதசையினன்
மதவேள்விழாநடத்த
வைக்கின்றகைத்தேரை வெண்ணீர்செந்நீர்கணீர்
மலநீர்புணீரிறைக்கும்
விடக்குத்துருத்தியைக் கருமருந்துக்கூட்டை
வெட்டவெட்டத்தளிர்க்கும்
வேட்கைமரமுறுகின்ற சுடுகாட்டைமுடிவிலே
மெய்போலிருந்துபொய்யாஞ்
சடக்கைச்சடக்கெனச் சதமென்றுசின்மயந்
தானுகிநிற்பதென்றோ
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. (௨)

பாகத்திளுற்கவிதை பாடிப்படிக்கவோ
பத்திநெறியில்லைவேத
பாராயணப்பனுவன் மூவர்செய்பனுவலது
பகரவோவிசையுமில்லை
யோகத்திலேசிறிது முயலவென்முற்றேக
மொவ்வாதிவூண்வெறுத்தா
லுயிர்வெறுத்திடலொக்கு மல்லாதுகிரியைக
ளுபாயத்திஞற்செய்யவோ
மோகத்திலேசிறிது மொழியவிலைமெய்ஞ்ஞான
மோனத்தினிற்கவென்முன்

முற்றுதுபரிபாக சத்திகளனேகநின்
தாகத்திலேவாய்க்கு மமிர்தப்ப்ரவாகமே
தன்னந்தனிப்பெருமையே
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. (௩)

இமையளவுபோதையொரு கற்பகாலம்பண்ணு
மிவ்வுலகமெவ்வுலகமோ
வென்றெண்ணம்வருவிக்கு மாதர்சிற்றின்பமோ
வென்னின்மகமேருவாக்கிச்
சுமையெடுமினென்றுதான் சும்மாடுமாயெமைச்
சுமையாளுமாக்கிநாளுந்
துர்ப்புத்திபண்ணியுள நற்புத்தியாவையுஞ்
சூறையிட்டிந்த்ரஜால
மமையவொருகூத்துஞ் சமைந்தாடுமனமாயை
யம்மம்மவெல்லவெளிதோ
வருள்பெற்றபேர்க்கெலா மொளிபெற்றுநிற்குமீ
தருளோவலாதுமருளோ
சமையநெறிகாணுத சாக்ஷிநீசூக்ஷமமாத்
தமியனேற்குளவுபுகலாய்
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. (ச)

இனியேதெமக்குனருள் வருமோவெனக்கருதி
யேங்குதேநெஞ்சமையோ

வின்றைக்கிருந்தாரை நாளைக்கிருப்பரென்
　றெண்ணவோ திடமில்லையோ
யனியாயமாயிந்த வுடலைநானென்றுவரு
　மந்தகற்காளாகவோ
வாடித்திரிந்துநான் கற்றதுங்கேட்டது
　மவலமாய்ப்போதனன்றோ
கனியேனும்வறியசெங் காயேனுமுதிர்சருகு
　கந்தமூலங்களேனுங்
கனல்வாதைவந்தெய்தி னள்ளிப்புசித்துநான்
　கண்மூடிமௌனியாகித்
தனியேயிருப்பதற் கெண்ணினேனெண்ணமிது
　சாமிநீயறியாததோ
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
　சச்சிதானந்தசிவமே. (ரு)

மத்தமதகரிமுகிற் குலமென்னநின்றிலகு
　வாயிலுடன்மதியகடுதோய்
மாடகூடச்சிகர மொய்த்தசந்திரகாந்த
　மணிமேடையுச்சிமீது
முத்தமிழ்முழக்கமுடன் முத்தநகையார்களொடு
　முத்துமுத்தாய்க்குலாவி
மோகத்திருந்துமென் யோகத்தினிலைநின்று
　மூச்சைப்பிடித்தடைத்துக்
கைத்தலநகைப்படை விரித்தபுலிசிங்கமொடு
　கரடிநுழைநுழைகொண்ட

கானமலையுச்சியிற் குகையூடிருந்துமென்
கரதலாமலகமென்னச்
சத்தமறமோனநிலை பெற்றவர்களுய்வர்காண்
சனகாதிதுணிவதன்றோ
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. (சு

கைத்தலம்விளங்குமொருநெல்லியங்கனியெனக்
கண்டவேதாகமத்தின்
காட்சிபுருஷார்த்தமதின் மாட்சிபெறுமுத்தியது
கருதினனுமானமாதி
யுத்திபலவாறிரு விகற்பமேயில்லையா
லொன்றேயிரண்டென்னவோ
வுரையுமிலைநீயுமிலை நானுமிலையென்பது
முபாயநீயுண்டுநானுஞ்
சித்தமுளனனில்லை யெனும்வசனநீயறிவை
தெரியார்கடெரியவசமோ
செப்புகேவலநீதி யொப்புவமையல்லவே
சின்முத்திராங்கமரபிற்
சத்தமறவெனையாண்ட குருமௌனிகையினூற்
றமியனேற்குதவுபொருளே
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. (எ

காயாதமரமீது கல்லேறுசெல்லுமோ
கடவுணீயாங்களடியேங்

கர்மபந்தத்தினாற் சண்மபந்தம்பெறக்
  கற்பித்ததுன்ன தருளே
வாயாரவுண்டபேர் வாழ்த்துவதுநொந்தபேர்
  வைவதுவுமெங்களுலக
வாய்பாடுநிற்கநின் வைதிகவொழுங்குநினை
  வாழ்த்தினாற்பெறுபேறுதா
னோயாதுபெறுவரென முறையிட்டதாற்பின்ன
  ருளறுவதுகருமமென்று
முபயநெறியீதென்னி னுசிதநெறியெந்தநெறி
  யுலகிலேபிழைபொறுக்குந்
தாயானகருணையு முனக்குண்டெனக்கினிச்
  சஞ்சலங்கெடவருள்செய்வாய்
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
  சச்சிதானந்தசிவமே. (அ)

இன்னம்பிறப்பதற் கிடமென்னினிவ்வுடல
  மிறவாதிருப்பமூலத்
தெழுமங்கியமிர்தொழுகு மதிமண்டலத்தினுற
  வென்னம்மைகுண்டலினிபாற்
பின்னம்பிறக்காது சேயெனவளர்த்திடப்
  பேயேனைநல்கவேண்டும்
பிறவாதநெறியெனக் குண்டென்னினிம்மையே
  பேசுகர்ப்பூரதீப
மின்னும்படிக்ககண் டாகாரவன்னைபால்
  வினையேனையொப்புவித்து

வீட்டுநெறிகூட்டிடுதன் மிகவுநன் றிவையன்றி
விவகாரமுண்டென்னிலோ
தன்னந்தனிச்சிறிய னாற்றிலேன்போற்றிவளர்
சன்மார்க்கமுத்திமுதலே
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. (கூ)

வேதாவையிவ்வணம் விதித்ததேதென்னினுன்
வினைப்பகுதியென்பனந்த
வினைபேசவறியாது நிற்கவினைமனதால்
விளைந்ததான்மனதைநாடிப்
போதமேநிற்குமப் போதத்தைநாடிலோ
போதமுநின்னில்விளக்கம்
பொய்யென்றுதெய்வமறை யாவுமேநீயென்று
போக்குவரவறநிகழ்த்து
மாதாரவாதேய முழுதுநீயாதலா
லகிலமீதென்னையாட்டி
யாடல்கண்டவனுநீ யாடுகின்றவனுநீ
யருளுநீமௌனஞான
தாதாவுநீபெற்ற தாய்தந்தைதாமுநீ
தமருநீயாவுநீகாண்
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. (க0)

கொந்தவிழ்மலர்ச்சோலை நன்னீழல்வைகினுங்
குளிர்தீம்புனற்கையள்ளிக்

கொள்ளுகினுமந்நீ ரிடைத்திளைத்தாடினுங்
குளிர்சந்தவாடைமடவார்
வந்துலவுகின்றதெ தென முன்றிலிடைபுலவவே
வசதிபெறுபோதும்வெள்ளை
வட்டமதிபட்டப் பகற்போலநிலவுதர
மகிழ்போதும்வேலையமுதம்
விந்தைபெறவறுசுவையில் வந்ததெனவமுதுண்ணு
ம் வேளையிலுமாலைகந்தம்
வெள்ளிலையடைக்காய் விரும்பிவேண்டியவண்ணம்
விளையாடிவிழிதுயிலினுஞ்
சந்ததமுநின்னருளை மறவாவரந்தந்து
தமியேனைரக்ஷைபுரிவாய்
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதானந்தசிவமே. (கக)

---

## தேசோமயானந்தம்.

மருமலர்ச்சோலைசெறி நன்னீழன்மலையாதி
மன்னுமுனிவர்க்கேவலாய்
மந்த்ரமாலிகைசொல்லு மியமநியமாதியா
மார்க்கத்தினின்றுகொண்டு
கருமருவுகாயத்தை நிர்மலமதாகவே
கமலாசனத்திசேர்த்துக்
காலைப்பிடித்தனலை யம்மைகுண்டலியடிக்
கலைமதியினூடுதாக்கி

யுருகிவருமமிர்தத்தை யுண்டுண்டுறங்காம
[illegible]
யொன்றோடிரண்டெனாச் சமரசசொரூபசுக
முற்றிடவென்மனதின்வண்ணந்
திருவருண்முடிக்கவித் தேகமொடுகொண்டதோ
தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. (௧)

இப்பிறவியென்னுமோ ரிருட்கடலின்மூழ்கிநா
னென்னுமொருமகரவாய்ப்பட்
டிருவினையெனுந்திரையி னெற்றுண்டுபுற்புத
மெனக்கொங்கைவரிசைகாட்டுந்
துப்பிதழ்மடந்தையர் மயற்சண்டமாருதச்
சுழல்வந்துவந்தடிப்பச்
சோராதவாசையாங் கானாறுவானதி
சுரந்ததெனமேலுமார்ப்பக்
கைப்பரிசுகாரர்போ லறிவானவங்கமும்
கைவிட்டுமதிமயங்கிக்
கள்ளவங்கக்காலர் வருவரென் றஞ்சியே
கண்ணருவிகாட்டுமெளியேன்
செப்பரியமுத்தியாங் கரைசேரவுங்கருணை
செய்வையோசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. (௨)

தந்தைதாய்தமர்தார மகவென்னும்வையெலாஞ்
சந்தையிற்கூட்டமிதிலோ
சந்தேகமில்லைமணி மாடமாளிகைமேடை
சதுரங்கசேனையுடனே
வந்ததோர்வாழ்வுமோ ரிந்த்ரசாலக்கோலம்
வஞ்சனைபொறாமைலோபம்
வைத்தமனமாங்கிருமி சேர்ந்தமலபாண்டமோ
வாஞ்சனையிலாதகனவே
யெந்தநாளுஞ்சரி யெனத்தேர்ந்துதேர்ந்துமே
யிரவுபகலில்லாவிடத்
தேகமாய்நின்றநின் னருள்வெள்ளமீதிலே
யானென்பதறவுமூழ்கிச்
சிந்தைதான்றெளியாது சுழலும்வகையென்கொலோ
தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. (ரு)

ஆடாமலோய்ந்திட்ட பம்பரம்போல்விசை
யடங்கிமனம்வீழுநேரே
யறியாமையாகின்ற விருளகலவிருளொளியு
மல்லாதிருந்தவெளிபோற்
கோடாதெனைக்கண் டெனக்குணிறைசாந்தவெளி
கூடியின்பாதீதமுங்
கூடினேனேசரியை கிரியையின்முயன்றுநெறி
கூடினேனேவல்லனியா

னீடாகவேயாறு வீட்டினினிரம்பியே
    யிலகிவளர்பிராணனென்னு
மிருநிதியினைக்கட்டி யோகபரனாகாம
    லேழைக்குடும்பனாகித்
தேடாதழிக்கவொரு மதிவந்ததென்கொலோ
    தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
    தேசோமயானந்தமே. (ச)

பாடாதுபாடிப் படித்தளவில்சமயமும்
    பஞ்சுபடுசொல்லனிவனைப்
பார்மினோபார்மினோ வென்றுசபைகூடவும்
    பரமார்த்தமிதுவென்னவே
யாடாதுமாடிநெஞ் சுருகிநெக்காடவே
    யமலமேயேகமேயெம்
மாதியேசோதியே யெங்குநிறைகடவுளே
    யரசேயெனக்கூவிநான்
வாடாதுவாடுமென் முகவாட்டமுங்கண்டு
    வாடாவெனக்கருணைநீ
வைத்திடாவண்ணமே சங்கேதமாவிந்த
    வன்மையைவளர்ப்பித்ததார்
தேடாதுதேடுவோர் தேட்டற்றதேட்ட
    தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
    தேசோமயானந்தமே. (ரு

பிறியாததண்ணருட் சிவஞானியாய்வந்து
பேசரியவாசியாலே
பேரின்பவுண்மையை யளித்தனையென்மனதறப்
பேரம்பலக்கடவுளா
யறிவாயிருந்திடு நாதவொலிகாட்டியே
யமுதப்ப்ரவாகசித்தி
யருளினையலாதுதிரு வம்பலமுமாகியெனை
யாண்டனைபினெய்திநெறியாய்க்
குறிதானளித்தனைநன் மரவுரிகொளந்தணக்
கோலமாயசபாநலங்
கூறினபின்மௌனியாய்ச் சும்மாவிருக்கநெறி
கூட்டினையெலாமிருக்கச்
சிறியேன்மயங்கிமிக வறிவின்மையாவனோ
தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. (சு)

ஆராரெனக்கென்ன போதித்துமென்னவென்
னறிவினைமயக்கவசமோ
வண்டகோடியையெலாங் கருப்பவறைபோலவு
மடுக்கடுக்காவமைத்துப்
பேராமனின்றபர வெளியிலேமனவெளி
பிறங்குவதலாதொன்றினும்
பின்னமுறமருவாது நன்னயத்தாலினிப்
பேரின்பமுத்திநிலையுந்

தாராதுதள்ளவும் போகாதுளது
  தள்ளினும்போகேனியான்
றடையேதுமில்லையாண்டவனடிமையென்னுமிரு
  தன்மையிலுமென்வழக்குத்
தீராதுவிடுவதில்லை நடுவானகடவுளே
  [illegible]
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
  தேசோமயானந்தமே. (எ)

கந்துகமதக்கரியை வசமாகநடத்தலாங்
  [illegible]
கட்டலாமொருசிங்க முதுகின்மேற்கொள்ளலாங்
  கட்செவியெடுத்தாட்டலாம்
வெந்தழலினிரதம்வைத் தைந்துலோகத்தையும்
  வேதித்துவிற்றுண்ணலாம்
வேறொருவர்காணாம லுலகத்துலாவலாம்
  விண்ணவரையேவல்கொளலாஞ்
சந்ததமுமிளமையோ டிருக்கலாமற்றொரு
  சரீரத்தினும்புகுதலாஞ்
சலமேனடக்கலாங் கனன்மேலிருக்கலாந்
  தன்னிகரில்சித்திபெறலாஞ்
சிந்தையையடக்கியே சும்மாவிருக்கின்ற
  திறமரிதுசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
  தேசோமயானந்தமே. (அ)

எல்லாமறிந்தவரு மேதுமறியாதவரு
    மில்லையெனுமிவ்வுலகமீ
தேதுமறியாதவ னெனப்பெயர்தரித்துமிக
    வேழைக்குளேழையாகிக்
கல்லாதவறிவிற் கடைப்பட்டநானன்று
    கையிளுலுண்மைஞானங்
கற்பித்தனின்னருளி னுக்கென்னகைம்மாறு
    காட்டுவேன்குற்றேவனா
னல்லார்ந்தமேனியொடு குண்டுகட்பிறையெயிற்
    றுபாசவடிவமான
வந்தகாநீயொரு பகட்டாற்பகட்டுவ
    தடாதடாகாசுரம்பாற்
செல்லாதடாவென்று பேசவாயதுதந்த
    செல்வமேசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
    தேசோமயானந்தமே. (கூ)

மின்போலுமிடையொடியு மொடியுமெனமொழித
    ல்போன் மென்சிலம்பொலிகளார்ப்ப
வீங்கிப்புடைத்துவிழு சுமையன்னகொங்கைமட
    மின்னார்கள்பின்னேவலா
லென்போலலைந்தவர்கள் கற்றூர்கள்கல்லார்க
    ளிருவர்களிலொருவருண்டோ
வென்செய்கேனம்மம்மவென்பாவமென்கொடுமை
    யேதென்றெடுத்துமொழிவே

னன்பால்வியந்துருகி யடியற்றமரமென்ன
வடியிலேவீழ்ந்துவீழ்ந்தெம்
மடிகளேயுமதடிமை யாங்களெனுநால்வருக்
கறமாதிபொருளுரைப்பத்
தென்பாலின்முகமாகி வடவாலிருக்கின்ற
செல்வமேசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. (50)

புத்தமிர்தபோகமுங் கற்பகநனீழலிற்
பொலிவுறவிருக்குமியல்பும்
பொன்னுலகிலயிரா வதத்தேறுவரிசையும்
பூமண்டலாதிக்கமு
மத்தவெறியினர்வேண்டு மாலென்றுதள்ளவுமே
மாலுமொருசுட்டுமறவே
வைக்கின்றவைப்பாளன் மௌனதேசிகனென்ன
வந்தநின்னருள்வாழிகாண்
சுத்தபரிபூரண வகண்டமேயேகமே
சுருதிமுடிவானபொருளே
சொல்லரியவுயிரினிடை யங்கங்குநின்றருள்
சுரந்துபொழிகருணைமுகிலே
சித்திநிலைமுத்திநிலை விளைகின்றபூமியே
தேடரியசத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. (கக

# சிற்சுகோதயவிலாசம்.



காகமோடுகழு கலைகைநாய்நரிகள்
சுற்றுசோறிடுதுருத்தியைக்
காலிரண்டுநவ வாசல்பெற்றுவளர்
காமவேண்டனசாலையை
மோகவாசைமுறி யிட்டபெட்டியைமு
மலமிகுந்தொழுகுகேணியை
மொய்த்துவெங்கிருமி தத்துகும்பியை
முடங்கலார்கிடைசரக்கினை
மாகவிந்த்ரதனு மின்னையொத்திலக
வேதமோதியகுலாலனூர்
வனையவெய்யதடி காரனானயமன்
வந்தடிக்குமொருமட்கமலத்
தேகமானபொய்யை மெய்யெனக்கருதி
யையவையமிசைவாடவோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. (க)

குறிகளோடுகுண மேதுமின்றியன
லொழுகநின்றிடுமிரும்பனற்
கூடலின்றியது வாயிருந்தபடி
கொடியவாணவவறைக்குளே
யறிவதேதுமற வறிவிலாமையய
மாயிருக்குமெனையருளினு
ளளவிலாததனு கரணமாதியை
யளிக்கபோகனையறிந்துநான்

பிறிவிலாதவண நின்றிடாதபடி
பலநிறங்கவருமுபலமாய்ப்
பெரியமாயையி லழுந்திநின்னது
ப்ரசாதநல்லருண்மறந்திடுஞ்
சிறியனேனுமுனை வந்தணைந்துசுக
மாயிருப்பதினியென்றுகாண்
டெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே.

ஐந்துபூதமொரு கானனீரென
வடங்கவந்தபெருவானமே
யாதியந்தநடுவேதுமின்றியரு
ளாய்நிறைந்திலகுசோதியே
தொந்தரூபமுட னரூபமாதிகுறி
குணமிறந்துவளர்வஸ்துவே
துரியமேதுரிய வுயிரினுக்குணர்வு
தோன்றநின்றருள்சுபாவமே
யெந்தநாளுநடு வாகிநின்றொளிரு
மாதியேகருணைநீதியே
யெந்தையேயென விடைந்திடைந்துருகு
மெளியனேன்கவலைதீரவுஞ்
சிந்தையானதை யறிந்துநீயுனருள்
செய்யநாளுமினியுய்வனோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே.

ஐவரென்றபுல வேடர்கொட்டம
 தடங்கமர்க்கடவன்முட்டியா
யடவிநின்றுமலை யருகினின்றுசரு
 காதிநின்றுபனிவெயிலினன்
மெய்வருந்துதவ மில்லைநற்சரியை
 கிரியையோகமெனுமூன்றதாய்
மேவுகின்றசவு பானநன்னெறி
 விரும்பவில்லையுலகத்திலே
பொய்முடங்குதொழில் யாததற்குநல
 சாரதித்தொழிநடத்திடும்
புத்தியூகமறி வற்றமூகமிவை
 பொருளெனக்கருதுமருளன்யான்
றெய்வநல்லருள் படைத்தவன்பரொடு
 சேரவுங்கருணை கூர்வையோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
 சிற்சுகோதயவிலாசமே. (ச)

ஏகமானவுரு வானநீயருளி
 னலனேகவுருவாகியே
யெந்தநாளகில கோடிசிர்ஷ்டிசெய
 விசையநாள்வரையநாண்முத
லாகநாளது வரைக்குமுன்னடிமை
 கூடவேசனனமானதோ
வனந்தமுண்டுநல சனனமீதிதனு
 ளறியவேண்டுவனவறியலா

மோகமாதிதரு பாசமானதை
யறிந்துவிட்டுனையுமெனையுமே
முழுதுணர்ந்துபர மானவின்பவெள
மூழ்கவேண்டுமிதுவின்றியே
தேகமேநழுவி நானுமோநழுவின்
பின்னையுய்யும்வகையுள்ளதோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. (ரு)

நியமலட்சணமு மியமலக்ஷணமு
மாசனுதிவிதபேதமு
நெடிதுணர்ந்திதய பத்மபீடமிசை
நின்றிலங்குமசபானலத்
தியலறிந்துவளர் மூலகுண்டலியை
யினிதிறைஞ்சியவளருளினு
லெல்லையற்றுவளர் சோதிமூலவன
லெங்கண்மோன மனுமுறையிலே
வயமிகுந்துவரு மமிர்தமண்டல
மதிக்குளேமதியைவைத்துநான்
வாய்மடுத்தமிர்த வாரியைப்பருகி
மன்னுமாரமிர்தவடிவமாய்ச்
செயமிகுந்துவரு சித்தயோகநிலை
பெற்றுஞானநெறியடைவனே
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. (சா)

ஏறிதிரைக்கடலினி கர்த்தசெல்வமிக
வல்லனென்றொருவர்பின்செலா
தில்லையென்னுமுரை பேசிடாதுலகி
லெவருமாமெனமதிக்கவே
நெறியின்வைகிவளர் செல்வமும்முதவி
நோய்களற்றசுகவாழ்க்கையாய்
நியமமாதிநிலை நின்றுஞானநெறி
நிட்டைகூடவுமெந்நாளுமே
யறிவினின்றுகுரு வாயுணர்த்தியது
மன்றிமோனகுருவாகியே
யகிலமீதுவர வந்தசீரருளை
யையவையவினியென்சொல்கேன்
சிறியனேழைநம தடிமையென்றுனது
திருவுளத்தினிலிருந்ததோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. (எ)

எவ்வுயிர்த்திரளு முலகிலென்னுயி
ரெனக்குழைந்துருகிநன்மையா
யிதமுரைப்பவென தென்றயாவையு
மெடுத்தெரிந்துமதயானைபோற்
கவ்வையற்றநடை பயிலவன்பரடி
கண்டதேவருளின்வடிவமாக்
கண்டயாவையு மகண்டமென்னவிரு
கைகுவித்துமலர்தூவியே

பவ்வவெண்டிரை கொழித்ததண்டரளம்
விழியுதிர்ப்பமொழிகுளறியே
பாடியாடியு ளுடைந்துடைந்தெழுது
பாவையொத்தசைதலின்றியே
திவ்யவன்புருவ மாகியன்பரொடு
மின்பவீட்டினிலிருப்பனோ
தெரிவதற்கரியபிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே.

மத்தர்பேயரொடு பாலர்தன்மையது
மருவியே துரியவடிவமாய்
மன்னுதேசமொடு காலமாதியை
மறந்துநின்னடியரடியிலே
பத்தியாய்நெடிது நம்புமென்னையொரு
மையறந்தகிலமாயையைப்
பாருபாரென நடத்தவந்ததென
பாரதத்தினுமிதுள்ளதோ
சுத்தநித்தவியல் பாகுமோவுனது
விசுவமாயைநடுவாகவே
சொல்லவேண்டும்வகை நல்லகாதிகதை
சொல்லுமாயையினுமில்லையென்
சித்தமிப்படி மயங்குமோவருளை
நம்பினோர்கள்பெறுபேறிதோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே.

பன்முகச்சமய நெறிபடைத்தவரு
மியாங்களேகடவுளென்றிடும்
பாதகத்தவரும் வாததர்க்கமிடு
படிறருந்தலைவணங்கிடத்
தன்முகத்திலுயிர் வரவழைக்குமெம
தருமனும்பகடுமேய்க்கியாய்த்
தனியிருப்பவட நீழலூடுவளர்
சனகனாதிமுனிவோர்கடஞ்
சொன்மயக்கமது தீரவங்கைகொடு
மோனஞானமதுணர்த்தியே
சுத்தநித்தவரு ளியல்பதாகவுள
சோமசேகரகிர்பாளுவாய்த்
தென்முகத்தின்முக மாயிருந்தகொலு
வெம்முகத்திலும்வணங்குவேன்
றெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. (க0)

## ஆகாரபுவனம்.

### சிதம்பரரகசியம்.

ஆகாரபுவனமின்பாகாரமாக
வங்ஙனேயொருமொழியாலகண்டாகார
மே
குறுதுணையேயென்னளவுமுகந்தநட்பே
வாகாரும்படிக்கிசைகிண்கிணிவாயென்ன
மலர்ந்தமலரிடைவாசம்வயங்குமாபோற்

றேகாதியுலகமெங்குங்கலந்துதானே
திகழனந்தானந்தமயத்தெய்வக்குன்றே. (க)

அனந்தபதவுயிர்கடோறுமுயிராயென்று
மானந்தநிலையாகியளவைக்கெட்டாத்
தனந்தனிச்சின்மாத்திரமாய்க்கீழ்மேல்காட்டாச்
சதசத்தாயருட்கோயிற்றழைத்ததேவே
யினம்பிரிந்தமான்போனிடையாவண்ண
மின்பமுறவன்பர்பக்கலிருத்திவைத்துக்
கனந்தருமாகனமேதண்ணருளிற்றனே
கனிபலித்தவானந்தக்கட்டிப்பேறே. (௨)

பேறனைத்துமணுவெனவேயுதறித்தள்ளப்
பேரின்பமாகவந்தபெருக்கேபேசா
வீறனைத்துமிங்கெறிக்கேயென்னவென்னை
மேவென்றவரத்தேபாழ்வெய்யமாயைக்
கூறனைத்துங்கடந்தவெல்லைச்சேடமாகிக்
குறைவறநின்றிடுநிறைவேகுலவாநின்ற
வாறனைத்தும்புகுங்கடல்போற்சமயகோடி
யத்தனையுந்தொடர்ந்துபுகுமாநிட்டே. (௩

ஆதியந்தமெனுமழுவாயீறற்றோங்கி
யருமறையின்னமுங்காணாதாற்றநாண
பெதமதங்களுமலையமலைபோல்வாதப்
பேற்றியரும்வாய்வாதப்பேயராகச்

சாதகமோனத்திலென்னவடவாறீழற்
றண்ணருட்சந்திரமௌலிதடக்கைக்கேற்க
வேதகசின்மாத்திரமாயெம்மனோர்க்கும்
வெளியாகவந்தவொன்றேவிமலவாழ்வே. (ச)

விமலமுதற்குணமாகிநூற்றெட்டாதி
வேதமெடுத்தெடுத்துரைத்தவிருத்திற்கேற்க
வமையுமிலக்கணவடிவாயதுவும்போதா
தப்பாலுக்கப்பாலாயருட்கண்ணாகிச்
சமமுமுடன்கலப்புமவிழ்தலுமியாங்காணத்
தண்ணருடங்தெமைக்காக்குஞ்சாக்ஷிப்பேறே
யிமையளவுமுபகாரமல்லால்வேறொன்
றியக்காநிர்க்குணக்கடலாயிருந்தவொன்றே. ()

ஒன்றாகிப்பலவாகிப்பலவாக்கண்ட
வொளியாகிவெளியாகியுருவுமாகி
நன்றாகித்தீதாகிமற்றுமாகி
நாசமுடனுற்பத்திநண்ணாதாகி
யின்றாகிநாளையுமாய்மேலுமான
வெந்தையேயெம்மானேயென்றென்றேங்கிக்
கன்றாகிக்கதறினர்க்குச்சேதாவாகிக்
கடிதினில்வந்தருள்கூருங்கருணைவிண்ணே. ()

அருள்பழுத்தபழச்சுவையேகரும்பேதேனே
யாரமிர்தேயென்கண்ணேயரியவான

பொருளனைத்துந்தரும்பொருளே கருணைநீங்காப்
பூரணமாய்நின்றவொன்றேபுனிதவாழ்வே
கருதரியகருத்ததனுட்கருத்தாய்மேவிக்
காலமுந்தேசமும்வகுத்துக்கருவியாதி
விரிவினையுங்கூட்டியுயிர்த்திரளையாட்டும்
விழுப்பொருளே யான்சொலும்விண்ணப்பங்கே
[ளே. (எ)

விண்ணவரிந்திரன்முதலோர்நாரதாதி
விளங்குசப்தரிஷிகள்கனவீணைவல்லோ
ரெண்ணரியசித்தர்ம...
ரிருக்காதிமறைமுனிவரெல்லாமிந்தக்
கண்ணகன்ஞாலம்மதிக்கத்தானேயுள்ளங்
கையினெல்லிக்கனிபோலக்காட்சியாகத்
திண்ணியநல்லறிவாலிச்சமயத்தன்றோ
செப்பரியசித்திமுத்திசேர்ந்தாரென்றும். (அ)

செப்பரியசமயநெறியெல்லாந்தன்றன்
றெய்வமேதெய்வமெனுஞ்செயற்கையான
வப்பரிசாளருமஃதேபிடித்தாலிப்பா
லடுத்ததந்நூல்களும்விரித்தேயனுமானாதி
யொப்பவிரித்துரைப்பரிங்ஙன்பொய்மெய்யென்ன
வொன்றிலையொன்றெனப்பார்ப்பதெவ்வாதார்
மிப்பரிசாஞ்சமயமுமாயல்லவாகி [க்கு
யாதுசமயமும்வணங்குமியல்பதாகி. (கூ

இயல்பென்றுந்திரியாமலியமமாதி
யென்குணமுங்காட்டியன்பாலின்பமாகிப்
பயனருளப்பொருள்கள்பரிவாரமாகிப்
பண்புறவுஞ்சௌபானபக்ஷங்காட்டி
மயலறுமந்திரஞ்சிகைக்ஷசோதிடாதி
மற்றங்கநூல்வணங்கமௌனமோலி
யயர்வறச்சென்னியில்வைத்துராசாங்கத்தி
லமர்ந்ததுவைதிகசைவமழகிதந்தோ. (க0)

அந்தோவீததிசயமிச்சமயம்போலின்
றறிஞரெல்லாநவெறியவணிமாவாதி
வந்தாடித்திரிபவர்க்கும்பேசாமோனம்
வைத்திருந்தமாதவர்க்குமற்றுமற்று
மிந்த்ராதிபோகநலம்பெற்றபேர்க்கு
மிதுவன்றித்தாயகம்வேறில்லையில்லை
சந்தானகற்பகம்போலருளைக்காட்டத்
தக்கநெறியிந்நெறியேதான்சன்மார்க்கம். (கக)

சன்மார்க்கஞானமதின்பொருளும்வீறு
சமயசங்கேதப்பொருளுந்தானென்றாகப்
பன்மார்க்கநெறியினிலுங்கண்டதில்லை
பகர்வரியதில்லைமன்றுட்பார்த்தபோதங்
கென்மார்க்கமிருக்குதெல்லாம்வெளியேயென்ன
வெச்சமயத்தவர்களும்வந்திறைஞ்சாநிற்பர்
கன்மார்க்கநெஞ்சமுளவெனக்குந்தானே
கண்டவுடனானந்தங்காண்டலாகும். (கஉ)

காண்டல்பெறப்புறத்தினுள்ளபடியேயுள்ளுங்
காட்சிமெய்ந்நூல்சொலும்பதியாங்கடவுளேநீ
நீண்டநெடுமையுமகலக்குறுக்குங்காட்டா
நிறைபரிபூரணவறிவாய்நித்தமாகி
வேண்டுவிருப்பொடுவெறுப்புச்சமீபந்தூரம்
விலகலணுகுதன்முதலாம்விவகாரங்கள்
பூண்டவளவைகண்மனவாக்காதியெல்லாம்
பொருந்தாமலகம்புறமும்புணர்க்கையாகி. (கரு)

ஆகியசற்காரியவூகத்துக்கேற்ற
வமலமாய்நடுவாகியனந்தசத்தி
யோகமுறுமானந்தமயமதாகி
யுயிர்க்குயிராயெந்நாளுமோங்காநிற்ப
மோகவிருண்மாயைவினையுயிர்கட்கெல்லா
மொய்த்ததெதன்கொலுபகாரமுயற்சியாகப்
பாகமிகவருளவொருசத்திவந்து [கொல்.
பதிந்ததெதன்கொனெனுமப்பான்மையென்

நானெனுமோரகந்தையெவர்க்கும்வந்து
நவிந்தவுடன்சகமாயைநாலுவாகித்
தான்வந்துதொடருமித்தால்வளருந்துன்பச்
சாகரத்தின்பெருமையெவர்சாற்றவல்லா
ரூனென்றுமுடலென்றுங்கரணமென்று
முள்ளென்றும்புறமென்றுமொழியாநின்ற
வானென்றுங்காலென்றுந்தீநீரென்று
மண்ணென்றுமலையென்றும்வனமதென்றும்.

மலைமலையாங்காட்சிகண்காணுமையாதி
மறப்பென்றுநினைப்பென்றுமாயாவாரி
யலையலையாயடிக்குமின்பதுன்பமென்று
மதைவிளைக்கும்வினைகளென்றுமதனைத்தீர்க்கத்
தலைபலவாஞ்சமயமென்றுந்தெய்வமென்றுஞ்
சாதகரென்றும்மதற்குச்சாட்சியாகக்
கலைபலவாநெறியென்றுந்தர்க்கமென்றுங்
கடலுறுநுண்மணலெண்ணிக்காணும்போதும்.

காணரியவல்லலெல்லாந்தானேகட்டுக்
கட்டாகவிளையுமதைக்கட்டோடேதான்
வீணிநிற்கர்ப்பூரமலைபடுதீப்பட்ட
விந்தையெனக்காணவொருவிவேகங்காட்ட
வூணுறக்கமின்பதுன்பம்பேருராதி
யொவ்விடவுமெனைப்போலவுருவங்காட்டிக்
கோணறவோர்மான்காட்டிமானையீர்க்குங்
கொள்கையெனவருண்மௌனகுருவாய்வந்து.

வந்தெனுடல்பொருளாவிமூன்றுந்தன்கை
வசமெனவேயத்துவாமார்க்கநோக்கி
யைந்துபுலனைம்பூதங்கரணமாதி
யடுத்தகுணமத்தனையுமல்லையல்லை
யிந்தவுடலறிவறியாமையுநீயல்லை
யாதொன்றுபற்றினிதனியல்பாய்நின்று
பந்தமறும்பளிங்கனையசித்துநீயுன்
பக்குவங்கண்டறிவிக்கும்பான்மையேம்யாம்.

அறிவாகியானந்தமயமாயென்று
மழியாதநிலையாகியதின்பாலும்
பிறியாமற்றண்ணருளேகோயிலான
பெரியபரம்பதியதனைப்பெறவேவேண்டி
னெறியாகக்கூறுவன்கேளெந்தநாளு
நிர்க்குணநிற்குளம்வாய்த்துநீடுவாழ்க
செறிவானவறியாமையெல்லாநீங்க
சிற்சுகம்பெற்றிடுகபந்தந்தீர்கவென்றே. (கக)

பந்தமறுமெய்ஞ்ஞானமானமோனப்
பண்பொன்றையருளியந்தப்பண்புக்கேதான்
சிந்தையில்லைநானென்னும்பான்மையில்லை
தேசமில்லைகாலமில்லைதிக்குமில்லை
தொந்தமில்லைநீக்கமில்லைபிரிவுமில்லை
சொல்லுமில்லையிராப்பகலாந்தோற்றமில்லை
யந்தமில்லையாதியில்லைநடுவுமில்லை
யகமுமில்லைபுறமுமில்லையனைத்துமில்லை. (உ௦)

இல்லையில்லையென்னினென்றுமில்லாதல்ல
வியல்பாகியென்றுமுள்ளவியற்கையாகிச்
சொல்லரியதன்மையதாயான்றானென்னத்
தோன்றுமெல்லாம்விழுங்குஞ்சொரூபமாகி
யல்லையுண்டபகல்போலவவித்தையெல்லா
மடையவுண்டுதடையறவுன்னறிவைத்தானே
வெல்லவுண்டிங்குன்னையுந்தானாகக்கொண்டு
வேதகமாய்ப்பேசாமைவிளக்குந்தானே. (உக)

தானான தன்மயமேயல்லாலொன்றைத்
தலையெடுக்கவொட்டாது தலைப்பட்டாங்கே
போனாலுங்கர்ப்பூரதீபம்போலப்
போயொளிப்பதல்லாதுபுலம்வேறின்று
ஞானாகாரத்தினொடுஞேயமற்ற
ஞாதுருவுநழுவாமனழுவிநிற்கு
மானாலுமிதன்பெருமையெவர்க்கார்சொல்வா
ரதுவானலதுவாவரதுவேசொல்லும். (உஉ)

அதுவென்றாலெதுவெனவொன் றடுக்குஞ்சங்கை
யாதலினாலதுவெனவுமறவேவிட்டு
மதுவுண்டவண்டெனவுஞ்சனகனாதி
மன்னவர்கள்சுகர்முதலோர் வாழ்ந்தாரென்றும்
பதியிந்தநிலையெனவுமென்னையாண்ட
படிக்குநிருவிகற்பத்தாற்பரமானந்த
கதிகண்டுகொள்ளவுநின்னருள்கூரிந்தக்
கதியன்றியுறங்கேன்மேற்கருமம்பாரேன். (உ௩)

பாராதிவிண்ணனைத்துநீயாச்சிந்தை
பரியமடலாவெழுதிப்பார்த்துப்பார்த்து
வாராயோவென்ப்ராணநாதாவென்பேன்
வளைத்துவளைத்தெனைநீயாவைத்துக்கொண்டு
பூராயமாமேலொன்றறியாவண்ணம்
புண்ணளர்போனெஞ்சம்பலம்பியள்ளே

நீராளமாயுருகிக்கண்ணீர்சோர [ன்.
நெட்டுயிர்த்துமெய்ம்மறந்தோர் நிலையாய்நிற்பே

ஆயுமறிவாகியுன்னைப்பிரியாவண்ண
மணைந்துசுகம்பெற்றவன்பரையோவென்னத்
தீயகொலைச்சமயத்துஞ்செல்லச்சிந்தை
தெளிந்திடவுஞ்சமாதானஞ் செய்வேன்வாழ்வா
காயிலைபுன்சருகாதியருந்தக்கானங்
கடன்மலையெங்கேயெனவுங்கவலையாவேன்
வாயில்கும்பம்போற்கிடந்துபுரள்வேன்வானின்
மதிகதிரைமுன்னிலையாவைத்துநேரே. (உரு)

நேரேதானிரவுபகல்கோடாவண்ண
நித்தம்வரவுங்களையிந்நிலைக்கேவைத்தா
ராரேயங்கவர்பெருமையென்னேயென்பே
னடிக்கின்றகாற்றேநீயாராலேதான்
பேராதேசுழல்கின்றாயென்பேன்வந்து
பெய்கின்றமுகில்காளெம் பெருமானும்போற்
றாராளமாக்கருணைபொழியச்செய்யுஞ்
சாதகமென்னேகருதிச்சாற்றுமென்பேன்.(உசு)

கருதரியவிண்ணேநீயெங்குமாகிக்
கலந்தனையேயுன்முடிவின் காட்சியாக
வருபொருளெப்படியிருக்குஞ்சொல்லாயென்பேன்
மண்ணேயுன்முடிவிலெதுவயங்குமாங்கே

துரியவறிவுடைச்சேடனீற்றினுண்மை
சொல்லாரோசொல்லென்பேன்சுருதியேநீ
யொருவரைப்போலவனைவருக்குமுண்மையாமுன்
னுரையன்றேவுன்முடிவையுரைநீயென்பேன்.

உரையிறந்துபெருமைபெற்றுத்திரைக்கைநீட்டி
யொலிக்கின்றகடலேயிவ்வுலகஞ்சூழக்
கரையுமின்றியுன்னைவைத்தாரியாரேயென்பேன்
கானகத்திற்பைங்கிளிகாள்கமலமேவும்
வரிசிறைவண்டினங்காளோதிமங்காடுது
மார்க்கமன்றோநீங்களிதுவரையிலேயும்
பெரியபரிபூரணமாம்பொருளைக்கண்டு
பேசியதுண்டோவொருகாற்பேசுமென்பேன்.

ஒருவனவன்யானைகெடக்குடத்துட்செங்கை
யோட்டுதல்போலுன்பேதை யுப்போடப்பை
மருவவிட்டுங்கர்ப்பூரமதனிற்றீபம்
வயங்கவிட்டுமைக்கியமுன்னிவருந்திறிற்பே
னருளுடையபரமென்றேவன்றுதானே
யானுளனென்றும்மெனக்கேயாணவாதி
பெருகுவினைக்கட்டென்றுமென்னுற்கட்டிப்
பேசியதன்றேயருளுனால்பேசிற்றன்றே. (உ௧)

அன்றுமுதலின்றவரைச்சனனகோடி
யடைந்தடைந்திங்கியாதனையாலழிந்ததல்லா

லின்றைவரைமுத்தியின்றேயெடுத்ததேக
  மெப்போதேதெரியாதேயிப்போதேதான்
றுன்றுமனக்கவலைகெடப்புலைநாயேனைத்
  தொழும்புகொளச்சீகாழித்துரையேதூது
சென்றிடவேபொருளைவைத்தநாவலோய்நஞ்
  சிவனப்பாவென்றவருட்செல்வத்தேவே. (௯0)

தேவர்தொழும்வாதவூர்த்தேவேயென்பேன்
  திருமூலத்தேவேயிச்சகத்தோர்முத்திக்
காவலுறச்சிவவென்வாக்குடனேவந்த
  வரசேசும்மாவிருந்துன்னருளைச்சாரப்
பூவுலகில்வளரருணைகிரியேமற்றைப் [லா
  புண்ணியர்காளோவென்பேன் புரையொன்றில்
வோவியம்போலசைவறவுந்தானேநிற்பே
  ஞைதரியதுயர்கெடவேயுரைக்குமுன்னே.(௯க)

ஓதரியசுகர்போலவேனோனென்ன
  வொருவநிலையோவெனவுமுரைப்பேன்முனே
பேதமபேதங்கெடவுமொருபேசாமை
  பிறவாதோவாலடியிற்பெரியமோன
நாதனொருதரமூலகம்பார்க்கவிச்சை
  நண்ணுஞேவென்றென்றேநாணுவாகிக்
காதன்மிகுமணியமைழயாரெனவாடுற்றேன்
  கருத்தறிந்துபுரப்பதுன்மேற்கடன்முக்காலும்.

காலமொடுதேசவர்த்தமானமாதி
கலந்துநின்றநிலைவாழிகருணைவாழி
மாலறவுஞ்சைவமுதன்மதங்களாகி
மதாதீதமானவருண்மரபுவாழி
சாலமிகுமெளியேனிவ்வழக்குப்பேசத்
தயவுவைத்துவளர்த்தவருட்டன்மைவாழி
யாலடியிற்பரமகுருவாழிவாழி
யகண்டிதாகாரவருளடியார்வாழி. (௩௩)

---

## தேன்முகம்.

தேன்முகம் பிலுற்றும் பைந்தாட் செய்யபங்க யத்தின் மேவு, நான்முகத் தேவேநின்ற ருட்டிய வகில மாயை, கான்முயற் கொம்பே யென்கோகா னலம் புனலேயென்கோ, வான்முகமுளறி யென் கோ மற்றென்கோ விளம்பல் வேண்டும். (௧)

வேண்டுவ படைத்தாய் நுந்தை விதிப்படிபுரந் தானத்தைக், காண்டகவழித்தான் முக்கட்கடவு டா னினையவாற்ற, லாண்டவ னெவனோ வென்ன வறிகிலா தகிலநீயே, யீண்டியவல்லறீர வெம்மனோ ர்க் கியம்பு கண்டாய். (உ)

கண்டன வல்லவென்றே கழித்திடுமிறுதிக்கண் ணே கொண்டது பரமானந்தக் கோதிலா முத்தி யத்தாற், பண்டையிற் படைப்புங் காப்பும் பறந்

தன மாயை யோடே, வெண்டலை விழிகை காலில்
விளங்கிட நின்றான் யாவன். (௩)

விளங்கவெண் ணீறு பூசி விரிசடைக் கங்கை
தாங்கித், துளங்குநன் னுதற்கண்டோன்றச் சுழல்
வளி நெடுமூச் சாகக், களங்கமி லுருவந்தானேகக
னமாயப் பொலியப்பூமி, வளர்ந்ததா லென்ன
வுள்ள மன்றெனை மறையொன்றின்றி. (௪)

மறைமுழக் கொலிப்பத் தானே வரதமோடப
யக் கைகண், முறைமையி னோங்க நாத முரசென
க்கறங்க வெங்கும், குறைவிலா வணநிறைந்துகோ
திலா நடனஞ்செய்வா, னிறையவனெனலா மியார்
க்கு மிதயசம் மதமீதல்லால். (௫)

அல்லலாந் தொழில் படைத்தே யடிக்கடி யுரு
வெடுத்தே, மல்லன்மா ஞாலங் காக்க வருபவர்
கடவு ளென்னிற், றொல்லையாம் பிறவிவேலை தொ
லைந்திடா திருணீங் காது, நல்லது மாயை தானுநா
னென வந்து நிற்கும். (௬)

நானென நிற்குஞான ஞானமன் றந்த ஞான,
மோனமா யிருக்க வொட்டா மோனமின் றாகவே
தான், றேனென ருசிக்கு மன்பாற் சிந்தை நைந்
துருகும் வண்ணம், வானென நிறைந்தா னந்தமா
கடல் வளைவ தின்றே. (௭)

இன்றெனை விருப்போ மென்னி னென்றுஞ்
சூனியமா முத்தி, நன்றொடு தீதுமன்றிநாமுன்னே
பெறும வித்தை, நின்றது பெத்தந் தானே நிரந்த
ரமுத்தி யென்னி, னென்றொரு வரைநான் கேட்க
வுணர்வில்லை குருவு மில்லை. (அ)

இல்லையென் றிடினிப்பூமி யிருந்தவா றிருப்போ
மென்னி, னல்லமன் சாரு வாக ஞன்சொலு நெ
றிக்குவீணிற், றொல்லையேனுகமாதிதொடுப்பதேன்
மயக்க மேதிங், கொல்லைவந்திருமி னென்ன வுறவு
செய் திடுவனந்தோ. (கூ)

அந்தணர் நால்வர்காண வருட்குரு வாகிவந்த,
வெந்தையே யெல்லாந் தானென் றியம்பின னெ
மைப் படைத்த, தந்தைநீ யெம்மைக் காக்குந்தலை
வனே நுந்தை யன்றோ, பந்தமில் சித்தி முத்தி
படைக்கநின் னருள்பா லிப்பாய். (க0)

## பன்மாலை

பன்மாலைத்திரளிருக்கத் தமையுணர்ந்தோர்
பாமாலைக்கேநீதான்பக்ஷமென்று
நன்மாலையாவெடுத்துச்சொன்னார்நல்லோர்
நலமறிந்துகல்லாதநானுஞ்சொன்னேன்
சொன்மாலைமாலையாக்கண்ணீர்சோரத்
தொண்டனேனெந்நாளுந்துதித்துநிற்பே

னென்மாலையறிந்திங்கேவாவாவென்றே
யெனைக்கலப்பாய்திருக்கருணையெம்பிரானே.

கருணைமொழிசிறிதில்லேனீதலில்லேன்
கண்ணீர்கம்பலையென்றன்கருத்துக்கேற்க
வொருபொழுதும்பெற்றறியேனென்னையாளு
மொருவாவுன்னடிமைநானொருத்தனுக்கோ
விருவினையுமுக்குணமுங்கரணநான்கு
மிடர்செயுமைப்புலனுங்காமாதியாறும்
வரவரவுமேழைக்கோரட்டதான
மதத்தொடும்வந்தெதிர்த்தநவவடிவமென்றே.

வடிவனைத்துந்தந்தவடிவில்லாச்சுத்த
வான்பொருளேயெளியனேன்மனமாமாயைக்
குடிகெடுக்கத்துசங்கட்டிக்கொண்டமோன
குருவேயென்றெய்வமேகோதிலாத
படியெனக்கானந்தவெள்ளம்வந்துதேக்கும்
படியெனக்குன்றிருக்கருணைபற்றுமாறே
யடியெடுத்தென்முடியிலின்னம்வைக்கவேண்டு
மடிமுடியொன்றில்லாதவகண்டவாழ்வே.

வாழ்வனைத்துமயக்கமெனத் தேர்ந்தேன்றேர்ந்த
வாறேநானப்பாலோர்வழிபாராமற்
றாழ்வுபெற்றிங்கிருந்தேனீதென்னமாயந்
தடையுற்றுன்மேற்கதியுந்தடையதாமே

ஊழ்வலியோவல்லதுன்றன்றிருக்கூத்தோவிங்
கொருதமியேன்மேற்குறையோ வுணர்த்தாயி
ன்னம்
பாழவதிப்படவெனக்குமுடியாதெல்லாம்
படைத்தளித்துத்துடைக்கவல்லபரிசினானே.

நானானிங்கெனுமகந்தையெனக்கேன்வைத்தாய்
நல்வினைதீவினையெனவேநடுவேநாட்டி
ஊனாருமுடற்சுமையென்மீதேன்வைத்தா [தா
யுயிரெனவுமென்னையொன்றாயுள்ளேன்வைத்
யானாமையாயகிலநிகிலபேத
மனைத்திருள்ளுந்தானாகியறிவானந்தத்
தேனாகிப்பாலாகிக்கனியாய்க்கன்னற் [ன்றே.
செழும்பாகாய்க் கற்கண்டாய்த் திகழ்ந்தவொ

ஒன்றியொன்றிநின்றுநின்றுமென்னையென்னை
யுன்னியுன்னும்பொருளைநீயுன்பாலன்பா
னின்றதன்மைக்கிரங்கும்வைராக்கியனல்லே
னிவர்த்தியவைவேண்டுமிந்தநீலனுக்கே
யென்றுமென்றுமிந்நெறியோர்குணமுமில்லை
யிடுக்குவார்கைப்பிள்ளையேதோவேதோ
கன்றுமனத்துடனாடுதழைதின்றாற்போற்
கல்வியுங்கேள்வியுமாகிக்கலக்குற்றேனே. (௬)

உற்றதுணைநீயல்லாற்பற்றுவேறொன்
றுன்னேன்பன்னூலகத்தோடியாடிக்

கறறதுங்கடடதும்தனுகம்கதுவாகுங
கற்பதுங்கேட்பதுமமையுங்காணுநீத
நற்றுணையேயருட்டாயேயின்பமான
நாதாந்தபரம்பொருளேநாரணாதி
சுற்றமுமாய்நல்லன்பர்தமைச்சேயாகத் [றே.
தொழும்புகொள்ளுங் கருணைமேசோதிக்குன்

குன்றாதழுவுருவாயருவாய்ஞானக்
கொழுந்தாகியறுசமயக்கூத்துமாடி
நின்றாயேமாயையெனுந்திரையைநீக்கி
நின்னையாரறியவல்லார்நினைப்போர்நெஞ்ச
மன்றாகவின்பக்கூத்தாடவல்ல
மணியேயென்கண்ணேமாமருந்தேநால்வர்க்
கன்றாலின்கீழிருந்துமோனஞான
மமைத்தசின்முத்திரைக்கடலேயமரரேறே.
திரையில்லாக்கடல்போலச்சலனந்தீர்ந்து [லாங
தெளிந்துருகும்பொன்போலச் செகத்தையெல்

கரையவேகனிந்துருக்குமுகத்திலேநீ
கனிந்தபரமானந்தக்கட்டியிந்நாள்
வரையிலேவரக்காணனென்றாற்கட்டி
வார்த்தைசொன்னாற்சுகம்வருமோவஞ்சனே
யிரையிலேயிருத்திநிருவிகற்பமான
வின்பநிட்டைகொடுப்பதையா வெந்தநாளோ

எந்தநாளுனக்கடிமையானநாளோ
வெந்நாளோகதிவருநாளெளியனேன்றன்
சிந்தைநாளதுவரைக்குமயங்கிற்றல்லாற்
றெளிந்ததுண்டோ மௌனியாய்த் தெளிய
வோர்சொற்

றந்தநாண்முதலின்பக்கால்சற்றல்லாற்
றடையறவானந்தவெள்ளந்தானேபொங்கி
வந்தநாளில்லைமெத்தவலைந்தேனுன்னை
மறவாவின்பத்தாலேவாழ்கின்றேனே. (௧0)

## நினைவொன்று.

ஞானிகளிடம்பொருளேவல்.

நினைவொன்று நினையாம னிற்கினக மென்பார்
நிற்குமிட மேயருளா நிட்டையரு ளொட்டுந்,
தனையென்று மறந்திருப்ப வருள்வடிவா னதுமேற்
றட்டியெழுந் திருக்குமின்பந் தன்மயமே யதுவாம்,
பினையொன்று மிலையந்த வின்பமெனி நிலையம்பெற்
றாரே பிறவாமை பெற்றார்மற் றுந்தான், மனையென்
று மகவென்றுஞ் சுற்றமென்று மசுத்த வாதனையா
மாசையொழி மன்னொரு சொற்கொண்டே. (௧)

ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கு
மந்த வொருமொழியே மலமொழிக்கு மொழிக்கு
மென மொழிந்த, குருமொழியே மலையிலக்குமற்

றைமொழி யெல்லாங் கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய், கருமொழியிங் குனக்கில்லை மொழிக்குமொழி ருசிக்கக்கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங்கண்டனைமேற், றருமொழியிங் குனக்கில்லை யுன்னைவிட்டு நீங்காத் தற்பரமாயானந்தப் பொற்பொதுவாய்நில்லே. (உ)

நில்லாதவாக்கைநிலை யன்றெனவே கண்டாய் நேயவருண் மெய்யன்றோ நிலயமதாநிற்கக், கல்லாதே யேன்படித்தாய் கற்றதெல்லா மூடங்கற்றதெல்லா மூடமென்றே கண்டனையு மன்று, சொல்லாலே பயனில்லை சொன்முடிவைத் தானே தொடர்ந்துபிடி மர்க்கடம்போற் றொட்டதுபற்றுநில், லெல்லாரு மறிந்திடவே வாய்ப்பறைகொண் டடிநீ யிராப்பகலில் லாவிடமே யெமக்கிடமென் றறிந்தே. ()

இடம்பொருளே வலைக்குரித்து மடம்புகு நாயெனவே யெங்கேநீ யகப்பட்டா யிங்கேநீவாடா, மடம்பெறுபாழ் நெஞ்சாலே யஞ்சாதே நிராசை மன்னிடமே யிடமந்த மாநிலத்தே பொருளுந், திடம்பெறவே நிற்கினெல்லா வுலகமும்வந் தேவல் செய்யுமிந்த நிலைநின் றோர் சனகன்முதன் முனிவர், கடப்பெறுமா மதயானை யென்னவுநீ பாசக்கட்டான நிகளபந்தக்கட் டவிழப் பாரே. (ச)

பாராதி யண்டமெலாம் படர்கானற் சலம்போற்
பார்த்தனையே முடிவினின்று பாரெதுதா னின்ற,
தாராலு மறியாத சத்தன்றோ வதுவா யங்கிருநீ
யெங்கிருந்து மதுவானவை கண்டாய், பூராய மாகவு
நீ மற்றொன்றை விரித்துப் புலம்பாதேசஞ்சலமாப்
புத்தியைநாட் டாதே, போராதே யொன்றையுநீ
முன்னிலைவை யாதேயுள்ளபடி முடியுமெலாமுள்ள
படிகாணே. (௫)

உள்ளபடி யென்னவுநீ மற்றொன்றைத் தொட
ர்ந்திட் டுளங்கருத வேண்டாநிஷ் களங்கமதியா
கிக், கள்ளமனத் துறவை விட்டெல் லாந்துறந்த
துறவோர் கற்பித்த மொழிப்படியே கங்குல்பகல
ற்ற, வெள்ளவெளிக் கடன்மூழ்கி யின்பமயப் பொ
ருளாய் விரவியெடுத் தெடுத்தெடுத்து விள்ளவும்
வாயின்றிக், கொள்ளைகொண்ட கண்ணீருங் கம்ப
லையு மாகிக் கும்பிட்டுச் சகம்பொயெனத் தம்பட்
டமடியே. (௬)

அடிமுடியு நடுவுமற்ற பரவெளிமேற் கொண்
டா லத்துவித வானந்த சித்தமுண்டா நமது, குடி
முழுதும் பிழைக்கு மொரு குறையுமில்லை யெடு
த்த கோலமெல்லா நன்றாகுங் குறைவுநிறைவறவே,
விடியுமுத யம்போல வருளுதயம்பெற்ற வித்தக
ரோடுங்கூடி விளையாடலாகும், படிமுழுதும் விண்

முழுதுந் தந்தாலுங் களியாப் பாலருட னுன்மத்தர் பிசாசர்குணம்வருமே. (எ)

வரும்போமென் பனவுமின்றியென்று மொருபடித்தாய் வானுதி தத்துவத்தை வளைந்தருந்தி வெளியா, மிரும்போகல்லோமரமோ வென்னுநெஞ்சைக் கனன்மேலிட்டமெழு காவுருக்குமின்ப வெள்ளமாகிக், கரும்போ கண்டோசீனி சருக்கரையோ தேனோ கனியமிர்தோ வெனருசிக்குங் கருத்தவிழ்ந்தோ ருணர்வா, ரரும்போநன் மணங்காட்டுங் காமரசங்கன்னி யறிவாளோ வபக்குபவர்க்கோ வந்நலந்தான் விளங்கும். (அ)

தானேயு மிவ்வுலக மொருமுதலு மாகாத் தன்மையிறைற் படைத்தளிக்குந் தலைமையது வான, கோனுகை வொருமுதலிங் குண்டெனவும் யூகங்கூட்டியதுஞ் சகமுடிவிற் குலவுறுமெய்ஞ் ஞான, வானுகவம்முதலே நிற்குநிலை நம்மான் மதிப்பரிதாமெனமோனம் வைத்ததுமுன் மனமே, யானுனுமனஞ்சடமென் றழுங்காதே யுண்மையறிவித்த விடங்குருவா மருளிலதொன்றிலையே. (௯)

---

## பொன்னைமாதரை.

பொன்னைமாதரைப்பூமியைநாடிடே
னென்னைநாடியவென்னுயிர்நாதனே

யுன்னைநாடுவ னுன்னருட்டுவெளி
தன்னைநாடுவன் றன்னந்தனியனே. (க)

தன்னதென்றுரைசாற்றுவனவெலா
நின்னதென்றனைநின்னிடத்தேதந்தே
னின்னமென்னையிடருறக்கூட்டினுற்
பின்னையுய்கிலன்பேதையனுவியே. (உ)

ஆவியேயுனையானறிவாய்நின்று
சேவியேன்களச்சிந்தைதிறைகொடேன்
பாவியேனுளபான்மையைக்கண்டுநீ
கூவியாளையாட்கொண்டகோலமே. (ங)

கோலமின்றிக்குணமின்றிநின்னருட்
சீலமின்றிச்சிறியன்பிழைப்பனே
வாலமூண்டுமமிர்துருவாய்வந்த
காலமெந்தைகதிரிலைகாண்பதே. (ச)

காணுங்கண்ணிற்கலந்தகண்ணேயுனைச்
சேணும்பாருந்திரிபவர்காண்பரோ
வாணும்பெண்ணுமதுவெனும்பான்மையும்
பூணுங்கோலம்பொருந்தியுணிற்கவே. (ரு)

நிற்குநன்னிலைநிற்கப்பெற்றாருள்
வர்க்கமன்றிமணிதரன்றேயையா
துர்க்குணக்கடற்சோங்கன்னபாவியேற்
கெற்குணங்கண்டெனபெயர்சொல்வதே. (சா)

சொல்லையுன்னித் துடித்ததலாலரு
ளெல்லையுன்னியெனையங்குவைத்திலேன்
வல்லைநீயென்னைவாவென்றிடாவிடிற்
கல்லையாமிக்கருமிகடக்கையே. (எ)

கையுமெய்யுங்கருத்துக்கிசையவே
யையதந்தகற்கையமினியுண்டோ
பொய்யனேன்சிந்தைப்பொய்கெடப்பூரண
மெய்யதாமின்பமென்றுவிளைவதே. (அ)

என்றுமுன்னையிதயவெளிக்குளே
துன்றவைத்தனனேயருட்சோதிநீ
நின்றதன்மைநிலைக்கென்னைநேர்மையா
நன்றுநீதறவைத்தநடுவதே. (கூ)

வைத்ததேகம்வருந்தவருந்திடும்
பித்தனுனருள்பெற்றுந்திடமிலேன்
சித்தமோனசிவசின்மயானந்தம்
வைத்தவையருட்செம்பொற்சோதியே. (க0)

செம்பொன்மேனிச்செழுஞ்சுடரேமுழு
வம்பனேனுனைவாழ்த்துமதியின்றி
யிம்பர்வாழ்வினுக்கிச்சைவைத்தேன்மன
நம்பிவாவெனிலுனென்கொல்செய்வதே. (கக)

செய்யுஞ்செய்கையுஞ்சிந்திக்குஞ்சிந்தையு
மையநின்னதென்றெண்ணுமறிவின்றி

வெய்யகாமவெகுளிமயக்கமாம்
பொய்யிலேசுழன்றேனென்னபுன்மையே. (கஉ)

புன்புலானரம்பென்புடைப்பொய்யுட
லன்பர்யார்க்குமருவருப்பல்லவோ
லென்பொலாமணியேயிறையேயித்தாற்
றுன்பமன்றிச்சுகமொன்றுமில்லையே. (கங)

இல்லையுண்டென்றெவர்பக்கமாயினுஞ்
சொல்லவோவறியாததொழும்பன்யான்
செல்லவேருருதிக்கறியேனெலாம்
வல்லநீயெனைவாழ்விக்கவேண்டுமே. (கச)

வேண்டுஞ்சீருண்மெய்யன்பர்க்கேயன்பு
பூண்டநானென்புலமறியாததோ
வாண்டைநீயுன்னடியவனென்று
தூண்டுவேனன்றித்தொண்டனென்சொல்வதே. ()

எனக்குளேயுயிரென்னவிருந்தநீ
மனக்கிலேசத்தைமாற்றல்வழக்கன்றோ
கனத்தசீருட்காட்சியலாதொன்றை
நினைக்கவோவறியாதென்றனெஞ்சமே. (கசு)

நெஞ்சுகந்துனைநேசித்தமார்க்கண்டர்க்
கஞ்சலென்றவருளறிந்தேயையா
தஞ்சமென்றுன்சரணடைந்தேனெங்குஞ்
செஞ்சவேநின்றசிற்சுகவாரியே. (கஎ)

வாரியேழுமலையும்பிறவுந்தான்
சீரிதானநின்சின்மயத்தேயென்று
லாரிலேயுளதாவித்திரளதை
யோரிலேனெனையாண்டவொருவனே. (கஅ)

ஒருவரென்னுளத்துள்ளுங்குறிப்பறிந்
தருள்வரோவெனையாளுடையண்ணலே
மருளனேன்பட்டவாதைவிரிக்கினோ
பெருகுநாளினிப்பேசவிதியின்றே. (கக)

இன்றெனக்கன்பிழைத்திலனென்றே
யன்றுதொட்டனையாளரசேயென்று
நின்றரற்றியநீலனைக்கைவிட்டான்
மன்றமெப்படிநின்னருள்வாழ்த்துமே. (உ0)

வாழ்த்துநின்னருள்வாரம்வைத்தாலன்றிப்
பாழ்த்தசிந்தைப்பதகனுமுய்வனோ
சூழ்த்துநின்றதொழும்பரையானந்தத்
தாழ்த்துமுக்கனருட்செம்பொற்சோதியே. (உக)

சோதியேசுடரேசுகமேதுணை
நீதியேநிசமேநிறைவேஃநிலை
யாதியேயுனையானடைந்தேனகம்
வாதியாதருள்வாயருள்வானையே. (உஉ)

வானைப்போலவளைந்துகொண்டானந்தத்
தேனைத்தந்தெனைச்சேர்ந்துகலந்தமெய்ஞ்

ஞானத் தெய்வத்தை நாடுவனுனெனு
மீனப்பாழ்கெடவென்றுமிருப்பனே. (உரு)

இரும்பைக்காந்தமிழுக்கின்றவாறெனைத்
திரும்பிப்பார்க்கவொட்டாமற்றிருவடிக்
கரும்பைத்தந்துகண்ணீர்கம்பலையெலா
மரும்பச்செய்யெனதன்னையொப்பாமனே. (உச)

அன்னையப்பனென்னுவித்துணையெனுந்
தன்னையொப்பற்றசற்குருவென்பதே
னென்னைப்பூரணவின்பவெளிக்குளே
துன்னவைத்தசுடரெனத்தக்கதே. (உரு)

தக்ககேள்வியிற்சார்ந்தநற்பூமியின்
மிக்கதாகவிளங்குமுதலொன்றே
யெக்கணுந்தொழுயாவையும்பூத்துக்காய்த்
தொக்கனின்றுமொன்றாய்நிறைவானதே. (உசு)

ஆனமானசமயங்களாறுக்குந்
தானமாய்நின்றுதன்மயங்காட்டிய
ஞானபூரணநாதனைநாடியே
தீனனேனின்பந்தேக்கித்திளைப்பனே. (உஎ)

தேக்கியின்பந்திளைக்கத்திளைக்கவே
யாக்கமாயெனக்கானந்தமாகியே
போக்கினேடுவரவற்றபூரணந்
தாக்கிநின்றவாதன்மயமாமதே. (உஅ)

அதுவென்றுன்னுமதுவுமறநின்ற
முதியஞானிகண்மோனப்பொருளது
வெதுவென்றெண்ணியிறைஞ்சுவனேழையேன்
மதியுணின்றின்பவாரிவழங்குமே. (உகூ)

வாரிக்கொண்டெனைவாய்மடுத்தின்பமாய்ப்
பாரிற்கண்டவையாவும்பருகினே
யோரிற்கண்டிடுமுன்கனவெனா
யாருக்குஞ்சொல்வாயிலையையனே. (ஙு)

ஐயமற்றவதிவருணர்க்கெலாங்
கையிலாமலகக்கனியாகிய
மெய்யனேயிந்தமேதினிமீதுழல்
பொய்யனேற்குப்புகலிடமெங்ஙனே. (ஙக)

எங்ஙனேயுய்யயானெனதென்பதற்
றங்ஙனேயுன்னருண்மயமாகிலேன்
றிங்கள்பாதிதிகழ்ப்பணியணி
கங்கைவார்சடைக்கண்ணுதலெந்தையே. (ஙஉ)

கண்ணிற்காண்பதுன்காட்சிகையாற்றொழில்
பண்ணல்பூசைபகர்வதுமந்திர
மண்ணைடந்தும்வழங்குயிர்யாவுமே
யண்ணலேநின்னருள்வடிவாகுமே. (ஙங)

வடிவெலாநின்வடிவெனவாழ்த்திடாக்
கடியனேனுமுன்காரணங்காண்பனோ

நெடியவானெனவெங்குநிறைந்தொளி
ர்டிகளேயரசேயருளத்தனே. (௩௪)

அத்தனேயகண்டானந்தனேயருட்
சுத்தனேயெனவுன்னைத்தொடர்ந்திலேன்
மத்தனேன்பெறுமாமலமாயவான்
கத்தனேகல்வியாததுகற்கவே. (௩௫)

கற்றுமென்பலன்கற்றிடுநான்முறை
சொற்றசொற்கள்சுகாரம்பமோநெறி
நிற்றல்வேண்டுநிருவிகற்பச்சுகம்
பெற்றபேர்பெற்றபேசாப்பெருமையே. (௩௬)

பெருமைக்கேயிறுமாந்துபிதற்றிய
கருமிக்கையகதியுமுண்டாங்கொலோ
வொருமைச்சீரன்பர்க்கன்னையொப்பாகவே
வருமப்பேரொளியேயுன்மனானந்தமே. (௩௭)

உன்மனிக்குளொளிர்பரஞ்சோதியாஞ்
சின்மயப்பொருளேபழஞ்செல்வமே
புன்மலத்துப்புழுவனபாவியேன்
கன்மனத்தைக்கரைக்கக்கடவதே. (௩௮)

கரையிலின்பக்கடலுமுதேயிது
வரையினுனைவந்துகலந்திலே
னுரையிலாவின்பமுள்ளவர்போலவித்
தரையிலேநடித்தேனென்னதன்மையே. (௩௯)

மையுலாம்விழிமாதர்கடோதகப்
பொய்யிலாழும்புலையினிப்பூரைகாண்
கையிலாமலகக்கனிபோன்றவென்
னையனேயென்னையாளுடையண்ணலே. (௪0)

அண்ணலேயுன்னடியவர்போலருட்
கண்ணினுனைக்காணவும்வாவெனப்
பண்ணினுலென்பசுத்துவம்போயுயும்
வண்ணமாகமனோலயம்வாய்க்குமே. (௪௧)

வாய்க்குங்கைக்குமௌனமௌனமென்
றேய்க்குஞ்சொற்கொண்டிராப்பகலற்றிடா
நாய்க்குமின்பமுண்டோநல்லடியரைத்
தோய்க்குமானந்தத்தூவெளிவெள்ளமே. (௪௨)

தூயதானதுரியவறிவெனுந்
தாயுநீயின்பத்தந்தையுநீயென்றூற்
சேயதாமிந்தச்சீவத்திரளன்றே
வாயும்பேரொளியானவகண்டமே. (௪௩)

அகண்டமென்னவருமறையாகமம்
புகன்றநின்றன்மைபோதத்தடங்குமோ
செகங்களெங்குந்திரிந்தூநன்மோனத்தை
யுகந்தபேருனையொன்றுவரையனே. (௪௪)

ஐயனேயுனையன்றியொருதெய்வங்
கையினாற்றொழவுங்கருதேன்கண்டாய்

பொய்யனாகிலும்பொய்யுரையேன்சுத்த
மெய்யனாமுனக்கேவெளியாகுமே. (௪௫)

வெளியினின்றவெளியாய்விளங்கிய
வொளியினின்றவொளியாமுன்றன்னைநான்
றெளிவுதந்தகல்லாலடித்தேவென்று
களிபொருந்தவன்றோகற்றகல்வியே. (௪௬)

கல்லையுற்றகருத்தினர்கார்நிறத்
தல்லையொத்தகுழலினராசையா
லெல்லையற்றமயல்கொளவோவெழிற்
றில்லையிற்றிகழுந்திருப்பாதனே. (௪௭)

திருவருட்டெய்வச்செல்விமலைமக
ளொருவிருக்கின்றமேனியொருபரங்
குருவைமுக்கணெங்கோவைப்பணிநெஞ்சே
கருவிருக்கின்றகன்மமிங்கில்லையே. (௪௮)

கன்மமேதுகடுநரகேதுமேற்
சென்மமேதெனைத்தீண்டக்கடவதோ
வென்மனோரதமெய்துபடிக்கரு
ணன்மைகூர்முக்கணாதனிருக்கவே. (௪௯)

நாதகீதனென்னாதன்முக்கட்பிரான்
வேதவேதியன்வெள்விடையூர்திமெய்ப்
போதமாய்நின்றபுண்ணியன்பூந்திருப்
பாதமேகதிமற்றில்லைபாழ்நெஞ்சே. (௫0)

மற்றுனக்குமயக்கமென்வன்னெஞ்சே
கற்றைவார்சடைக்கண்ணுதலோனருள்
பெற்றபேரவரேபெரியோரெலா
முற்றுமோர்ந்தவர்மூதுரையர்த்தமே. (௫௧)

உரையிறந்துளத்துள்ளவிகாரமாந்
திரைகடந்தவர்தேடுமுக்கட்பிரான்
பரைநிறைந்தபரப்பெங்ஙனங்ஙனே
கரைகடந்தின்பமாகக்கலப்பனே. (௫௨)

கலந்தமுத்திகருதினுங்கேட்பினு
நிலங்களாதியுநின்றமைப்போலவே
யலந்துபோயினமென்னுமருமறை
மலர்ந்தவாய்முக்கண்மாணிக்கச்சோதியே. (௫௩)

சோதியாதெனைத்தொண்டருட்கூட்டியே
போதியாதவெல்லாமௌனப்போதிக்க
வாதிகாலத்திலுன்னடிக்காந்தவ
மேதுநான்முயன்றேன்முக்கணெந்தையே. (௫௪)

எந்தநாளைக்குமீன்றருடாயென
வந்தநீரருள்வாழ்கவென்றுன்னுவேன்
சிந்தைநோக்கந்தெரிந்துகுறிப்பெலாந்
தந்துகாக்குந்தயாமுக்கணாதியே. (௫௫)

கண்ணகன்றவிக்காசினியூடெங்கும்
பெண்ணொடாண்முதலாமென்பிறவியை

யெண்ணவோவரிதேழைகதிபெறும்
வண்ணமுக்கண்மணிவந்துகாக்குமே. (௫௬)

காக்குநின்னருட்காட்சியல்லாலொரு
போக்குமில்லையென்புந்திக்கிலேசத்தை
நீக்கியாளுகைநின்பரமன்பின
ராக்கமேமுக்கணானந்தமூர்த்தியே. (௫௭)

ஆனந்தங்கதியென்னவென்னானந்த
மோனஞ்சொன்னமுறைபெறமுக்கணாங்
கோனிங்கிந்தகுறிப்பதனால்வெறுந்
தீனன்செய்கைதிருவருட்செய்கையே. (௫௮)

கையினாற்றொழுதேத்திக்கசிந்துள
மெய்யினாலுனைக்காணவிரும்பினே
னையனேபரசேயருளேயருட்
டையலோர்புறம்வாழ்சகநாதனே. (௫௯)

சகத்தின்வாழ்வைச்சதமெனவெண்ணியே
மிகுத்ததீமைவிளையவிளைக்கின்றே
னகத்துளாரமுதாமையநின்முத்தி
சகத்தினான்வந்துதோய்வதெந்காலமே. (௬௦)

காலமூன்றுங்கடந்தொளிராநின்ற
சீலமேநின்றிருவருளாலிந்த்ர
சாலமாமிச்சகமெனவெண்ணிநின்
கோலநாடுதலென்றுகொடியனே. (௬௧)

கொடியவெவ்வினைக்கூற்றைத்துரந்திடு
மடிகளாம்பொருளேநினக்கன்பின்றிப்
படியிலேழைமைப்பற்றுகின்றேன்வெறு
மிடியினேன்கதிமேவும்விதியின்றே. (௬௨)

விதியையும்விதித்தென்னைவிதித்திட்ட
மதியையும்விதித்தம்மதிமாயையிற்
பதியவைத்தபசுபதிநின்னருட்
கதியையெப்படிக்கண்டுகளிப்பதே. (௬௩)

கண்டகனுக்குக்காட்டுங்கதியெனப்
பண்டுமின்றுமென்பானின்றுணர்த்திடு
மண்டனேயுனக்கோர்பதினாயிரந்
தெண்டனென்பொய்மைதீர்த்திடல்வேண்டுமே.

வேண்டும்யாவுமிறந்துவெளியிடைத்
தூண்டுவாரற்றசோதிப்பிரானென்பாற்
பூண்டவன்பர்தம்பொற்பணிவாய்க்குமே
லீண்டுசென்மமெடுப்பனனந்தமே. (௬௫)

எடுத்ததேகமிறக்குமுனேயெனைக்
கொடுத்துநின்னையுங்கூடவுங்காண்பனோ
வடுத்தபேரறிவாயறியாமையைக்
கெடுத்தவின்பக்கிளர்மணிக்குன்றமே. (௬௬)

குன்றிடாதகொழுஞ்சுடரேமணி
மன்றுளாடியமாணிக்கமேயுனை

யன்றியார்துணையாருறவார்கதி
யென்றுநீயெனக்கின்னருள்செய்வதே. (சுஎ)

அருளெலாந்திரண்டோர்வடிவாகிய
பொருளெல்லாம்வல்லபொற்பொதுநாதவென்
மருளெலாங்கெடுத்தேயுளமன்னலா
லிருளெலாமிரிந்தெங்கொளித்திட்டதே. (சுஅ)

எங்குமென்னையிகலுறவாட்டியே
பங்கஞ்செய்தபழவினைபற்றற்று
லங்கணுவுன்னடியிணையன்றியே
தங்கவேறிடமுண்டோசகத்திலே. (சுகூ)

உண்டவர்க்கன்றியுட்பசியோயுமோ
கண்டவர்க்கன்றிக்காதலடங்குமோ
தொண்டருக்கெளியானென்றுதோன்றுவான்
வண்டமிழ்க்கிசைவாகமதிக்கவே. (எ0)

மதியுங்கங்கையுங்கொன்றையுமத்தமும்
பொதியுஞ்சென்னிப்புனிதநின்பொன்னடிக்
கதியைவிட்டிந்தக்காமத்திலாழ்ந்தவென்
விதியையெண்ணிவிழிதுயிலாதன்றே. (எக)

அன்றெனச்சொலவாமெனவற்புத
நன்றெனச்சொலநண்ணியநன்மையை
யொன்றெனச்சொனவொண்பொருளேயொளி
யின்றெனக்கருள்வாயிருளேகவே. (எஉ)

இருவரேபுகழ்ந்தேத்தற்கினியரா
மொருவரேதுணையென்றுணராய்நெஞ்சே
வருவரேகொடுங்காலர்கள்வந்தெதிர்
பொருவரேயவர்க்கென்சொல்புகல்வதே. (எ௩)

புகழுங்கல்வியும்போதமும்பொய்யிலா
வகமும்வாய்மையுமன்புமளித்தவே
சுகவிலாசத்துணைப்பொருட்டோற்றமாங்
ககனமேனியைக்கண்டனகண்களே. (எ௪

கண்ணுனின்றவொளியைக்கருத்தினை
விண்ணுணின்றுவிளங்கியமெய்யினை
யெண்ணியெண்ணியிரவும்பகலுமே
நண்ணுகின்றவர்நான்றொழுந்தெய்வமே. (எ௫

தெய்வம்வேறுளதென்பவர்சிந்தனை
நைவரென்பதுநற்பரதற்பர
சைவசிற்சிவனேயுனைச்சார்ந்தவ
ருய்வரென்பதும்யானுணர்ந்தேனுற்றே. (எ௬

உற்றவேளைக்குறுதுணையாயிந்தச்
சுற்றமோநமைக்காக்குஞ்சொலாய்நெஞ்சே
கற்றைவார்சடைக்கண்ணுதல்பாதமே
பற்றதாயிற்பரசுகம்பற்றுமே. (எஎ

பற்றலாம்பொருளேபரம்பற்றினா
லுற்றமாதவர்க்குண்மையைநல்குமே

மற்றும்வேறுளமார்க்கமெல்லாமெடுத்
தெற்றுவாய்மனமேகதியெய்தவே. (எஅ)

---

## ஆ ர ண ம்.

ஆரணமார்க்கத்தாகமவாசி
யற்புதமாய்நடந்தருளுங்
காரணமுணர்த்துங்கையுநின்மெய்யுங்
கண்கண்மூன்றுடையவென்கண்ணே
பூரணவறிவிற்கண்டிலமதுறைற்
போற்றியிப்புந்தியோடிருந்து
தாரணியுள்ளமட்டுமேவணங்கத்
தமியனேன்வேண்டிடத்தருமே. (க)

இடமொருமடவாளுலகனைக்கீந்திட்
டெவ்வுலகத்தையுமீன்றுந்
தடமுறுமகிலமடங்குநாளம்மை
தன்னையுமொழித்துவிண்ணெனவே
படருறுசோதிக்கருணையங்கடலே
பாயிருட்படுகிற்கிடக்கக்
கடனதோநினைப்புமறப்பெனுந்திரையைக்
கவர்ந்தேனைவளர்ப்பதுன்கடனே. (உ)

வளம்பெருஞானவாரிவாய்மடுத்து
மண்ணையும்விண்ணையுந்தெரியா
தளம்பெறுந்துரும்பொத்தாவியோடாக்கை
யானந்தமாகவேயலந்தேன்

களம்பெறுவஞ்சநெஞ்சினர்காணுக்
காட்சியேசாக்ஷியேயறிஞ
ருளம்பெறுந்துணையேபொதுவினினடிக்கு
முண்மையேயுள்ளவாறிதுவே. (௩)

உள்ளமேநீங்காவென்னைவாவாவென்
றுலப்பிலாவானந்தமான
வெள்ளமேபொழியுங்கருணைவான்முகிலே
வெப்பிலாத்தண்ணருள்விளக்கே
கள்ளமேதுரக்குந்தூவெளிப்பரப்பே
கருவெனக்கிடந்தபாழ்மாயப்
பள்ளமேவீழாதெனைக்கரையேற்றிப்
பாலிப்பதுன்னருட்பரமே. (௪)

பரம்பரமாகிப்பக்குவம்பழுத்த
பழவடியார்க்கருள்பழுத்துச்
சுரந்தினிதிரங்குந்தானகற்பகமே
சோதியேதொண்டனேனின்னை
யிரந்துநெஞ்சுடைந்துகண்டுயில்பொரும
லிருந்ததுமென்கணிலிருட்டைக்
கரந்துநின்கண்ணுற்றுயில்பெறல்வேண்டிக்
கருதினேன்கருத்திதுதானே. (௫)

கருத்தினுட்கருத்தாயிருந்துநீயுணர்த்துங்
காரணங்கண்டுசும்மாதான்

வருத்தமற்றிருந்துசுகம்பெறுவண்ணம்
வருந்தினேன்மதியின்மைதீர்ப்பா
ரொருத்தராருளப்பாடுணர்பவர்யாவ
ருலகவர்பன்னெறியெனக்குப்
பொருத்தமோசொல்லாய்மௌனசற்குருவே
போற்றிநின்பொன்னடிப்போதே. (சு)

அடியெனுமதுவுமருளெனுமதுவு
மறிந்திடினிர்க்குணநிறைவு
முடியெனுமதுவும்பொருளெனுமதுவு
மொழிந்திடிற்சுகமனமாயைக்
குடிகெடவேண்டிற்பணியறநிற்றல்
குணமெனப்புன்னகைகாட்டிப்
படிமிசைமௌனியாகிநீயாளப்
பாக்கியமென்செய்தேன்பரனே. (எ)

என்செயலின்றியாவுநின்செயலென்
றெண்ணுவேனெவ்வொருகாலம்
புன்செயன்மாயைமயக்கினென்செயலாப்
பொருந்துவனஃதொருகாலம்
பின்செயல்யாதுநினைவின்றிக்கிடப்பேன்
பித்தனேனன்னிலைபெறநின்
றன்செயலாகமுடித்திடல்வேண்டுஞ்
சச்சிதானந்தசற்குருவே. (அ)

குருவுருவாகிமௌனியாய்மௌனக்
கொள்கையையுணர்த்தினையதனாற்

கருவுருமாவதெனக்கிலேயிந்தக்
காயமோபொய்யெனக்கண்ட
திருவுருவாளரனுபவநிலேயுஞ்
சேருமோவாவலோமெத்த
வருவுருவாகியல்லவாய்ச்சமய
மளவிடாவானந்தவடிவே. (கூ)

வடிவிலாவடிவமாய்மனநினைவணுகா
மார்க்கமாய்க்கருஞ்சுகமாய்
முடிவிலாவீட்டின்வாழ்க்கைவேண்டினர்க்குன்
மோனமல்லால்வழியுண்டோ
படியிருளகலச்சின்மயம்பூத்த
பசுங்கொம்பையடக்கியோர்கல்லா
லடியிலேயிருந்தவானந்தவரசே
யன்பரைப்பருகுமாரமுதே. (க0)

---

## சொல்லற்கரிய.

சொல்லற்கரிய பரம்பொருளே சுகவா ரிதியே சுடர்க் கொழுந்தே, வெல்லற் கரிய மயலிலெனை விட்டெங் கொளித்தா யாகெட்டேன், கல்லிற்பசிய நாருரித்துக் கடுகிற் பெரிய கடலடைக்கு, மல்லிற் கரிய வந்தகனார்க் காளாக்கினையோ வறியேனே. ()

அறிவிற் கறிவு தாரகமென் றறிந்தே யறிவோ டறியாமை, நெறியிற் புகுதா தோர் படித்தாய்

நின்றநிலையுந் தெரியாது, குறியற் றகண்டா தீத
மயக் கோதி லமுதே நினைக்குறுகிப், பிறிவற்றிரு
க்க வேண்டாவோ பேயேற் கினிநீ பேசாயே. (உ)

பேசாவனுபூ தியையடியேன் பெற்றுப் பிழைக்
கப் பேரருளாற், றேசோ மயந்தந் தினியொருகாற்
சித்தத்திருளுந் தீர்ப்பாயோ, பாசா டவியைக்கட
ந்தவன்பர் பற்றுமகண்டப் பரப்பான, வீசாபொ
துவி னடமாடு மிறைவா குறையா வின்னமுதே.

இன்பக் கடலிற் புகுந்திடுவா னிரவும் பகலுந்
தோற்றும, லன்பிற் கரைந்து கரைந்துருகி யண்ணு
வரசே யெனக்கூவிப், பின்புற் றழுஞ்சே யெனவி
ழிநீர் பெருக்கிப் பெருக்கிப்பித்தாகித், துன்பக்க
டல்விட் டகல்வேனோ சொரூபானந்தச் சுடர்க்
கொழுந்தே. (ச)

கொழுந்து திகழ்வெண் பிறைச்சடிலக் கோவே
மன்றிற் கூத்தாடற், கெழுந்தசுடரே யிமயவரை
யென்றாய் கண்ணுக் கினியானே, தொழுந்தெய்வ
முநீ குருவுநீதுணைநீ தந்தைதாயுநீ, யழுந்தும்பவ
நீநன்மையுநீ யாவியாக்கை நீதானே. (ரு)

தானே யகண்டா காரமயந் தன்னிலெழுந்து
பொதுநடஞ்செய், வானே மாயப்பிறப்பறுப்பான்

வந்துன் னடிக்கே கரங்கூப்பித், தேனேயென்னைப் பருகவல்ல தெள்ளா ரமுதே சிவலோகக், கோனே யெனுஞ்சொன் னினதுசெவி கொள்ளாதென்றே கூறுயே. (௬)

கூறுநின்ற விடர்க்கவலைக் குடும்பக் கூத்துட் டுளைந்தது, மாறுநின்ற பாவியைநீ வாவென்றழை த்தா லாகாதோ, நீறார்மேனி முக்கணுடை நிமலா வடியார் நினைவினிடை, யாறுய்ப் பெருகும்பெருங் கருணை யரசேயென்னை யாள்வானே. (எ)

வானேமுதலாம் பெருமபூதம் வகுத்துப்புரந்து மாற்றவல்ல, கோனே யென்னைப் புரக்குநெறிகுறி த்தா யிலையே கொடியேனைத், தானே படைத்திங் கென்னபலன் றன்னைப் படைத்தா யுன்கருத்தை, நானே தென்றிங் கறியேனே நம்பினேன்கண் டருள்வாயே. (அ)

கண்டார் கண்ட காட்சியுநீ காணார் காணுக் கள்வனுநீ, பண்டாருயிர்நீ யாக்கையுநீ பலவாஞ் சமயப் பகுதியுநீ, யெண்டோண் முக்கட் செம்மே னி யெந்தாய் நினக்கே யெவ்வாறு தொண்டாய்ப் பணிவ ரவர்பணிநீ கூட்டிக்கொள்வ தெவ்வாறே.

கூட்டி யெனதென் றிடுஞ்சுமையைச் சுமத்தி யென்னையுஞ் சுமையாளாக், கூட்டிப் பிடித்து வினை வழியே கூத்தாட் டினையே நினதருளால், வீட்

டைக் கருது மப்போது வெளியா மூலக வியப் பனைத்து, மேட்டுக் கடங்காச் சொப்பனம்போலெ ந்தா யிருந்ததென்சொல்வேன். (௧0)

---

## வ ம் ப னே ன்.

வம்பனேன் கள்ளங் கண்டு மன்னருள் வெள்ள ராய, வும்பர்பா லேவல் செய்யென் றுணர்த்தினை யோகோவானோர், தம்பிரானேநீ செய்ததயவுக்கு ங் கைம்மாறுண்டோ, வெம்பிரானுய்ந்தேனுய்ந்தே னினியொன்றுங் குறைவிலேனே. (௧)

குறைவிலா நிறைவாய் ஞானக் கோதிலானந்த வெள்ளத், துறையிலே படிந்து மூழ்கித் துளைந்து நான்றோன்றுவாறுள், ளுறையிலேயுணர்த்திமோன வொண்சுடர் வைவா டந்த, விறைவனேயுனைப் பிரி ந்திங் கிருக்கிலே னிருக்கி லேனே. (௨)

இருநில மாதி நாத மீறதா மிவைகடந்த, பெ ருநில மாயதூய பேரொளிப்பிழம்பாய் நின்றுங், கருதரு மகண்டா னந்தக் கடவுளின் காட்சி காண, வருகவென் றழைத்தா லன்றி வாழ்வுண் டோ வஞ்ச னேற்கே. (௩)

யழுக்கா ருதி வைத்துமம பாண்ட மான, நெஞ்சனை வலிதின் மேன்மே னெக்கு நெக் குருகப் பண்ணி, யஞ்சலிசெய்யுங் கையு மருவிநீர்

விழியுமாகத், தஞ்சமென் றிரங்கிக் காக்கத் தற்ப
ரா பரமுனக்கே. (௪)

உனக்குநா னடித்தொண்டாகி யுன்னடிக்கன்
புசெய்ய, வெனக்குநீ தோற்றி யஞ்சே லென்னு
நா ளெந்தநாளோ, மனக்கிலே சங்க டேர்ந்த மா
தவர்க் கிரண்டற் றோங்குந், தனக்குநே ரில்லா
வொன்றே சச்சிதா னந்தவாழ்வே. (௫)

வாழ்வென வயங்கி யென்னை வசஞ்செய்து
மருட்டும் பாழ்த்த, வூழ்வினைப் பகுதி செட்டிங்
குன்னையுங் கிட்டுவேனோ, தாழ்வெனுஞ் சமய
நீங்கித் தமை யுணர்ந்தோர்கட் கெல்லாஞ், சூழ்
வெளிப் பொருளே முக்கட் சோதியே யமர
ரேறே. (௬)

ஏறுவாம் பரியா வாடை யிருங்கலை யுரியா
வென்று, நாறுநற் சாந்தநீறு நஞ்சமே யமுதாக்
கொண்ட, கூறருங் குணத்தோ யுன்றன் குரை
கழல் குறுகினல்லா, லாறுமோ தாபசோப மக
லுமோ வல்ல ருனே. (௭)

தானமுந் தவமும் யோகத்தன்மையு முணரா
வென்பான், ஞானமுந் தெவிட்டா வின்ப நன்
மையு நல்கு வாயோ, பானலங் கவர்ந்த தீஞ்சொற்
பச்சிளங் கிள்ளைகாண, வானவரிறைஞ்ச மன்றுள்
வயங்கிய நடத்தினனே. (௮)

நடத்தியிவ் வுலகை யெல்லா நாதநீ நிறைந்த தன்மை, திடத்துட னறிந்தா னந்தத் தெள்ளமு தருந்தி டாதே, விடத்திரளனைய காம வேட்கையி லழுந்திமாயைச், சடத்தினைமெய்யென்றெண்ணித் தளரவோ தனிய னேனே. (கூ)

தனிவளர் பொருளே மாறாத் தண்ணருங்கரு ணைபூத்த, வினியகற் பகமே முக்க ணெந்தையே நினக்கன் பின்றி, நனிபெருங் குடிலங்காட்டு நயன வேற் கரிய கூந்தல், வனிதயர் மயக்கிலாழ்ந்து வரு ந்தவோ வம்ப னேனே. (க0)

## சிவன்செயல்.

சிவன்செய லாலே யாதும் வருமெனத் தேறே னுளு, மவந்தரு நினைவை யெல்லா மகற்றிலே னசை வெள்ளங், கவர்ந்துகொ[illegible] டிழுப்பவந்தக் கட்டிலே யகப்பட் டையோ, பவந்தனையீட்டி யீட் டிப் பதைக்கின்றேன் பாவியேனே. (க)

பாவியே னினியென் செய்கேன் பரமனேபணிந் துன்பாதஞ், சேவியேன் விழிநீர் மல்கச் சிவ சிவ வென்று தேம்பி, யாவியே நிறைய வந்த வமுதமே யென்னே னந்தோ, சாவிபோஞ் சமயத் தாழ்ந்து சகத்திடைத் தவிர்க்கின் றேனே. (உ)

இடைந்திடைந் தேங்கி மெய்புளகிப்ப வெழு ந்தெழுந் தையநின் சரண, மடைந்தன னினிநீ

கைவிடே னுனக்கே யபயமென் றஞ்சலி செய்துள்
ளுடைந்துடைந் தெழுது சித்திரப்பாவையொத்து
நா னசைவற நிற்பத், தொடர்ந்து நீ யெனையாட்
கொள்ளுநா ளென்றோ சோதியே யாதிநா யகனே.

ஆதியாய் நடுவா யந்தமாய்ப் பந்தம் யாவுமற்
றகம்புற நிறைந்த, சோதியாய்ச் சுகமா யிருந்த
வெம் பெருமான் றொண்டனேன் சுகத்திலே யிரு
க்கப், போதியா வண்ணங் கைவிடன் முறையோ
புன்மையே னென்செய்கேன் மனமோ, வாதியா
நின்ற தன்றியும் புலன்சேர் வாயிலோ தீயினுங்
கொடிதே. (௪)

வாயிலோ ரைந்திற் புலனெனும் வேடர் வந்
தெனை யீர்த்துவெங் காமத், தீயிலே வெதுப்பி
யுயிரொடுந் தினனச் சிந்தைநைந் துருகிமெய் மற
ந்து, தாயிலாச் சேய்போ லலைந்தலைப் பட்டேன்று
யினுங் கருணையா மன்று, ளுயகமாகி யொளிவிடு
மணியே நாதனே ஞானவா ரிதியே. (௫)

ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடு நாட்ட
மே நாட்டத்து ணிறைந்த, வானமே யெனக்குவந்
துவந் தோங்கு மார்க்கமே மருளர்தாமறியா, மோ
னமே முதலே முத்திநல் வித்தே முடிவிலா வின்ப
மே செய்யுந், தானமேதவமே நின்னைநானினைந்தே
ன் றமியனேன் றனைமறப் பதற்கே. (௬)

மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும் வந்து நின்னன்பர்தம்பணியா, மறமது கிடைக்கினன்றி யா னந்த வற்புத நிட்டையி னிமித்தந், துறவது வேண்டு மௌனியா யெனக்குத் தூயநல்லருடரி னின்னம், பிறவியும் வேண்டும் யானென திறக்கப் பெற்றவர் பெற்றிடும்பேறே. (எ)

பெற்றவர் பெற்ற பெருந்தவக் குன்றே பெருகிய கருணைவாரிதியே, நற்றவத்துணையே யானந்தக் கடலே ஞாதுரு ஞானஞே யங்க, ளற்றவர்க் கருத நட்புடைக் கலப்பே யனேகமாய் நின்னடிக் கன்பு, கற்றதுங் கேள்வி கேட்டது நின்னைக் கண்டிடும் பொருட்டன்றோ காணே. (அ)

அன்றுநால் வருக்கு மொளிநெறி காட்டுமன்புடைச் சோதியேசெம்பொன், மன்றுண்முக்கண்ணு ங்காளகண்டமுமாய் வயங்கியவானமேயென்னுட், டுன்றுகூரிருளைத் துரந்திடு மதியேதுன்பமு மின்பமுமாகி, நின்றவா தனைக் கடந்தவர் நினைவே நேசமே நின்பரம்யானே. (கூ)

யானெனல் காணேன் பூரண நிறைவில் யா, — மிருந்த பேரொளிநீ, தானென நிற்குஞ் சமத்துற வென்னைத் தன்னவனுக்கவுந் தகுங்காண், வானெனவயங்கி யொன்றிரண் டென்று மார்க்கமாநெறி தந்துமாறுத், தேனெனருசித்து ளன்பரைக்கலந்த செல்வமே சிற்பர சிவமே. (க0)

## தன்னையொருவர்.

தன்னை யொருவர்க் கறிவரிதாய்த் தானே தா ளு யெங்குநிறைந், துன்னற் கரிய பரவெளியாயுல வா வமுதா யொளிவிளக்கா, யென்னுட் கலந்தா யானறியா திருந்தா விறைவா வினியேனு, நின்னைப்பெறுமா றெனக்கருளா னிலையைக் கொடுக்க நினையாயோ. (க)

நினையு நினைவுக் கெட்டாத நெறிபெற் றுணர்ந்த நெறியாளர், வினையைக் கரைக்கும் பாமவின்பவெள்ளப் பெருக்கே நினதருளான, மனைவிபுதல்வரன்னைபிதா மாடுவீடென் றிடுமயக்கந், தனையுமறந்திங்குனைமறவாத் தன்மைவருமோ தமியேற்கே.

வரும்போ மென்னு மிருநிலைமை மன்ளு தொரு தன் மைத்தாகிக், கரும்போ தேனோ முக்கனியோ வென்னவென்னுட் கலந்துநலந், தரும்பேரின்பப் பொருளேநின் றன்னைநினைந்து நெக்குருகே னிரும்போ கல்லோமரமோ வென்னிதய மியாதென் ற றியேனே. (௩)

அறியுந் தரமோ நானுன்னை யறிவுக் கறிவாய் நிற்கையிஞற், பிறியுந் தரமோ நீயென்னைப் பெம்மா னேபேரின்பமதாய்ச், செறியும் பொருணீ நின்னையன்றிச் செறியாப் பொருளுன் பெறும்பேற்றை, நெறிநின் ளுருழுக விசாரித்தா னினக்கோவி ல்லை யெனக்காமே. (௪)

எனதென் பதும்பொய் யானெனல் பொய்யெல்லா மிறந்த விடங்காட்டு, நினதென்பதும் பொய் நீயெனல்பொய் நிற்கு நிலைக்கே நேசித்தேன், மனதென்பதுமோ வென்வசமாய்வாராதைய நின்னருளோ, தனதென் பதுக்கு மிடங்காணேன் றமியேனெவ்வா றுய்வேனே. (௫)

உய்யும் படிக்குன் றிருக்கருணை யொன்றைக் கொடுத்தாலுடையாய்பாழ்ம், பொய்யு மவாவுமழுக்காறும் புடைபட் டோடு நன்னெறியா, மெய்யுமறிவுபெறும்பேறும் விளங்கு மெனக்குன் னடியார்பாற், செய்யும் பணியுங்கைகூடுஞ்சிந்தைத் துயருந் தீர்ந்திடுமே. (௬)

சிந்தைத் துயரென் ஞெருபாவி சினந்து சினந்து போர்முய்ங்க, நிந்தைக்கிடமாய்ச் சகவாழ்வை நிலையென் றுணர்ந்தே நிற்கின்றே, னெந்தப்படியுன் னருள்வாய்க்குமெனக்கெப்படி நீயருள்செய்வாய், பந்தத் துயரற் றவர்க்கெளிய பரமானந்தப் பழம் பொருளே. (௭)

பொருளைப் பூவைப்பூவையரைப் பொருளென் றெண்ணு மொருபாவி, யிருளைத் துரந்திட்டொளி நெறியை யென்னுட் பதிப்பதென்றுகொலோ, தெருளத் தெருள வன்பர் நெஞ்சந்தித்தித் திருகத் தெவிட்டாத, வருளைப் பொழியுங் குணமுகிலே யறிவா னந்தத் தாரமுதே. (௮)

ஆரா வமிர்தம் விரும்பினர்க ளறியவிடத்தை யமிர்தாக்கும், பேரா னந்த சித்தனெனும் பெரியோ யாவிக்குரியோய்கேள், காரா கிரக வலேயினிடைக் கட்டுண் டிருந்த களைகளெல்லா, மூரா லொருநாட் கையுணவேற் றுண்டாலெனக்கிங் கொழிந்திடுமே. (௯)

எனக்கென் றிருந்த வுடல்பொருளும் யானுநின வென் றீந்தவண்ண, மனைத்து மிருந்து மிலதாகவுளாய் நில்லா தழிவழக்காய், மனத்துட் புகுந்து மயங்கவுமென்மதிக்குட் களங்கம்வந்த தென்னே, தனக்கொன் றுவமை யறநிறைந்ததனியே தன்னந் தனிமுதலே. (௧0)

## ஆசையெனும்.

ஆசையெனும் பெருங்காற்றா டிலவம்பஞ்செனவுமன தலையுங்கால, மோசம்வரு மிதனலேகற்றதுங்கேட்டதுந்தூர்ந்து முத்திக்கான, நேசமுநல் வாசமும்போய்ப் புலனுயிற் கொடுமைபற்றி நிற்பரந்தோ, தேசுபழுத்தருள்பழுத்த பராபரமேநிராசையின்றேற் றெய்வமுண்டோ. (௧)

இரப்பானங் கொருவனவன் வேண்டுவ கேட்டருள் செயென வேசற் றேதான், புரப்பான்றனருணடி யிருப்பதுபோ லெங்குநிறை பொருளே கேளாய், மரப்பான்மை நெஞ்சினன் யான்

வேண்டுவகேட் டிரங்கெனவே மௌனத் தோடந்,
தரப்பான்மை யருணிறைவிலிருப்பதுவோ பராபர
மே சகசநிட்டை.　　　　(உ)

சாட்டையிற் பம்பர சாலம் போலெலா
மாட்டுவா னிறையென வறிந்து நெஞ்சமே
தேட்டமொன் றறவருட் செயலி னிற்றியேல்
வீட்டறந் துறவற மிரண்டு மேன்மையே.　　　　(ங)

தன்னெஞ்ச நினைப்பொழியா தறிவிலிநான்ஞா
னமெனுந் தன்மைபேச, வுன்னெஞ்ச மகிழ்ந்தொ
ருசொல் லுரைத்தனையே யதனை யுன்னி யுருகே
னையா, வன்னெஞ்சோ விரங்காத மரநெஞ்சோவி
ருப்புநெஞ்சோ வைர மான, கன்னெஞ்சோ வல
துமண்ணுங் கட்டிநெஞ்சோ வெனதுநெஞ்சங்கரு
திற்றுனே.　　　　(ச)

வாழி சோபனம் வாழிநல் லன்பர்கள்
சூழ வந்தரு டோற்றமுஞ் சோபன
மாழி போலரு ளையன் மௌனத்தா
ளேழை யேன்பெற்ற வின்பமுஞ் சோபனம்.　　　　(ரு)

கொடுக்கின் றோர்கள்பாற் குறைவையா தியா
னெனுங் குதர்க்கம், விடுக்கின் றோர்கள்பாற் பிரி
கிலா துள்ளன்பு விடாதே,யடுக்கின்றோர்களுக்கிர
ங்கிடுந் தண்டமி ழலங்க, றொடுக்கின் றோர்களைச்
சோதியா ததுபரஞ் சோதி.　　　　(சா)

உலக மாயையி லேயெளி யேன்றனை யுழலவிட் டனை யேயுடை யாயருளிலகு பேரின்ப வீட்டினி லென்னையு மிருத்தி வைப்பதெக் காலஞ் சொலா யெழிற்,றிலக வாணுதற் பைந்தொடி கண்ணினை தேக்க நாடகஞ் செய்தடி யார்க்கெலா, மலகிலா வினை தீர்க்கத் துசங்கட்டு மப்பனேயரு ளானந்த சோதியே. (எ)

முன்னிலைச் சுட்டொழிதியெனப் பலகாலு நெ ஞ்சேநான் மொழிந்தே னேநின், றன்னிலையைக்கா ட்டாதே யென்னையொன்றாச் சூட்டாதே சரணைன் போந்த, வந்நிலையே நிலையந்த நிலையிலே சித்திமு த்தி யனைத்துந் தோன்று, நன்னிலையீ தன்றியிலை சுகமென்றே சுகர்முதலோர் நாடினாரே. (அ)

அத்துவிதம் பெறும்பேரன் றறியாமல் யானெ னும்பே யகந்தை யோடு, மத்தமதி யினர்போல மனங்கிடப்ப வின்னமின்னம் வருந்துவேனோ, சுத் தபரி பூரணமாய் நின்மலமா யகண்டிதமாய்ச்சொ ரூபானந்த, சத்திகணீங் காதவணந் தன்மயமாய ருள் பழுத்துத் தழைத்தவொன்றே. (கூ)

தந்தை தாயுநீ யென்னுயிர்த் துணையுநீ சஞ்சல மதுதீர்க்க, வந்ததேசிக வடிவுநீ யுனையலான் மற் றொரு துணைகாணே,னந்தமாதியு மளப்பருஞ்சோ

தியே யாதியே யடியார்தஞ், சிந்தைமேவிய தாயு
மா னவனெனுஞ் சிரகிரிப் பெருமானே. (க0)

காதிலோலையை வரைந்துமேற் குமிழையுங் கரு
விவேள் கருநீலப், போதுபோன்றிடுங் கண்ணியர்
மயக்கிலெப் போதுமே தளராமன், மாதுகாதலி
பங்கனே யபங்கனே மாடமா ளிகைசூழுஞ், சேது
மேவிய ராமநா யகன்றனைச் சிந்தைசெய் மடநெ
ஞ்சே. (கக)

அண்டமுமாய்ப் பிண்டமுமா யளவிலாதவாரு
யிருக் கோருயிரா யமர்ந்தாயானுற், கண்டவரார்
கேட்டவரா ருன்னுலுன்னைக் காண்பதல்லா லென்
னறிவாற் காணப்போமோ, வண்டுளப மணிமார்
பன் புதல்வனேடு மனைவியொடுங் குடியிருந்துவ
ணங்கிப் போற்றும், புண்டரிக புரத்தினிறு தாங்
தமௌன போதாந்த நடம்புரியும் புனிதவாழ்வே.

பொறியிற் செறியைம் புலக்கனியைப் புந்திக்க
வராற் புசுந்திழுத்து, மறுகிச்சுழலு மனக்குரங்கு
மாள்வாளா விருப்பேனே, வறிவுக் கறிவாய்ப் பூர
ணமா யகண்டா னந்த மயமாகிப், பிறிவற்றிருக்கு
ம்பெருங்கருணைப் பெம்மானேயெம் பெருமானே.

உரையுணர் விறந்து தம்மை யுணர்பவ ருணர்வி
னூடே, கரையிலா வின்ப வெள்ளங் காட்டிடுமுகி

லே மாருப்,பரையெனுங்கிரணஞ் சூழ்ந்தபானுவே நின்னைப்பற்றித், திரையிலா நீர்போற் சித்தந் தெளிவனோ சிறியனேனே. (கச)

கேவல சகலமின்றிக் கிழோடு மேலா யெங்கு, மேவிய வருளின் கண்ணாய் மேவிட மேலாயின்பந் தாவிட வின்பாதீதத் தனியிடை யிருத்திவைத்த, தேவெனு மௌனி செம்பொற் சேவடி சிந்தைசெய்வாம். (கரு)

நேற்றுளா ரின்றுமாளா நின்றன ரதனைக்கண்டும், போற்றிலே னின்னை யந்தோ போக்கினேன்வீணே கால, மாற்றிலே னகண்டானந்த வண்ணலே யளவின் மாயைச், சேற்றிலே யின்னம் வீழ்ந்துதிளைக்கவோ சிறியனேனே. (கசா)

போத மென்பதே விளக்கொவ்வு மவித்தை பொய் யிருளாந், தீதி லாவிளக் கெடுத்திருட்டடவுஞ் சிக்கா, தாதலாலறி வாய்நின்ற விடத்தறியாமை, யேது மில்லையென் றெம்பிரான் சுருதியேயியம்பும். (கள)

சுருதி யேசிவா கமங்களே யுங்களாற் சொல்லு மொரு தனிப்பொரு ளளவையீ தென்னவா யுண்டோ, பொரு திரைக்கட ஞுண்மணலெண்ணினும்

புகலக், கருதவெட்டிடா நிறைபொரு ளளவையா
ர்காண்பார். (கஅ)

மின்னைப் போன்றன வகிலமென் றறிந்துமெய்
ப்பொருளா, முன்னைப் போன்றநற் பரம்பொரு
ளில்லையென் றோர்ந்து, பொன்னைப் போன்றநின்
போதங்கொண் டுன்பணி பொருந்தா, வென்னைப்
போன்றுள வேழையரைய விங்கெவரே. (கக)

தாயுந் தந்தையு மெனக்குற வாவதுஞ்சாற்றி
னுயு நீயுநின் னருளுநின் னடியரு மன்றோ
பேய னேன்றிரு வடியிணைத் தாமரைபிடித்தே
னுய னேயெனை யாளுடை முக்கணு யகனே. ( )

காந்தமதை யெதிர்காணிற் கருந்தாது செல்லு
மந்தக் காந்தத் தொன்று, தேய்ந்தவிட மெங்கே
தா னங்கேதான் சலிப்பறவு மிருக்குமாபோற், சா
ந்தபதப் பரம்பொருளே பற்றுபொரு ளிருக்குமத்
தாற் சலிக்குஞ் சித்தம், வாய்ந்தபொரு ளில்லையெ
னிற் பேசாமை நின்றநிலை வாய்க்கு மன்றே. (உக)

பொற்பு றுங்கருத் தேயக மாயதிற் பொருந்த
க், கற்பின் மங்கைய ரென்விழி கதவுபோற் கவி
னச், சொற்ப னத்தினுஞ் சோர்வின்றி யிருந்தநா
ன்சோர்ந்து, நிற்பதற்கிந்த வினைவந்தவா றென்
கொ னிமலா. (உஉ)

வந்த வாறிந்த வினைவழி யிதுவென மதிக்கத், தந்த வாறுண்டோ வுள்ளுணர் விலையன்றித் தமி யே, னொந்த வாறுகண் டிரங்கவு மிலைகற்ற நூலா, லெந்த வாறினித் தற்பரா வுய்குவே னேழை. ()

சொல்லாலும் பொருளாலுமளவை யாலுந்தொ டரவொண்ணு வருநெறியைத் தொடர்ந்துநாடி, நல்லார்க ளவையகத்தே யிருக்கவைத்தாய் நன்ன ர்நெஞ்சந் தன்னலமு நணுகுவேனோ, வில்லாளி யாயுலகோ டுயிரை யீன்றிட் டெண்ணரிய யோகி னுக்கு மிவனே யென்னக், கல்லாலின் கீழிருந்த செக்கர்மேனிக் கற்பகமே பராபரமே கைலைவா ழ்வே. (உ௪)

சாக்கிரமா நுதலினிலிந் திரியம் பத்துஞ் சத் தாதி வசனாதி வாயு பத்து, நீக்கமி லந்தக்கரணம் புருடனோடு நின்றதுமுப் பானைந்து நிலவுங்கண்ட த், தாக்கியசொப் பனமதனில் வாயுபத்து மடுத்த னசத் தாதிவச னாதியாக, நோக்குகர ணம்புருட னுடனே கூட நுவல்வரிரு பத்தைந்தா நுண்ணி யோரே. (உரு)

சுழுத்தியித யந்தனிற்பி ராணன்சித்தஞ் சொல் லரிய புருடனுடன் மூன்றதாகும், வழுத்தியநாபி யிற்றுரியம் பிராணனோடு மன்னுபுரு டனுங்கூட

வயங்கா நிர்கு, மழுத்திடு மூ லந்தன்னிற் றுரியா
தீத மதனிடையே புருடனென்றி யமருஞானம்,
பழுத்திடு பக்குவ ரறிவ ரவத்தை யைந்திற் பாங்கு
பெறக் கருவிநிற்கும் பரிசுதானே. (உசு)

இடத்தைக் காத்திட்ட சுவாவெனப் புன்புலா
விறைச்சிச், சடத்தைக் காத்திட்ட நாயினேனுன்
னன்பர் தயங்கு, மடத்தைக் காத்திட்ட சேடத்
தாள் விசேடமாய் வாழ, விடத்தைக் காத்திட்ட
கண்டத்தோய் நின்னருள் வேண்டும். (உஎ)

வாத னைப்பழக் கத்தினன் மனமந்த மனத்தா
லோத வந்திடு முறையுரைப் படிதொழி லுளவா
மேதமம்மன மாயை யென்றிடிற் கண்டவெல்லா
மாதரஞ்செயாப் பொய்யதற் கையமுண்டாமோ.

ஐய வாதனைப் பழக்கமே மனநினை வதுதான்,
வைய மீதினிற் பரம்பரை யாதினுமருவு, மெய்யி
னின்றெளிர் பெரியவா சார்வுற்று விளங்கிப்,பொ
ய்யதென்பதை யொருவிமெய் யுணறுதல்போதம்.

குலமி லான்குணங் குறியிலான் குறைவிலான்
கொடிதாம், புலமி லான்றனக் கென்னவோர் பற்
றிலான் பொருந்து, மிலமிலான்மைந்தர் மனைவியி
ல்லானெவ னவன்சஞ், சலமி லான்முத்தி தரும்
பர சிவனெனத் தருமே. (௩0)

கடத்தை மண்ணென வுடைந்தபோ தோவிந் தக் கருமச், சடத்தைப் பொய்யென விறந்தபோ தோ சொலத் தருமம், விடத்தை நல்லமிர் தாவுண்டு பொற்பொது வெளிக்கே, நடத்தைக் காட்டி யெவ் வுயிரையு நடப்பிக்கு நலத்தோய். (நக)

நானெனவு நீயெனவு மிருதன்மை நாடாமனடுவே சும்மா, தானமரு நிலையிதுவே சத்தியஞ்சத்தியமெனநீ தமிய னேற்கு, மோனகுரு வாகியுங்கை காட்டினையே திரும்பவுநான் முளைத்துத் தோன்றி, மானதமார்க் கம்புரிந்திங் கலைந்தேனே பரந்தேனே வஞ்சனேனே. (நஉ)

தன்மயஞ் சுபாவஞ் சுத்தந் தண்ணருள் வடிவஞ்சாந்த, மின்மய மான வண்ட வெளியுருவான பூர்த்தி, யென்மய மெனக்குக் காட்டா தெனையபகரிக்கவந்த, சின்மய மகண்டாகாரந் தகுதிறைதிக்க மூர்த்தம். (நந)

சிற்றரும்பன சிற்றறி வாளனே தெளிந்தான்
மற்ற ரும்பென மலரெனப் பேரறிவாகிக்
கற்றரும்பிய கேள்வியான் மதித்திடக் கதிச்சீர்
முற்றரும்பியமௌனியாய்பரத்திடைமுளைப்பான்

மயக்கு சிந்தனை தெளிவென விருநெறி வகுப்பா, னயக்குமொன்றன்பா லொன்றிலை யெனனல

வழக்கே, யியக்க முற்றிடு மயக்கத்திற் றெளிவுற
லினிதாம், பயக்க வல்லதோர் தெளிவுடை யவர்க்
கெய்தல் பண்போ. (௩௫)

அருள்வடி வேழு மூர்த்த மவைகள்சோ பான
மென்றே, சுருதிசொல்லியவாற்றாலே தொழுந்தெ
ய்வ மெல்லா மொன்றே, மருளெனக் கில்லை முன்
பின் வருநெறிக் கில்வழக்குத், தெருளின்முன் னி
லையா முன்னைச் சேர்ந்தியான் றெளிகின் றேனே.()

எத்தனை பிறப்போ வெத்தனை யிறப்போ வெளி
யனேற் கிதுவரை யமைத்த, தத்தனையெல்லா மறி
ந்தநீ யறிவை யறிவிலி யறிகிலே னந்தோ, சித்த
மும் வாக்குந் தேகமு நினவே சென்மமு மினியெ
னுலாற்று, வைத்திடிங்கென்னை நின்னடிக் குடியா
மறைமுடி யிருந்தவான் பொருளே. (௩௭)

வான்பொருளாகி யெங்குநீ யிருப்ப வந்தெனைக்
கொடுத்துநீ யாகா, தேன்பொருள் போலக் கிடக்
கின்றேன் முன்னையிருவினை வாதனையன்றோ, தீன்
பொருளான வமிர்தமே நின்னைச் சிந்தையிற் பாவ
னைசெய்யு, நான்பொரு ளானே னல்ல னல்லரசே
நானிறந்திருப்பது நாட்டம். (௩௮)

நாட்டமூன் றுடைய செந்நிறமணியே நடுவுறு
நாயக விளக்கே, கோட்டமில் குணத்தோர்க் கெ

ளியநிர்க் குணமே கோதிலா வமிர்தமேநின்னை, வா
ட்டமி னெஞ்சங் கிண்ணமாச் சேர்த்து வாய்மடுத்
தருந்தின ஞங்கே, பாட்டளி நறவ முண்டயர்ந்
ததுபோற் பற்றயர்ந் திருப்பதெந் நாளோ. (ருக)

என்னுடையுயிரே யென்னுளத்தறிவே யென்னு
டை யன்பெனுநெறியாய்,கன்னன்முக்கனிதேன்
கண்டமிர் தென்னக் கலந்தென்னை மேவிடக் கரு
ணை, மன்னிய வுறவே யுன்னைநான் பிரியா வண்ண
மென் மனமெனுங் கருவி, தன்னதுவழியற் றென்
னுழைக் கிடப்பத் தண்ணருள் வரமது வேண்டும்.

## எனக்கெனச்செயல்.

எனக்கெ னச்செயல் வேறிலை யாவுமிங் கொரு
நின், றனக்கெனத்தகு முடல்பொரு ளாவியுந் தந்
தேன், மனத்தகத்துள வழுக்கெலா மாற்றியெம்
பிரானீ, நினைத்ததெப்படி யப்படி யருளுதனீதம்.

உளவறிந் தெலா நின்செய லாமென வுணர்ந்
தோர்க், களவி லானந்த மளித்தனை யறிவிலாப்
புன்மைக், களவு நாயினேற் கிவ்வண மமைத்தனை
கருத்துத், தளருந் தன்மையிங் காரொடு புகலு
வேன் றக்கோய். (உ)

என்னைத் தானின்ன வண்ணமென் றறிகிலா வேழை, தன்னைத் தானறிந் திடவருள் புரிதியேற் றக்கோய், பின்னைத் தானின்றனருள்பெற்ற மாதவப் பெரியோர், நின்னைத்தானிகராமெனை வாழ்த்துவர் நெறியால். (ரு)

ஏத மின்றித்தன் னடியிணைக் கன்புதா னீட்டுங்
காத லன்பர்க்குக் கதிநிலை யீதெனக் காட்டும்
போத நித்திய புண்ணிய வெண்ணரும் புவன
நாத தற்பர நானெவ்வா றுய்குவே னவிலாய். ()

வேத மெத்தனை யத்தனை சிரத்தினும் விளங்கும்
பாத நித்திய பரம்பர நிரந்தர பரம
நாத தற்பர சிற்பர வடிவமாய் நடிக்கு
நீத நிற்குண நினையன்றி யொன்று நானினையேன்.

நெறிக டாம்பல பலவுமா யந்தந்த நெறிக்காஞ், செறியுந் தெய்வமும் பலபல வாகவுஞ் செறிந்தா, லறியுந் தன்மையிங் காருனை யறிவினலறிந்தோர், பிறியுந் தன்மையில் லாவகை கலக்கின்ற பெரியோய். (சு)

பெரிய வண்டங்க ளெத்தனை யமைத்ததிற் பிறங்கு, முரிய பல்லுயி ரெத்தனை யமைத்ததற் குறுதி, வருவதெத்தனையமைத்தனை யமைத்தருள்வளர்க்கு, மரிய தத்துவவெனக்கிந்தவண்ணமேனமைத்தாய். (எ)

கணமதேனுநின் காரணந் தன்னையே கருத்தி, லிணையு மாதவர்க் கானந்த முதவினை யொன்றுங், குணமி லாதபொய் வஞ்சகனுக்கெந்தை நிர்க்குண மா, மணமு லாமலர்ப் பதந்தரின் யாருனை மறுப் பார். (அ)

கன்னன் முக்கனி கண்டுதேன் சருக்கரை கல ந்த, தென்ன முத்தியிற் கலந்தவர்க் கின்பமாயிரு க்கு, நன்னலத்தநின் னற்பதந் துணையென நம்பச், சொன்ன வர்க்கெனு லாங்கைம்மா றில்லையென் சொல்வேன். (௯)

தந்தை தாய்தமர் மகவெனு மவையெலாஞ் சக த்திற், பந்தமாமென்றே யருமறை வாயினுற் பகர் ந்த, வெந்தை நீயெனை யின்னமவ் வல்லலி லிருத் திற், சிந்தை தான்றெளிந் தெவ்வண முய்வணஞ் செப்பாய். (௧0)

துய்யன் றண்ணருள் வடிவினன் பொறுமை யாற் றுலங்கு, மெய்யனென்றுனை யையனேயடை ந்தனன்மெத்த, நொய்ய னுண்ணிய வறிவில னொ ன்றைநூ றாக்கும், பொய்ய னென்றெனைப் புறம் விடி னென்செய்வேன் புகலாய். (௧௧)

ஓன்றதாய்ப்பல வாயுயிர்த் திரட்கெலா முறுதி, யென்றதா யென்று முள்ளதாயெவற்றினுமிசைய

நின்ற தாய்நிலை நின்றிடு மறிஞவென்னெஞ்ச, மன்
றதாயின்ப வுருக்கொடு நடித்திடின் வாழ்வேன்.

தனியி ருந்தருட் சகசமே பொருந்திடத் தமியேற்
கினியி ரங்குதல் கடனிது சமயமென் னிதயக்
கனிவு மப்படி யாயின தாதலாற் கருணைப்
புனித நீயறி யாதவொன் றுள்ளதோ புகலாய்.

திருந்து சீரடித் தாமரைக் கன்புதான் செய்
யப், பொருந்துநா ளல்ல புண்ணியஞ்செய்யுநாள்
பொருந்தா, திருந்தநாள்வெகு தீவினையிழைத்த
நா ளென்று, லருந்த வாவுனைப் பொருந்துநா ளெ
ந்தநா ளடிமை. (௧௪)

பின்னு முன்னுமாய் நடுவுமா யாவினும் பெரிய,
தென்னுந் தன்மையா யெவ்வுயிர்த் திரளையு மிய
க்கி, மன்னுந்தண்ணருள் வடிவமே யுனக்கன்புவை
த்துந், துன்னு மின்னலேன் யானெனு மகந்தை
யேன் சொல்லாய். (௧௫)

மின்னை யன்னபொய் வாழ்க்கையே நிலையென
மெய்யா, முன்னை நான்மறந் தெவ்வண முய்வண
முறையாய், முன்னை வல்வினை வேரற முடித்தெ
ன்று முடியாத், தன்னைத் தன்னடியார்க்கருள் புரி
ந்திடுந் தக்கோய். (௧௬)

எம்ப ராபர வெம்முயிர்த் துணைவவென் றிறை ஞ்சு, மும்ப ரிம்பர்க்கு முளக்கணே நடிக்கின்று யுன்ற, னம்பொன் மாமலர்ப் பதத்தையே துணை யென வடிமை, நம்பி னேனினிப் புரப்பதெக் கால மோ நவிலாய். (௧௭)

பாடி யாடிநின் றிரங்கிநின் பதமலர் முடிமேற், சூடி வாழ்ந்தன ரமலநின் னடியார்யான்றொழும்ப, னாடி யேயிந்த வுலகத்தை மெய்யென நம்பித், தே டினேன்வெறுந் தீமையே யென்னினிச்செய்வேன்.

களவு வஞ்சனை காமமென் றிவையெலாங் கா ட்டு, மளவு மாயையிங் காரெனக் கமைத்தன ரை யா, வுளவிலேயெனக் குள்ளவா றுணர்த்தினுன் னடிமை, வளரு மாமதி போன்மதிதளர்வின்றி வா ழ்வேன். (௧௯)

வான நாயக வானவர் நாயக வளங்கூர்
ஞான நாயக நான்மறை நாயக நலஞ்சேர்
மோன நாயக நின்னடிக் கன்பின்றி முற்றுந்
தீனனாயகம் வாடவோவென்செய்வேன் செப்பாய்.

ஏத மற்றவர்க் கின்பமே பொழிகின்ற விறையே
பாத கக்கருங் கன்மனங் கோயிலாப் பரிந்து
சூத கத்தனா யாதினு மிச்சைமேற் றோன்றும்
வாத னாக்கிட மாயினே னெவ்வணம் வாழ்வேன்.

தெளிவோ டைகையோ வறிகிலா னறிவிலான்சிறி து, மளியி லானிவன் றிருவருட் கயலென வறிந் தோ, வெளிய னுக்கினை யென்செய்வே னென்செ ய்வே னெல்லா, வொளியு மாய்நிறை வெளியுமா யாவுமா முரவோய். (உஉ)

கண்ணி னுண்மணி யென்னவே தொழுமன்பர் கருத்து, னண்ணு கின்றநின் னருளெனக் கெந்த நாணுகு, மண்ணு விண்ணுமற் றுள்ளன பூதமு மாறுப், பெண்ணுமாணுமா யல்லவாய் நிற்கின்ற பெரியோய். (உ௩)

சகமெ லாந்தனி புரந்தனை தகவுடைத் தக்கோ
ரகமெ லாநிறைந் தானந்த மாயினை யளவின்
மகமெ லாம்புரிந் தோரைவாழ் வித்தனை மாறு
விகமெலாமெனைப் பிறந்திடச்செய்ததேனெந்தாய்

ஏய்ந்த நல்லருள் பெற்றவர்க் கேவலா யெளி யேன், வாய்ந்த பேரன்பு வளர்க்கவுங் கருணைநீ வளர்ப்பா, யாய்ந்த மாமறை யெத்தனை யத்தனை யறிவாற், றேய்ந்தபேர்கட்குத் தோன்றிலாத்தோ ன்றலாந் தூயோய். (உ௫)

தக்க நின்னருட் கேள்வியோ சிறிதின்றித் தமி யேன், மிக்க தெய்வமே நின்னின்ப வெள்ளத்தில் விழே, னெக்க றுய்தந்தை மகவெனும் பாசக்கட்

டுடனே, துக்க வெள்ளத்தி லாழ்கின்றே னென்
செய்வான் றுணிந்தேன். (உ௬)

பவம்பு ரிந்திடும் பாவியேற் கருணிலை பதியத்
தவஞ்செயும்படி தயவுசெய் தருள்வதே கரும
மவம்பு ரிந்திடார்க் கானந்த வமிர்தத்தை யளிக்க
நவங்கொடத்துவத்திரைஎறிகடலெனுநலத்தோய்.

உற்றுணர்ந்தெலா நீயல தில்லையென் றுனையே,
பற்றுகின்றன ரெந்தைநின்னடியர்யான்பாவி, மூற்
று மாயமாஞ் சகத்தையே மெய்யென மூதரு,
னற்றி ருந்திடத் தொழில் செல்வான் றனைநிகரா
னேன். (உ௮)

## மண்டலத்தின்.

மண்டலத்தின் மிசையொருவன் செய்த வித்
தை யகோவெனவும் வாரணுதி, யண்டமவை யடுக்
கடுக்கா யந்தரத்தினிறுத்துமவதானம்போல, வெ
ண்டருநல் லகிலாண்ட கோடியைத்தன் னருள்வெ
ளியி லிலகவைத்துக், கொண்டுநின்ற வற்புதத்தை
யெவராலு நிச்சயிக்கக் கூடாவொன்றை. (க)

ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங்கடந்
தேழாம் யோகபூமி, நின்று தெளிந் தவர்பேசா

மௌனநியா யத்தைநிறை நிறைவைத் தன்னை,யன்றியொரு பொருளிலதா வெப்பொருட்குந் தான்முதலா யசல மாகி, யென்றுமுள்ள வின்பத்தைத் தண்ணென்ற சாந்தபத வியற்கை தன்னை. (உ)

பதமூன்றுங் கடந்தவர்க்கு மேலான ஞானபதப் பரிசு காட்டிச், சதமாகி நிராலம்ப சாக்ஷியதா யாரம்பத் தன்மையாகி, விதம்மியாவுங் கடந்தவித்தை யெனுமிருளைக் கீண்டெழூந்துவிமலமாகி, மதமாறுங் காணாத வானந்த சாகரத்தை மௌனவாழ்வை. (௩)

வாழ்வனைத்துந் தந்தவின்ப மாகடலை நல்லமிர்தை மணியைப் பொன்னைத், தாழ்வறவென்னுளத்திருந்த தத்துவத்தை யத்துவித சாரந் தன்னைச், சூழ்பெரும்பே ரொளியையொளி பரந்தபர வெளியையின்பச் சுகத்தை மாறா, வேழுலகுங் கலந்தின்றாய் நானையா யென்றுமா மியற்கைதன்னை. (௪)

தன்னையறிந் தவர்தம்மைத் தானாகச் செய்தருளுஞ் சமத்தை லோக, மின்னைநிகர்த் திடவழியாச் சொரூபானந் தச்சுடரை வேதமாதி, யென்னையறி வரிதென்னச் சமயகோடிகளிடைய விடையறாத, பொன்னைவிரித் திடுமுலகத் தும்பரும்பரும்பரவும் புனிதமெய்யை. (௫)

பரவரிய பரசிவமா யதுவெனலாய் நானெனலா
ய்ப் பாச சாலம், விரவிநின்ற விசித்திரத்தை யை
க்யபதத் தினிதிருந்த விவேகந் தன்னை, யிரவுபக
னினைப்புமறப் பெனுந்தொந்த மறியார்க ளிதயம்
வேதச், சிரமெனவாழ் பராபரத்தை யானந்த நீங்
காத சிதாகா சத்தை. (௬)

அத்துவித வனுபவத்தை யனந்தமறை யின்ன
மின்ன மறியே மென்னு, நித்தியத்தை நிராமயத்
தை நிர்க்குணத்தைத் தன்னருளா னினைவுக்குள்
ளே, வைத்துவைத்துப் பார்ப்பவரைத் தானுகவெ
ந்நாளும் வளர்த்துக் காக்குஞ், சித்தினைமா தூவெ
ளியைத் தன்மயமா மானந்தத் தெய்வந் தன்னை ()

தன்னிலே தானுக நினைந்துகனிந் தவிழ்ந்துசுக
சமாதியாகப், பொன்னிலே பணிபோலு மாயை
தரு மனமேயுன் புரைகடேர்ந்தா, யென்னிறே யா
ன்பிழைப்பே னெனக்கினியா ருன்போல்வா ரில்லை
யில்லை, யுன்னிலோ திருவருளுக் கொப்பாவா யெ
ன்னுயிர்க்கோ ருறவுமாவாய். (அ)

உறவுடலை யெடுத்தவரிற் பிரமாதி யேனுமுனை
யொழிந்துதள்ளற், கறவுமரி தரிதன்றேவிகபாமு
முன்னையன்றி யாவதுண்டோ, வறிதிலுன்னையசத்
தென்னல் வழக்கன்று சத்தெனவும் வாழ்த்துவே

னென், சிறுமைகெடப் பெருமையினின் சென்ம
தேயத்தினினீ செல்லல் வேண்டும். (௯)

வேண்டியநா ளென்றோடும் பழகியநீ யெனைப்
பிரிந்த விசாரத் தாலே, மாண்டுகிடக் கினுமந்த
வெல்லையையும் பூரணமா வணக்கஞ்செய்வே, னுண்
டகுரு மௌனிதன்று லியானெனதற் றவனருணு
றுவேன் பூவிற், காண்டகவெண் சித்திமுத்தி யெ
னக்குண்டா முன்றலென் கவலைதீர்வேன். (௧0)

தீராத வென்சனன வழக்கெல்லாந் தீருமிந்தச்
சனனத்தோடே, யாரேனு மறிவரிய சீவன்முத்தி
யுண்டாகு மையவையே, காரோனுங் கற்பகப்பூங்
காவேனு முனக்குவமை காட்டப் போமோ, பா
ராதி யாகவெழு மண்டலத்தி னின்மகிமை பகர
லாமோ. (௧௧)

---

## பாயப்புலி.

பாயப் புலிமுன மான்கன்றைக் காட்டும்படி
யகில மாயைப் பெரும்படைக் கேயிலக் காவெனை
வைத்தனையோ, நீயெப்படிவருத் தாலுநன்றேநின்
பெருங்கருணை, தாயொத் தடியர்க் கருள்சச்சி தா
னந்த தற்பரமே. (௧)

தற்பரமாஞ் சிற்பரமாகி மன்றந் தனினடித்து,
நிற்பரம்போருகன் மால்பணி நீதரென் னெஞ்சக

மாங், கற்பரந் தாங்குக் கரைந்திட வானொத்த கா
ட்சிநல்கும், பொற்பர மாயென் வினைக்கருந்தா
தைப் பொடிசெய்ததே. (உ)

செய்யுந் தவஞ்சற்று மில்லாதநானுன் றிருவடி
க்கே, கொய்யும் புதுமலரிட்டு மெய்யன்பர் குழா
த்துடனே, கையுஞ் சிரமிசைக் கூப்பிநின்றாடிக்கசி
ந்துருகி, யுய்யும் படிக்கருள் செய்வதென் றோபுலி
யூரத்தனே. (ங)

அத்தனைச் சிற்றம் பலவனை யென்னுயி ராகி
நின்ற, சுத்தனைச்சுத்த வெளியா னவனைச் சுகவடி
வா, நித்தனை நித்த நிராதார மாகிய நின்மலனை,
எத்தனை நாள்செல்லுமோமன மேகண் டிறைஞ்சு
தற்கே. (ச)

கண்டா ருளத்தினிற் காலூன் றிப்பெய்யுங் கரு
ணைமுகி, லண்டார் புரத்துக்கு மன்பர் வினைக்கு
மசனிதன்னைக், கொண்டாடி னார்முனங் கூத்தாடு
மத்தன்றன் கோலமெல்லாம், விண்டாலம்மாவொ
ன்றுங் காணாது வெட்ட வெறுவெளியே. (ரு)

வெளியான நீயென் மனவெளியூடு விரவினையா,
லொளியாருங் கண்ணு மிரவியும்போனின் றுலாவு
வன்கா, ணளியாருங் கொன்றைச் சடையாட வம்
புலி யாடக்கங்கைத், துளியாடமன்று ணடமாடு
முக்கட் சுடர்க்கொழுந்தே. (சு)

கொழுந்தா துறைமலர்க் கோதையர் மோகக்கு ரைகடலி, லழுந்தாத வண்ணநின் பாதப்புணை தந் தருள்வதென்றோ, வெழுந்தா தரவுசெயெம்பெரு மானென் றிறைஞ்சி விண்ணோர், தொழுந்தாதை யேவெண் பொடிபூத்த மேனிச் சுகப்பொருளே.()

சுகமாகு ஞானந் திருமேனியாநல்ல தொண்டர் தங்க, ளகமேபொற் கோயி லெனமகிழ்ந் தேமன் றளாடியகற், பகமேயுன் பொன்னடி நீழல்கண்டா லன்றிப் பாவிக்கிந்தச், செகமாயையானவ ருங் கோடை நீங்குந் திறமிலையே. (அ)

நீங்கா துயிருக் குயிராகி நின்ற நினையறிந்தே, தூங்காமற் றூங்கினல் லாதே யெனக்குச் சுகமு முண்டோ, வோங்கார மாமைந் தெழுத்தாற் புவ னத்தை யுண்டுபண்ணிப், பாங்கா நடத்தும் பொ ருளே யகண்ட பரசிவமே. (கூ)

சிவமாதி நான்முகக் கோவந்த மாமறை செப்பு கின்ற, நவமா யிலங்கிய வொன்றே யிரண்டற்ற நன்மை பெறு, தவமே தருமைம் புலப்பொறிக்கே யென் னறிவுபொல்லாப், பவமேவிளைக்கவென்றோ வெளி மானெனப் பாய்ந்ததுவே. (கய)

ஆறுத் திலங்கு சமயங்க ளாறுக்கு மாழ்கட லாய்,வீறிப்பரந்த பரமான வானந்த வெள்ளமோ

ன்று, தேறித் தெளிந்து நிலைபெற்ற மாதவர்சித்த த்திலே, யூறிப் பரந்தண்ட கோடியெல்லா நின்று லாவியதே. (கக)

நடக்கினு மோடினு நிற்கினும் வேறொரு நாட்ட மின்றிக், கிடக்கினுஞ் செவ்வி திருக்கினு நல்லருட் கேள்வியிலே, தொடக்குமென் னெஞ்ச மனமற்ற பூரணத் தொட்டிக்குளே, முடக்குவன் யான்பர மானந்த நித்திரை மூடிடுமே. (கஉ)

எண்ணாத தெண்ணிய நெஞ்சே துயரொழி யெ ன்னிரண்டு, கண்ணே யுறங்குறங் கென்னுனைமுக் கட் கருணைப்பிரான், றண்ணார் கருணை மௌனத் தினுன்முத்தி சாதிக்கலா, நண்ணாத தொன்றில்லை யெல்லா நலமு நமக்குளவே. (கங)

நானென் றொருமுத லுண்டென்ற நான்றலை நாணவென்னுட், டானென் றொருமுதல் பூரணமா கத் தலைப்பட் டொப்பி, லானந்தந் தந்தென் னறி வையெல் லாமுண் டவசநல்கி, மோனந் தனைவிளை த் தாலினி யாது மொழிகுவதே. (கச)

தானந் தவஞ்சற்று மில்லாத நானுண்மை தான றிந்து, மோனம் பொருளெனக் கண்டிடச்சற்குரு மோனனுமாய்த், தீனன் றனக்கிங் கிரங்கினையேயி னிச் சிந்தைக்கென்று, மானந்தந் தானல்லவோ பரமேசச்சி தானந்தமே. (கரு)

எனக்கோர் சுதந்தர மில்லையப்பா வெனக்கெய்
ப்பில் வைப்பாய், மனக்கோ தகற்றும் பரம்பொ
ருளேயென்னை வாழ்வித்திட, நினக்கேபரநின்னைநீ
ங்காதபூரண நீள்கருணை, தனக்கே பரமினிச் சும்
மாவிருக்கத் தருமென்றுமே. (கசு)

இடம்பெறு வீடுமின் னார்சேய் சகமுமிருநிதியு,
முடம்பைவிட் டாருயிர் போம்போதுகூடி யுடன்
வருமோ, மடம்பெறு மாயை மனமே யினியிங்கு
வாமௌனி, திடம்பெற வைத்தமௌனஞ்சகாயந்
தெரிந்துகொள்ளே. (கஎ)

நாற்றச் சடலத்தை யொன்பது வாச னடைம
னையைச், சோற்றுப் பசையினை மும்மல பாண்டத்
தொடக் கறையை, யாற்றுப் பெருக்கன்ன கன்ம
ப்பெருக்கை யடர்கிருமிச், சேற்றைத் துணையென்
றநாய்க்குமுன் டோகதி சேர்வதுவே. (கஅ)

பொய்யா ருலக நிலையல்ல கானற்புனலெனவே,
மெய்யா வறிந்தென்ன வென்னுலிதனை விடப்படு
மோ, கையான் மௌனந் தெரித்தேகல் லானிழற்
கண்ணிருந்த, வையாவப் பாவென் னரசேமுக்க
ண்ணுடை யாரமுதே. (கசு)

ஆரா வமுதென மோனம் வகித்துக்கல் லானி
ழற்கீழ்ப், போராது நால்வருடன்வாழ்முக் கண்ணு

டைப் பேரரசே, நீரா யுருகவுள் ளன்புதந் தேசுக
நிட்டையைநீ, தாரா விடினென் பெருமூச்சுத் தா
னத் தனஞ்சயனே. (உ0)

வாயுண்டு வாழ்த்த மௌனஞ்செய்போதுமௌ
னவருட், டாயுண்டு சேயென்னவென்னைப்புரக்கச்
சதானந்தமா, நீயுண்டு நின்னைச் சரண்புகநானுண்
டென் னெஞ்சமையா, தீயுண்டிருந்த மெழுகல
வோகதி சேர்வதற்கே. (உக)

கல்லா லெறிந்துங்கை வில்லா லடித்துங் கனிம
துரச், சொல்லாற் றுதித்துநற் பச்சிலை தூவியுந்
தொண்டரினை, மெல்லாம் பிழைத்தன ரன்பற்றநா
னினி யேதுசெய்வேன், கொல்லா விரதியர் நேர்நி
ன்ற முக்கட் குருமணியே. (உஉ)

முன்னிலைச் சுட்டொழி நெஞ்சேநின் போதமு
ளைக்கிலையோ, பின்னிலைச் சன்மம் பிறக்குங் கண்
டாயிந்தப் பேய்த்தனமேன், றன்னிலையேநில்லுதா
னே தனிச்சச்சி தானந்தமா, நன்னிலை வாய்க்கு
மெண் சித்தியுங் காணு நமதல்லவே. (உ௩)

சொல்லான மௌன மௌனமென் றேசொல்
லிச் சொல்லிக் கொண்ட, தல்லான் மனமறப் பூர
ணநிட்டையி லாழ்ந்த துண்டோ, கல்லாதமூடனி
னியென்செய் வேன்சகற் காரணமாம், வல்லாள
ஞன மௌனச தானந்த மாகடலே. (உச)

ஆரண மாகம மெல்லா முரைத்த வருண்மௌன, காரண மூலங்கல் லாலடிக் கேயுண்டு காணப் பெற்றுற், பாரணங் கோடு சுழனெஞ்ச மாகியபா தரச, மாரண மாய்விடு மெண்சித்தி முத்தியும்வா ய்த்திடுமே. (உரு)

சித்த மவுனி வடபான் மவுனிநந் தீபகுண்ட, சுத்தமவுனி யெனுமூ வருக்குந் தொழும்பு செய்து, சத்தமவுன முதன்மூன்று மௌனமுந் தான்படைத்தே, னித்த மவுனமல் லாலறி யேன்மற்றை நிட்டைகளே. (உசா)

கண்டே னினதரு ளவ்வருளாய் நின்று காண்பதெல்லா, முண்டே யதுவு நினதாக்கி னேனுவட் டாதவின்ப, மொண்டே யருந்தி யிளைப்பாறி னேனல்ல முத்திபெற்றுக், கொண்டேன் பராபரமே யெனக் கேதுங் குறைவில்லையே. (உஎ)

மேற் கொண்ட வாயுவுங் கீழ்ப்பட மூலத்துவெந்தழலைச், சூற்கொண்ட மேக மெனவூமை நின்று சொரிவதையென், றுற்கண்ட தன்று மௌனோப தேசி யளிக்கை யினிப், பாற்கண்டு கொண்டனன் மேலேயமிர்தம் பருகுவனே. (உஅ)

சொல்லாற் றொடர்பொரு ளாற்றொடராப்பரஞ் சோதி நின்னை, வல்லாளர் கண்டவழி கண்டிலேன் சகமார்க் கத்திலுஞ், செல்லா தென் சிந்தைநடுவே

கிடந்து திகைத்து விம்மி, யல்லா னதுபகலான
தும் வாய்விட் டரற்றுவனே. (உகூ)

அறியாத வென்னை யறிவாயு நீயென் றகம்புற
மும், பிரியாதறிவித்தபேரறி வாஞ்சுத்தப்பேரொ
ளியோ, குறியாத வானந்தக் கோவோ வமுதருள்
குண்டலியோ, சிறியேன் படுந்துயர் கண்டுகல்லா
ணிழற் சேர்ந்ததுவே. (௩௰)

எல்லா முதவு முனையொன்றிற் பாவனையேனுஞ்
செய்து, புல்லா யினுமொரு பச்சிலை யாயினும்
போட் டிறைஞ்சி, நில்லேனல் யோக நெறியுஞ்செ
யேனரு ணீதயொன்றுங், கல்லேனெவ் வாறு பர
மே பரகதி காண்பதுவே. (௩க)

ஒன்றுந் தெரிந்திட வில்லையென் னுள்ளத்தொ
ருவனெனக், கென்றுந் தெரிந்த விவையவை கேளி
ரவும்பகலுங், குன்றுங் குழியும் வனமு மலையுங்கு
ரைகடலு, மன்று மனையு மனமாதி தத்துவமாயை
யுமே. (௩உ)

பழுதுண்டு பாவையர் மோக விகாரப் பரவை
யிடை, விழுகின்ற பாவிக்குந் தன்றுட்புணையைவி
யந்தளித்தான், றொழுகின்ற வன்ப ருளங்களிகூர
த்துலங்குமன்று, ளெழுகின்ற வானந்தக் கூத்த
னென்கண்மணி யென்னப்பனே. (௩௩)

அழுக்கார்ந்த நெஞ்சுடை யேனுக் கையாநின்னருள்வழங்கி, னிழுக்காகு மென்றெண்ணி யோவிரங்காத வியல்புகண்டாய், முழுக்காத லாகி விழிநீர் பெருக்கிய முத்தரெனுங், குழுக்காண நின்றுநடமாடுந் தில்லைக் கொழுஞ்சுடரே. (௩௪)

ஆலம்படைத்த விழியார்கண் மால்கொண்டவர்செயிந்த்ர, சாலம் படைத்துத் தளர்ந்தனையேயென்றுந் தண்ணருள்கூர், கோலம் படைத்துக்கல்லாலடிக் கீழ்வைகுங் கோவுக்கன்பாங், காலம்படைக்கத் தவம்படை யாதென்கொல் கன்னெஞ்சமே.()

சும்மா விருக்கச் சுகஞ்சுக மென்று சுருதியெல்லா, மம்மா நிரந்தரஞ் சொல்லவுங் கேட்டு மறிவின்றியே, பெம்மான் மௌனி மொழியையுந் தப்பியென் பேதைமையால், வெம்மாயக் காட்டி லலைந்தேனந் தோவென் விதிவசமே. (௩௬)

தினமே செலச்செல வாழ்நாளு நீங்கச் செகத்திருள்சொற், பனமே யெனவெளி கண்டே யிருக்க்வும் பாசபந்த, வினமேதுணையென் றிருந்தோநமன்வரி னென்செய்குவோ, மனமேநம் போலவுண்டோசுத்த மூடரிவ்வையகத்தே. (௩௭)

கடலைத் தனைமலை யெத்தனை யத்தனை கன்மமதற், குடலைத் தனையத் தனைகடனுண்மனை லொ

க்குமிந்தச், சடலத்தை நான்விடு முன்னே யுனைவ ந்து சாரவிருட், படலத்தை மாற்றப் படாதோநி றைந்த பராபரமே. (௩அ)

நினையு நினைவு நினையன்றி யில்லை நினைத்திடுங் கால், வினையென் றொருமுத னினையல்லாது விளை வதுண்டோ, தனையுந் தெளிந்துன்னைச் சார்ந்தோ ர்க ளுள்ளச்செந் தாமரையா, மனையும்பொன்மன் றமு நின்றாடுஞ் சோதி மணிவிளக்கே. (௩௯)

உள்ளத் தையுமிங் கெனையுநின் கையினி லொ ப்புவித்தும், கள்ளத்தைச் செய்யும் வினையால்வரு ந்தக் கணக்குமுண்டோ, பள்ளத்தில் வீழும் புன ல்போற் படிந்துன் பரமவின்ப, வெள்ளத்தின்மூழ் கினர்க் கேயெளி தாந்தில்லை வித்தகனே. (௪௦)

கள்ளம் பொருந்து மடநெஞ்ச மேகொடுங்கால ர்வந்தா, லுள்ளன் பவர்கட்குண் டோவில்லையேயு லகீன்றவன்னை, வள்ளம் பொருந்து மலரடி காண மன் றாடுவின்ப, வெள்ளச் செம்பாதப் புணையே யல் லாற்கதி வேறில்லையே. (௪௧)

தன்மய மான சுபாவத்தின்மெள்ளத் தலைப்படு ங்கான், மின்மயமான சகம்யா துரைத்தென் வெ ளியிலுய்த்த, சின்மய முத்திரைக் கையேமெய்யா

கத் தெளிந்தநெஞ்சே, நின்மய மென்மய மெல்லா
நிறைந்த நிராமயமே. (சஉ)

ஆயுங்கலையுஞ் சுருதியுங் காண்டற் கரியவுனைத்,
தோயும் படிக்குக் கருணைசெய்வாய்சுக வான்பொ
ருளே, தாயும் பிதாவுந் தமருங் குருவுந் தனிமுத
லு, நீயும் பரையுமென் றேயுணர்ந்தேனிது நிச்ச
யமே. (சங)

அல்லும் பகலு முனக்கே யபய மபயமென்று,
சொல்லுஞ் சொலின்னந் தெரிந்ததன் றோதுதிப்
பார்கண்மனக், கல்லுங் கரைக்கு மௌன வுனது
கருணையென்பாற், செல்லும் பொழுதல்லவோசெ
ல்லு வேனந்தச் சிற்சுகத்தே. (சச)

எல்லாஞ் சிவன்செய லென்றறிந் தாலவ னின்
னருளே, யல்லாற் புகலிடம் வேறுமுண் டோவது
வேநிலையா, நில்லாயுன் னுற்றமி யேற்குக் கதியுண்
டிந் நீணிலத்திற், பொல்லா மயக்கத்தி லாழ்ந்தா
வதென்ன புகனெஞ்சமே. (சரு)

ஒளியே யொளியி னுணர்வே யுணர்வி னுவகை
பொங்குங், களியே களிக்குங் கருத்தே கருத்தை
க்கவளங்கொண்ட, வெளியே வெளியின் விளைசுக
மேசுகர் வீறுகண்டுந், தெளியேன் றெளிந்தவரை
ப்போற்றி டேனென்ன செய்குவனே. (சசு)

மறக்கின்ற தன்மை யிறத்தலொப் பாகு மனமு
தொன்றிற், பிறக்கின்ற தன்மை பிறத்தலொப் பா
குமிப் பேய்ப்பிறவி, யிறக்கின்ற வெல்லைக் களவில்
லையேயிந்தச் சன்மவல்ல, றுறக்கின்ற நாளெந்த
நாள்பர மேநின் றொழும்பனுக்கே. (சஎ)

காட்டியவந்தக் கரணமு மாயையிக் காயமெ
ன்று, சூட்டிய கோலமு நானு வியங்கத் துறையி
தனு, ளூட்டிய நான்றனக் கென்றே ரறிவற்ற நா
னிவற்றைக், கூட்டிநின் றாட்டினையேபர மேநல்ல
கூத்திதுவே. (சஅ)

பொல்லாத மாமர்க் கடமன மேயெனைப் போ
லடுத்த, வெல்லாற்றை யும்பற்றிக் கொண்டனையே
யென்னை நின்மயமா, நில்லா யருள்வெளி நீநானிற்
பேனரு ணிட்டையொரு, சொல்லாற்பதிந்து பரிபூ
ரணனந்தந் தோய்குவனே. (சகூ)

வாராய்நெஞ் சேயுன்றன் றுன்மார்க்கம்யாவை
யும் வைத்துக்கட்டிங், காரா யடிக்கடி சுற்றுகின்
றாயுன் னவலமதிக், கோராயிரம்புத்தி சொன்னுலு
மோர்கிலை யோகெடுவாய், பாராயுனைக் கொல்லு
வேன்வெல்லு வேனருட் பாங்குகொண்டே. (நிO)

மாதத்தி லேயொரு திங்களுண்டாகி மடிவதை
நின், போதத்தி லேசற்றும் வைத்திலையே வெறும்

புன்மைநெஞ்சே, வேதத்திலேதர்க்கவாதத்திலே விளங் காதுவிந்து, நாதத்திலேய்டங் காதந்தவா ன்பொரு ளடிக்கொள்ளே (ருக)

எங்கும் வியாபித் துணர்வா யுனக்கென் னிதய த்துள்ளே, தங்குந் துயரந் தெரியாத வண்ணந்த டைசெய்ததா, ரங்கங் குழைந்துள் ளுருகுமன்பா ளர்க் கணைகடந்து, பொங்குங் கருணைக் கடலே சம்பூரண போதத்தனே. (ருஉ)

வையக மாதர் சுகத்தையும் பொன்னையு மாயை மல, மெய்யையு மெய்யென்று நின்னடியார்தம் வி வேகத்தையு, மையமில் வீட்டையு மெய்ந்நூலையும் பொய்ய தாகவெண்ணும், பொய்யர்தந் நட்பை விடுவதென் றேபரி பூரணமே. (ருங)

அளியுங் கனியொத் தருவினை யானொந் தயர்வு றுவேன், றெளியும் படிக்கிப் பரிபாக காலமுஞ்சி த்திக்குமோ, வொளியுங் கருணையு மாறாத வின்ப மூமோருருவாய், வெளிவந் தடியார் களிக்கநின்று டும் விழுப்பொருளே. (ருச)

அடையார் புரஞ்செற்ற தேவேநின் பொன்ன டிக் கன்புசற்றும், படையாத வென்னைப் படைத் திந்தப் பாரிற் படர்ந்தவினைத், தடையாற் றளேயி

ட்டு நெஞ்சம் புண்ணுகத் தளரவைத்தா,யுடையா
யுடைய படியன்றி யான்செய்த தொன்றில்லையே.

ஆடுங் கறங்குந் திரிகையும்போல வலைந்தலைந்து,
காடுங் கரையுந் திரிவதல் லானின் கருணைவந்து,
கூடும் படிக்குத் தவமுயலாத கொடிய ரெமன்,
றேடும் பொழுதென்ன செய்வார் பரானந்த சிற்சு
டரே. (ருசு)

கற்றும் பலபல கேள்விகள் கேட்டுங் கறங்கெ
னவே, சுற்றுந் தொழில் கற்றுச்சிற் றின்பத்தூ
சுழலினென்னுங், குற்றங் குறைந்து குணமே வி
மன்பர் கூட்டத்தையே, முற்றுந் துணையென ந
புகண் டாய்சுத்த மூடநெஞ்சே. (ருஎ)

நீயென நானென வேறில்லை யென்னு நினைவரு
ளத், தாயென மோன குருவாகி வந்து தடுத்தடி
மைச், சேயெனக் காத்தனை யேபர மேநின் றிருவ
ருளுக், கேயென செய்யுங்கைம் மாறுளதோசுத்த
வேழையனே. (ருஅ)

ஆத்திரம் வந்தவர் போலலையாம லரோகதிட,
காத்திரந் தந்தென்னை யேயன்னை போலுங்கருணை
வைத்திம், மாத்திர முன்னின் றுணர்த்தினை யே
மெள ளுயினிநான், சாத்திரஞ் சொன்ன படியிய
மாதியுஞ் சாதிப்பனே. (ருகூ)

## உடல்பொய்யுறவு.

நேரிசைவெண்பா.

உடல்பொய் யுறவாயி னுண்மையுறவாகக், கட
வாரார் தண்ணருளேகண்டாய் - திடமுடனே,யுற்
றுப்பார் மோன னொருசொல்லே யுண்மைநன்றுப்,
பற்றிப்பார் மற்றவெல்லாம் பாழ். (க)

பாராதி பூதமெல்லாம் பார்க்குங்கா லப்பரத்
தின், சீராக நிற்குந் திறங்கண்டாய் - நேராக, நிற்
குந்திருவருளி னெஞ்சேயா நிற்பதல்லாற், சற்கு
நெறி யாதினிமேற் காண். (உ)

மெய்யான தன்மை விளங்கினல் யார்க்கேனும்,
பொய்யான தன்மை பொருந்துமோ - வையாவே,
மன்னு நிராசையின்னம் வந்ததல்ல வுன்னடிமை,
யென் னுநிலை யெய்துமா றென். (ங)

அறியாமை மேலிட் டறிவின்றி நிற்குங்
குறியேற் கறிவென்ற கோலம் - வறிதேயா
நீயுணர்த்த நானுணரு நேசத்தாலோ வறிவென்
றேயெனக்கோர் நாம மிட்டதே. (ச)

ஏதுக்குச் சும்மா விருமனமே யென்றுனக்குப்,
போதித்த வுண்மையெங்கே போகவிட்டாய் - வா
துக்கு, வந்தெதிர்த்த மல்லரைப்போல் வாதாடிநை
யேயுன், புந்தியென்ன போதமென்ன போ. (ரு)

சகமனைத்தும் பொய்யெனவே தானுணர்ந்தாற்
றுக்க, சுகமனைத்தும் பொய்யன்றோசோரா - திகப

சத்தும், விட்டுப் பிரியாத மேலான வத்துவிதக்,
கட்டுக்கு ளாவதென்றோ காண். (௬)

கற்கண்டோதேனோ கனிரசமோ பாலோவென்,
சொற்கண்டா தேதெனநான்சொல்லுவேன் - விற்
கண்ட, வானமதி காண மௌனிமௌ னத்தளி
த்த, தானமதி லூறுமமிர்தம். (௭)

கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெ
ளிவால், வாட்டமறு வுற்பவநோய் மாறுமோ - நா
ட்டமுற்று, மெய்யான நிட்டையினை மேவினர்கட்
கன்றோதான், பொய்யாம் பிறப்பிறப்புப் போம் ()

மாயா சகத்தை மதியாதார் மண்முதலா
யேயான தத்துவத்தி லெய்துவரோ - நேயானு
பூதிநிலை நிற்கப் பொருந்துவர்க ளன்னவர்த
நீதியை யோர்மனமே நீ. (௯)

இகமுழுதும் பொய்யெனவே யேய்ந் துணர்ந்
தாலாங்கே, மிகவளர வந்தவருண் மெய்யே-யக
நெகிழப்,பாரீ ரொருசொற்படியேயனுபவத்தைச்,
சேரீ ரதுவே திறம். (௧0)

ஆரணங்க ளாகமங்க ளியாவுமே யானந்த, பூர
ணமே யுண்மைப் பொருளென்னுங் - காணத்தை,
யோராயோ வுள்ளுள்ளே யுற்றுணர்ந்தவ் வுண்மை
யினைப், பாராயோ நெஞ்சே பகர். (௧௧)

நேராயம் மௌனநிலை நில்லாமல் வாய்பேசி
யாரா யலைந்தீர்நீ ராகெடுவீர் - தேரீர்
திரையுந் திரையுநதிச் சென்னியனை நாவாற்
கரையுங் கரையுமனக் கல். (கஉ)

அற்ப மனமே யகிலவாழ் வத்தனையுஞ், சொற்
பனங்கண் டாயுண்மை சொன்னேனுன் - கற்பனை
யொன், றில்லாவிடத்தே யெனைச்சும்மா வைத்தி
ருக்கக், கல்லாய்நீ தானோர் கவி. (கங)

ஏதுந் திருவருளி னிச்சையா மென்றென்றெப்,
போதும்பொருந்தும் புனிதர்பாற் - றீதுநெறி,செ
ல்லுமோ செல்லாதே செல்லுமிட மின்பமலாற்,
சொல்லுமோ வேதத் தொனி. (கச)

கல்லேறுஞ் சில்லேறுங் கட்டியே றும்போலச்,
சொல்லேறப் பாழ்த்த தொளைச்செவிகொண் -
ல்லேறு, நெஞ்சமெனை நிற்கவைத்தாய் நீதியோ
தற்பரமே, வஞ்சனல்லை னீயே மதி. (கரு)

அப்பொருளுமான்மாவுமாரண நூல்சொன்ன
படி, தப்பிலாச் சித்தொன்றுஞ் சாதியிஞெ - லெப்
படியுந், தேரிற் றவிதஞ் சிவாகமே சொல்லுநிட்
டை, யா[illegible]டத் தத்துவித மாம். (கசு)

வேத முதலாய் விளங்குஞ் சிவவடிவாம்
போத நிலையிற் பொருந்தாம - லேதமிகு

மோகாதியல்லலிலே மூழ்கினையேநெஞ்சேயித், தே
காதி மெய்யோ தெளி. (கஎ)

நோக்கற் கரிதான நுண்ணியவான் மோனநி
லை, தாக்கற் குபாயஞ் சமைத்தபிரான் - காக்கு
முயி, ரத்தனைக்கு நானடிமை யாதலினால் யானெ
னதென், றித்தனைக்கும் பேசவிட மில். (கஅ)

ஒன்றுமறநில்லென் றுணர்த்தியநம் மோனகுரு,
தன்றனைத்தா ணீடூழி தாம்வாழ்க - வென்றென்
றே, திக்கனைத்துங் கைகுவிக்குஞ் சின்மயராந் தன்
மையர்க்கே, கைக்குவரு மின்பக் கனி. (ககூ)

மனத்தாலும் வாக்காலு மன்னவொண்ணமோ
ன, வினத்தாரே நல்ல வினத்தார் - கனத்தபுகழ்,
கொண்டவரு மன்னவரேகூறரியமுத்திநெறி, கண்
டவரு மன்னவரே காண் (உ0)

கண்ணொளியே மோனக் கரும்பே கவலையறப்,
பண்ணொளிக்கு முள்ளொளியாம் பான்மையினை -
நண்ணிடவுன், சித்த மிரங்கிலதென் சித்தந் தெளி
யாவே, றித்தனைக்கு மாதரவு மில். (உக)

அறியாமை சாரி னதுவா யறிவா
நெறியான போததுவாய் நிற்கும் - குறியாற்
சதசத் தருளுணர்த்தத் தானுணரா நின்ற
விதமுற் றறிவெனும்பேர் மெய். (உஉ)

குருலிங்க சங்கமமாக் கொண்டதிருமேனி, கரு
வொன்று மேனிநம்பாற் காட்டா - தருளொன்று,
கண்டவர்க்கே யானந்தங் கண்டுகொள லாமலது,
கொண்டவர்க்கிங் கென்ன கிடைக்கும். (உரு)

புலியி னதளுடையான் பூதப் படையான், பலி
யிரந்து மெல்லாம் பரிப்பான் - மலிபுனல்சேர்,
பொன்முடியான் முக்கட் புனிதன் சரண் புகுந்
தோர்க், கென்முடியா தேதுமுளதே. (உச)

சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நாமென
வே, யல்லும் பகலு மாற்றுவதென் - னல்லசிவ,
ஞானமயம் பெற்றோர்க ளுமில்லை யென்பரந்தோ,
மோனமய மான முறை. (உரு)

ஐயா வருணகிரி யப்பாவுனைப்போல, மெய்யாக
வோர்சொல்விளம்பினர்யார் - வையகத்தோர், சா
ற்றரிதென் றேசற்றார் தன்னையாய் முக்க ணெந்
தை, நாற்றிசைக்குங் கைகாட்டினன். (உசு)

காதற்றுப் போனமுறி கட்டிவைத்தா லாவது
ண்டோ, தீதற்ற காயமுமச் செய்கையே - போத
மாய், நிற்பரல்லா லிச்சகத்தி னோரார்க ணோரிடி
னுந், தற்பரமாக் கண்டிருப்பார் தாம். (உஎ)

வெள்ளங் குலாவுசடை வெள்ளக் கருணையினு
ன், கள்ளங் குலாவுவஞ்சக் கள்ளனே - னுள்ளத்
தி, லில்லனென்று லன்னவன்று னெங்கும் வியாப
கத்தா, னல்லனென்றுஞ் சொல்ல வழக்காம். ()

தத்துவப்பே யோடே தலையடித்துக் கொள்ளா
மல், வைத்த வருண்மோன வள்ளலையே - நித்தம
ன்பு, பூணக் கருதுநெஞ்சு போற்றக் கரமெழும்பு
ங் காணத் துடிக்குமிரு கண். (உகூ)

தொல்லைவினைக் கீடாய்ச் சுழல்கின்ற நானொரு
வ, னெல்லையிலாநின் கருணை யெய்துவனோ - வல்
லவனு, மோன குருவே முழுதினையுந் தானுணர்ந்
த, ஞானகுருவே நவில். (௩0)

மூன்றுகண்ணு முத்தொழிலா மும்முதலா மூவு
லகுந், தோன்றக் கருணைபொழி தோன்றலே-யீன்
றவனை, தன்னைப்போ மோலன்பு தழைத்தோ
யொருதெய்வ, முன்னைப்போ லுண்டோ வுரை. ()

நேசிக்குஞ் சிந்தை நினைவுக்கு ளுன்னை வைத்
துப், பூசிக்குந் தானிறைந்து பூரணமா - யோசித்
து, நின்றதல்லான் மோனநிருவிகற்ப நிட்டைநிலை
யென்றுவரு மோவறியேனே. (௩உ)

அறிவி லறியாமை யற்றறிவாய் நின்று, பிறிவற
வா னந்தமயம் பெற்றுக் - குறியவிழ்ந்தா, லன்
றைக் குடல்வேண்டே னையாவிவ் வாக்கையையே,
யென்றைக்கும் வேண்டுவனே யான். (நங)

உடலைப் பழித்திங் குணவுங் கொடாமல், விட
விடவே நாடுவரோ மெய்யைப் - படபடென, வே
ண்டுவே னிந்தவுடன் மெய்யுணராப் பொய்யனு,
னுண்டநீ தானேயறி. (நச)

அறியாயோ வென்னையுநீ யாண்டநீ சுத்த, வெ
றியாய் மயங்கவுமேன் விட்டாய் - நெறிமயங்கிக்,
குன்றுஞ்செடியுங் குறுகுமோ வையாவே, கன்று
கெட்டாற் றுயருகே காண். (நரு)

ஏதுக் குடற்சுமைகொண் டேனிருந்தே னைய
னே, யாதிக்க மோனவருட் டாயே - சோதியா, ம
ன்ன நிருவிகற்பவானந்த நிட்டையிலே, பின்னமற
நில்லாத பின். (நசு)

பின்னு முடற்சுமையாப் பேசும் வழக்கதனு
லென்னபல னுமுற் றிருந்தோமே - யன்னதனு
லானந்தந்தானேதா னுகுமெம்மையனே
யேனிந்தத் துன்ப மினி. (நஎ)

துன்பக் கடலிற் றுளைந்ததெல்லாந் தீர்ந்ததே
யின்பக் கடலி லிருமென்ன - வன்பிற்

கரைந்து கரைந்துருகிக் கண்ணருவி காட்ட
விரைந்து வருமானந்த மே (௩அ)

கரைந்து கரைந்துருகிக் கண்ணீரா றாக
விரைந்தே நிருவிகற்ப மெய்த - நிரந்தரமு
நின்னையே சிந்திக்க நீகொடுத்தாய் மோனநா
னென்னை முழுதுங்கொடுத் தேனே. (௩௯)

அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தாற்
கல்லு முருகாதோ கன்னெஞ்சே - பொல்லாத
தப்புவழி யேனி னைந்தாய் சந்ததமு நீயிறந்த
வெப்பிலே யானந்த மே. (௪௦)

கொடுத்தேனே யென்னைக் கொடுத்தவுடனின்
ப, மடுத்தேனே நீடூழி வாழ்ந்தே - யடுத்தேனே,
பெற்றேனே பெற்றுப் பிழைத்தேனே சன்மவல்ல
லிற்றேனே யேழையடி யேன். (௪க)

பெற்றோரும் பிறவாமை பேசாமை யாயிருக்கக்
கற்றோரு மௌனவுரைக்கக் காரியமேன் - சற்றேனு
நீக்கற்ற வின்ப நிலைபொருந்தி யேசற்று
வாக்கற்றுற் பேசுமோ வாய். (௪உ)

காலன் றனையுதைத்தான் காமன்றனை யெரித்
தான், பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை - ஞால
மெச்சப், பின்னேநடக்கவிட்டான் பேரருளை நா
டாதார்க், கென்னே நடக்கை யினி. (௪௩)

விண்ணருவி மேன்மேல் விளங்குவபோ லேயிர
ண்டு, கண்ணருவி வெள்ளமொடு கைகூப்பித்-தண்
ணமிர்த, வெள்ளமே யானந்த வெற் பேயெனத்
தொழுவோ, ருள்ளமேஞான வொளி. (௪௪)

பிள்ளைமதிச்செஞ்சடையான் பேசாப்பெருமை
யினன், கள்ளவிழும் பூங்கொன்றைக் கண்ணியா-
னுள்ளபடி, கல்லாலின் கீழிருந்து கற்பித்தா னோர்
வசன, மெல்லாரு மீடேறவே. (௪௫)

புலனைந்துந் தானே பொரமயங்கிச் சிந்தை
யலமந் துழலு மடிமை - நலமிகுந்த
சித்தான மோன சிவனேநின் சேவடிக்கே
பித்தான னுண்டோ பிறப்பு. (௪௬)

நிறைகுடந்தா னீர்கொளுமோ நிச்சயமாமோ
ன, முறையுணர்ந்தார் யாதை முயல்வார் - பிறை
யணிந்த, மிக்ககை லாயமலை வித்தகனே வேதிய
னே, செக்கரணி மேனியனே செப்பு. (௪௭)

துங்கமழு மானுடையாய் சூலப் படையுடை
யாய், திங்களணி செஞ்சடையாய் சேவுடையாய்-
மங்கையொரு, பாலுடையாய் செங்கட் பணியா
யென் சென்னியின்மேற், காலுடையாய் நீயேகதி.

இனிய கருணைமுகி லெம்பிரான் முக்கட்
கனியமிர்த வாரியின்பக் கட்டி - தனிமுதல்வ

னித்தன் பரம னிமலநிறை வாய்நிறைந்த
சுத்தனமக் கென்றுந் துணை. (சகூ)

நீதியாய்க் கல்லாலி னீழலின்கீ ழேயிருந்து,
போதியா வுண்மையெல்லாம் போதித்தா-னேதில்,
சனகாதி யாய தவத்தோர்க்கு ஞான, தினகரனு
மோன சிவன். (ருo)

தேகச் செயருனுஞ் சிந்தையுட னேகுழையில்,
யோகநிலைஞானிகளுக்கொப்புவதோ - மோகநிலை,
யல்லலிலே வாழ்வாரோவப்பனே நீயற்ற, வெல்லை
யிலே சும்மாவிரு. (ருக)

சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே, யிம்மாயா
யோகமினி யேனடா - தம்மறிவின், சுட்டாலேயா
குமோ சொல்லவேண் டாங்கண்ம, நிட்டாசிறுபிள்
ளாய் நீ. (ருஉ)

நீயற்ற வந்நிலையே நிட்டையதி னீயிலையோ
வாயற்றவனே மயங்காதே - போயற்
றிருந்தானு நீபோகா யென்றுமுள்ளாய் சும்மா
வருந்தாதே யின்பமுண்டு வா. (ருங)

வாவாவென் றின்பம் வரவழைக்குங் கண்ணீரோ
டாவாவென் றேயழுத வப்பனே - நீவாடா
வெல்லா நமக்கெனவே யீந்தனையே யீந்தபடி
நில்லா யதுவே நிலை. (ருச)

நில்லாப் பொருளை நினையாதே நின்னையுள்ளோர், சொல்லாப் பொருட்டிரளைச்சொல்லாதே-கல்லாத, சிந்தை குழைந்துசுகஞ் சேரக் குருவருளால், வந்தவழி நல்ல வழி. (ருரு)

வழியிதென்று மல்லா வழியிதென்றுஞ் சொல்லிற், பழிபழியா நல்லருளாற் பார்த்தோர் - மொழியுனக்கே, யேற்றிருக்கச்சொன்னவன்றே யெங்கும் பெருவெளியாம், பார்த்தவிடமெல்லாநீ பார்.

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளை யைப்போ, லாருந்துறக்கை யரிதரிது-நேரே, மனத்துறவு மப்படியே மாணுவிவற்றி, லுனக்கிசைந்த வாறென்றே யோர். (ருஎ)

ஓராமலே யொருகா லுண்மையுள்ளொளியைப், பாராம லுள்ளபடி பார்த்திருந்தால் - வாராதோ, பத்துத்திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளந், தத்திக் கரைபுரண்டு தான். (ருஅ)

தானான தன்மைவந்து தாக்கினு லவ்விடத்தே வானாதி மாயை வழங்காதோ - ஞானகே ளூன்னுள்ளே தோன்று வுறவாகி நின்றதென வென்னுள்ளே யென்று மிரு. (ருகூ)

என்னையுன்னை யின்னதிது வென்னுமை னிற்குநிலை, தன்னையருளென்ற தருணத்தி - லன்னைபெ

ற்ற, பிள்ளைக்குஞ்சொல்லாத பெற்றிகண்டாயைய
னே, யுள்ளத்தி னுள்ளே யுணர். (சுo)

சொன்னவர்தா நிட்டை தொகுத்திரா நிட்டை
யிலே, மன்னினவர் போதியார் மாமௌனன்-றன்
னுள், விருப்பாகக் கைகாட்டி மிக்கவடநீழ, லிருப்
பா னிருவிகற்பத்தே. (சுக)

இந்த நிருவிகற்பத் தெந்தை யிருக்கநிட்டை,
சிந்தைநீ தேறுப்செகமனைத்தும் - வந்ததொடர்ப்,
பாடுகெட வன்றோவோர் பாத்திரத்துக் காடலல்
லா, லாடுவதே னட்டு மவன். (சுஉ)

அவனே பரமு மவனே குருவு
மவனே யகில மனைத்து - மவனேதா
மானவரே சொன்ன லவரே குருவெணக்கு
நானவனாய் நிற்பதெந்த நாள். சுஙு)

நாளவங்கள் போகாம னோடாறு நந்தமையே,
யாளவந்தார் தாளின்கீழாட்புகுந்தாய் - மீளவுன்
னைக், காட்டாமனிற்கும் கருத்தறிந்தா னெஞ்சே
யுன், னட்டான னையமில்லை யால். (சுச)

யான்றா னெனலறவே யின்பநிட்டை யென்றரு
ணைக், கோன்றா னுரைத்தமொழி கொள்ளாயோ-
தோன்றி, யிழுக்கடித்தாய் நெஞ்சேநீ யென்கலை
கள் சோர, வழுக்கடிக்கும் வண்ணார்போ லாய்.()

எங்குஞ் சிவமே யிரண்டற்று நிற்கினெஞ்சே
தங்குஞ் சுகநீ சலியாதே - யங்கிங்கென்
றெண்ணாதே பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே யானுன் பரம். (சுசு)

. மெய்யைப்பொய் யென்றிடவு மெய்யணையாப் பொய்ந்நெஞ்சே, பொய்யைத்தான் மெய்யெனவும் போகுமோ - வையமறத் தன் மயத்தை மெய்யெனவே சார்ந்தனையே லானந்த, மென்மயமுநின் மயமுமே. (சுஎ)

பூங்கா வனநிழலும் புத்தமுதுஞ் சாந்தபதம், வாங்காத வானந்தமாமழையு, நீங்காவாஞ், சொல்லிறந்து மாண்டவர்போற் றாமௌனபூமியினு, ணில்லையென நின்றவிடம். (சுஅ)

இடம்வான நல்லபொரு ளின்பமெனக்கேவ
லடங்காக் கருவி யனைத்து - முடனுதவ
மந்தார தாருவென வந்துமவுன குரு
தந்தானோர் சொற்கொண்டு தான். (சுகூ)

தானந் தவஞானஞ் சாற்றறிய சித்தி முத்தி, யானவையெல் லாந்தாமே யாகுமே - மோனகுரு, சொன்னவொரு சொல்லாற் சுகமாயிரு மனமே, யின்ன மயக்கமுனக் கேன். (எ0)

உன்னை யுடலையுறு பொருளைத் தாவெனவே, யென்னை யடிமைக்கிருத்தனன் - சொன்னவொரு,

சொல்லை மறவாமற் றோய்ந்தா னெஞ்சேயுன்னா,
வில்லை பிறப்ப தெனக்கே. (எக)

எனக்குமுனக்குமுற வில்லையெனத் தேர்ந்து,
நினைக்கவரி தானவின்ப நிட்டை- தனைக்கொடு
த்தே, யாசான் மவுனி யளித்தானெஞ் சேயுனை
யோர், காசா மதியேனான் காண். (எஉ)

ஆனந்த மோனகுரு வாமெனவே யென்னறி
வின், மோனந் தனக்கிசைய முற்றியதாற் றானா
ந்து, சொல்லெல்லா மோனந்தொழிலாதியுமோன
மெல்லாநன் மோனவடிவே. (எங)

எல்லாமே மோனநிறை வெய்துதலா லெவ்விட
த்து, நல்லார்கண் மோனநிலை நாடினார் - பொல்
லாத, நானெனவிங் கொன்றை நடுவே முளைக்கவி
ட்டிங், கேனலைந்தேன் மோனகுருவே. (எச)

மோன குருவளித்த மோனமே யானந்த
ஞான வருளுமது நானுமதி - வானுநி
ன்ற நிலையுமது நெஞ்சப் பிறப்புமது
வென்றறிந்தே னானந்தமே. (எரு)

அறிந்தவறி வெல்லா மறிவன்றி யில்லை
மறிந்தமன மற்ற மவுனஞ் - செறிந்திடவே
நாட்டினா னானந்த நாட்டிற் குடிவாழ்க்கை
கூட்டினான் மோனகுரு. (எசா)

குருவாகித் தண்ணருளைக் கூறுமுன்னேமோனு,
வுருநீ டுயிர்பொருளுமொக்கத்-தருதியென, வாங்
கினையே வேறுமுண்மை வைத்திடவுங்கேட்டிடவு,
மீங்கொருவருண்டோ வினி. (எஎ)

இனிய கருப்புவட்டை யென்றுவீ விட்டா,ன
னியிரத மாறுது நானுந் - தனியிருக்கப், பெற்றி
லேன் மோனம்பிறந்தவன்றே மோனமல்லாற், கற்
றிலே னேதுங் கதி. (எஅ)

ஏதுக்குஞ் சும்மா விருநீ யெனவுரைத்த
சூதுக்கோ தோன்றுத் துணையாகிப்-போதித்து
நின்றதற்கோ வென்னையா நீக்கிப் பிரியாமற்
கொன்றதற்கோ பேசாக் குறி. (எகூ)

குறியுங் குணமுமறக் கூடாத கூட்டத்
தறிவறிவாய் நின்றுவிட வாங்கே - பிறிவறவுஞ்
சும்மா விருத்திச் சுகங்கொடுத்த மோனநின்பாற்
கைம்மாறு நானெழிதல் காண். (அ0)

நான்று னெனுமயக்க நண்ணுங்காலென்றுணை
வான்று னெனநிறைய மாட்டாய்நீ - யூன்றுமல்
வைத்தமவு னத்தாலே மாயை மனமிறந்து
துய்த்துவிடு ஞான சுகம். (அக)

ஞானநெறிக்கேற்ற குருநண்ணரிய சித்திமுத்தி,
தானந்தருமந்தழைத்தகுரு - மானமொடு, தாயெ

னவும் வந்தென்னைத் தந்தகுரு வென் சிந்தை,
கோயிலென வாழுங் குரு (அஉ)

சித்துஞ் சடமுஞ் சிவத்தைவிட வில்லையென்ற
நித்தன் பரமகுரு நேசத்தாற்-சுத்தநிலை
பெற்றோமே நெஞ்சே பெரும்பிறவி சாராமற்
கற்றோமே மோனக் கரு. (அங)

## ஏ ச ற் ற வ ந் நி லை.

கொச்சகக்கலிப்பா.

ஏசற்ற வந்நிலையே யெந்தைபரி பூரணமாய், மா சற்றவானந்த வாரி வழங்கிடுமே, யூசற்சுழல்போ லுலகநெறி வாதனையாற், பாசத்துட் செல்லாதே பல்காலும பாழ்நெஞ்சே. (க)

பாழாகி யண்டப் பரப்பையெல்லாம் வாய்மடுத்து, மாழாழி யின்பத் தழுந்தப்படியாயோ, தாழா யோ வெந்தையருட் டாட்கீழ் நெஞ்சே யெனைப்போல், வாழாது வாழ்ந்தழியா வண்ணமிருப்பாயே. (உ)

இருப்பா யிருந்திடப்பே ரின்பவெளிக்கே நமக்குக், குருப்பார்வை யல்லாமற் கூடக்கிடைத்திடுமோ, வருட்பாய் நமக்காக வாளவந்தார் பொன்னடிக்கீழ், மருட்பேயர் போலிருக்க வாகண்டாய் வஞ்சநெஞ்சே. (ங)

வஞ்சமோ பண்டையுள வாதனையா னீயலைந்து, கொஞ்சமுற்று யுன்னைக்குறைசொல்ல வாயுமுண்டோ, வஞ்சலஞ்ச லென்றிரங்கு மானந்தமாகடற்கீழ், நெஞ்சமே யென்போல நீயழுந்த வாராயோ.

வாராவரவாய் வடநிழற்கீழ் வீற்றிருந்த, பூராய நம்மைப் புலப்படுத்த வேண்டி யன்றோ, வோராயோ நெஞ்சே யுருகாயோ வுற்றிருந்து, பாராயோ வவ்வுருவைப் பார்க்க நிறைவாய் விடுமே. (ரு)

வாயாதோவின்பவெள்ளம்வந்துன்வழியாகப்
பாயாதோநானும்பயிராய்ப்பிழையேனோ
வோயாமலுன்னியுருகுநெஞ்சேயந்நிலைக்கே
தாயானமோனனருள்சந்திக்கவந்திடுமே. (சு)

வந்த வரவை மறந்துலகாய் வாழ்ந்துகன்ம, பந்தமுற வுன்னைப் படிப்பிக்கக் கற்றவர்யா, ரிந்தமதியேயுனக்கிங் கென்மதிகேளென்றாலே, சந்ததநெஞ் சேபரத்திற் சாரினின்ப முண்டாமே. (எ)

இன்பமய மாயுலகமெல்லாம் பிழைப்பதற்குன், னன்புநிலை யென்பா ரதுவுநிலையன்றி யுண்டோ, வுன்புலத்தை யோரினருட் கொப்பாவாய் நெஞ்சே நீ, தென்புலத்தா ரோடிருந்து செய்பூசை கொண்டருளே. (அ)

அருளேயோ ராலயமா வானந்த மாயிருந்த, பொருளோடியானிருக்கப் போயொளித்த நெஞ் சேநீ, மருடீர் முயற்கோடோவான்மலரோ பேய்த் தேரோ, விருடீர நீயுறைந்த தெவ்விடமோ காணே னே. (கூ)

எவ்விடத்தும் பூரணமா மெந்தைபிரான் றண்ண ருளே, யவ்விடத்தே யுன்னைநெஞ்சே யாராயிற்க ண்டிலனே, யவ்விடத்து மாயையிலே மாண்டனை யோ வவ்விடமுஞ், செவ்விடமே நீயுஞ் செனனம ற்று வாழியவே. (கO)

---

## காடுங்கரையும்.

காடுங்கரையு மனக்குரங்கு கால்விட்டோடவ தன்பிறகே, யோடுந்தொழிலாற் பயனுளதோவொ ன்றாய்ப் பலவா யுயிர்க்குயிரா, யாடுங் கருணைப் ப ரஞ்சோதி யருளைப் பெறுதற்கன்புநிலை, தேடும் ப ருவமிதுகண்டீர் சேர வாருஞ் சகத்தீரே. (க)

சைவ சமய மேசமயஞ் சமயா தீதப் பழம்பொ ருளைக், கைவந் திடவே மன்றுள்வெளி காட்டுமிந் தக் கருத்தைவிட்டுப், பொய்வந் துழலுஞ் சமய நெறி புகுத வேண்டா முத்திதருந், தெய்வ சபை யைக் காண்பதற்குச் சேரவாருஞ் சகத்தீரே. (உ)

காகமுறவு கலந்துண்ணக் கண்டீ ரகண்டாகார சிவ, போக மெனும்பே ரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமா, யேக வுருவாய்க் கிடக்குதை யோ வின்புற் றிடநாமினியெடுத்த, தேகம்விழுமு ன் புசிப்பதற்குச் சேரவாருஞ் சகத்தீரே. (ந)

---

## எடுத்ததேகம்.

கட்டளைக்கலிப்பா.

எடுத்த தேகம் பொருளாவி மூன்றுநீ யெனக் கொன்றில்லை யெனமோன நன்னெறி, கொடுத்த போது கொடுத்ததன் றேபினுங் குளறி நானென் றுகூத்தாட மாயையை, விடுத்தவாறுங் கண்ணீ ரொடுகம்பலைவிலகுமாறுமென் வேட்கைப்ரவாகத் தைத், தடுத்தவாறும் புகலாய் சிரகிரித் தாயுமான தயாபரமூர்த்தியே. (க)

நோயும் வெங்கலிப் பேயுந் தொடரநின் னூலி ற்சொன்ன முறையிய மாதிநான், றேயும் வண்ண மெனைக்காக்குங் காவலுந் தொழும்பு கொள்ளுஞ் சுவாமியு நீகண்டா, யோயுஞ்சன்மமினியஞ்ச லஞ் சலென்றுலகங் கண்டு தொழவோ ருருவிலே, தா யுந்தந்தையு மானேய் சிரகிரித் தாயுமான தயாபர மூர்த்தியே. (உ)

## முகமெலாம்.

முகமெ லாங்கணீர் முத்தரும்பிடச் செங்கை முகிழ்ப்ப, வகமெ லாங்குழைந் தானந்த மாகநல்ல றிஞு, ரிகமெ லாந்தவ மிழைக்கின்ரு ரென்னசெய் கோ வேழை, சகமெலாம்பெற நல்லருளு தரமாச் சமைந்தோய். (க)

---

## திடமுறவே.

கொச்சகக்கலிப்பா.

திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத்தாளக், கடனுனக்கென் றெண்ணி நின்னைக்கை குவித்தோனலனே, வடைவுகெட்டபாழ்மாயை யாழியிலே யின்னமல்லற், படமுடியாதென்னைவிப் பற்றே பராபரமே. (க)

ஆராமைகண்டிங்கருட்குருவாய்நீயொருகால்
வாராயோவந்துவருத்தமெல்லாந்தீராயோ
பூராயமாகவருட்பூரணத்திலண்டமுதற்
பாராதிவைத்தபதியேபராபரமே. (உ)

வாழாதுவாழவுனைவந்தடைநம்தாமரலலாரு
மாழாழியென்னவருளாளைரழுக்காற்ரு
டேழாயெனவுலகமேசுமினிநானொருவன
பாழாகாவாறுமுகம்பார்நீபராபரமே. (ங)

உள்ளத்தினுள்ளே யொளித்தென்னை யாட்டுகின்ற, கள்ளக் கருணையையான் காணுந் தரமா

மோ, வெள்ளத்தை மாற்றி விடக்குண்பார் நஞ்சூட்டும், பள்ளத்தின்மீன்போற் பதைத்தேன்பராபரமே. (௪)

வாவிக் கமலமலர் வண்டாய்த் துவண்டுதுவண், டாவிக்கு ணின்றவுனக் கன்புவைத்தார்க் கஞ்சலென்பாய், பூவிற்கும்வான்கடையிற் புல்விற்போர் போலவொன்றைப், பாவிக்க மாட்டேன் பதியே பராபரமே. (௫)

விண்ணுறு வெற்பின் விழுந்தாங் கெனமார்பிற், கண்ணுறு பாய்ச்சிடுமென் காதல்வெள்ளங் கண்டிலையோ, தண்ணுறு சாந்தபதத் தற்பரமே நால்வேதப், பண்ணுறு மின்பப் பதியே பராபரமே. (௬)

கூடியநின் சீரடியார் கூட்டமென்றோ வாய்க்குமென, வாடியவென்னெஞ்சுமுக வாட்டமுநீ கண்டிலையோ, தேடிய நின் சீரருளைத் திக்கனைத்துங் கைகுவித்துப், பாடியநான் கண்டாய் பதியே பராபரமே. (௭)

நெஞ்சத்தி னூடே நினைவாய் நினைவூடு, மஞ்சலென வாழுமென தாவித்துணைநீயே, சஞ்சலமாற் றினையினிமேற்றாய்க்குபசா ரம்புகன்று, பஞ்சரிக்க நானார் பதியே பராபரமே. (௮)

புத்திநெறி யாகவுனைப் போற்றிப் பலகாலு, முத்திநெறி வேண்டாத மூடனேனுகெடுவேன், சித்திநெறிக் கென் கடவேன் சீரடியார்க் கேவல் செயும், பத்திநெறிக் கேனுமுகம் பார்நீ பராபரமே. (கூ)

கண்டறியேன் கேட்டறியேன் காட்டுநினை யே யிதயங், கொண்டறியேன் முத்தி குறிக்குந் தரமு முண்டோ, தொண்டறியாப்பேதைமையேன் சொல்லேனின் றன்மை யெல்லாம், பண்டறிவாய் நீயே பகராய் பராபரமே. (கO)

## தன்னை.

கட்டளைக்கலிப்பா.

தன்னை யறியத் தனதருளாற் றனுணர்த்து, மன்னைப் பொருளெனவேவாழாமற் பாழ்நெஞ்சே, பொன்னைப்புவியை மடப்பூவையரை மெய்யென வே, யென்னைக் கவர்ந்திழுத்திட் டென்ன பலன் கண்டாயே. (க)

## ஆக்குவை.

ஆக்குவை மாயையாவு நொடியினி லவற்றை மாள, நீக்குவை நீக்கமில்லா நினைப்பொடு மறப்பு மாற்றிப், போக்கொடு வரவுமின்றிப் புனித நல் லருளானந்தந், தாக்கவுஞ் செய்வாயன்றோ சச்சிதானந்தவாழ்வே. (உ)

## கற்புறுசிந்தை.

கற்புறு சிந்தை மாதர் கணவரையன்றி வேறே, ரிற்புறத் தவரை நாடார் யாங்களு மின்பவாழ்வுந், தற்பொறி யாக நல்குந் தலைவநின்னலதோர் தெய்வம், பொற்புறக் கருதோங்கண்டாய் பூரணானந்த வாழ்வே. (க)

முருந்திள நகையார் பார முலைமுகந் தழுவிச் செவ்வாய், விருந்தமிர் தென வருந்தி வெறியாட்டுக் காளாய் நாளு, மிருந்தலோ காயதப்பே ரினத்தனு யிருந்த வேழை, பொருந்தவுங் கதிமேலுண்டோ பூரணா னந்த வாழ்வே. (உ)

தீதெலா மொன்றும் வன்மை செறிந்திருட் படலம்போர்த்த, பாதகசிந்தை பெற்றபதக னுன்பாதநீழ, லாதர வடைய வுள்ளன் பருள்கிலையாயின் மற்றியார், போதனைசெய்ய வல்லார் பூரணா னந்த வாழ்வே. (௩)

நாதனை நாதா தீத நண்பனை நடுவாய் நின்ற, நீதனைக் கலந்துநிற்க நெஞ்சமே நீவா வென்றால், வாதனைபெருக்கி யென்னை வசஞ்செய்து மனந்துன்மார்க்க, போதனை செய்தனன்றே பூரணானந்த வாழ்வே. (௪)

எண்ணிய வெண்ணமெல்லா மிறப்புமேற் பிறப்புக் காசை. பண்ணியென் னறிவையெல்லாம் பா

பூாக்கி யெனைப்பா பூாக்குந், திண்ணிய வினையைக்
கொன்றுசிறியனை யுய்யக் கொண்டாற், புண்ணிய
நினக்கே யன்றோ பூரணு னந்தவாழ்வே. (ரு)

பத்திநீ பத்திக் கான பலனுநீ பல்வாச் சொல்
லுஞ், சித்திநீ சித்தர் சித்தித் திறமுநீ திறமார்
மோன, முத்திநீ முத்திக் கான முதலுநீ முதன்
மையான், புத்திநீ யெனக்கொன் றுண்டோ பூரணு
னந்த வாழ்வே. (சா)

தாயினு மினிய நின்னைச் சரணென வடைந்த
நாயேன், பேயினுங் கடையனுகிப் பிதற்றுதல் செ
ய்தனன்றோ, தீயிடை மெழுகாய் நொந்தேன் றெ
ளிவிலேன் வீணேகாலம், போயினதாற்றகில்லேன்
பூரணு னந்த வாழ்வே. (எ)

## மலை வளர்காதலி.

பதியுண்டுநிதியுண்டுபுத்திரர்கண்மித்திரர்கள்
பக்கமுண்டெக்காலமும்
பவிசுண்டுதவிசுண்டுதிட்டாந்தமாகயம
படரெனுந்திமிரமணுகாக்
கதியுண்டுஞானமாங்கதிருண்டுசதிருண்டு
காயசித்திகளுமுண்டு
கறையுண்டகண்டர்பாலம்மைநின்ருளிற்
கருத்தொன்றுமுண்டாகுமே

னதியுண்டகடலெனச்சமயத்தையுண்டபர
ஞானவானந்தவொளியே
நாதாந்தரூபமேவேதாந்தமோனமே
நானெனுமகந்தைதீர்த்தென்
மதியுண்டமதியானமதிவதனவல்லியே
மதுசூதனன்றங்கையே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (க)

தெட்டிலேவலியமடமாதர்வாய்வெட்டிலே
சிற்றிடையிலேநடையிலே
சேலொத்தவிழியிலேபாலொத்தமொழியிலே
சிறுபிறைநுதற்கீற்றிலே
பொட்டிலேயவர்கட்டுபட்டிலேபுனைகந்த
பொடியிலேயடியிலேமேற்
பூரித்தமுலையிலேநிற்கின்றநிலையிலே
புந்திதனைநுழையவிட்டு
நெட்டிலேயலையாமலறிவிலேபொறையிலே
நின்னடியர்கூட்டத்திலே
நிலைபெற்றவன்பிலேமலைவற்றமெஞ்ஞான
ஞேயத்திலேயுனிருதாண்
மட்டிலேமனதுசெலநினதருளுமருள்வையோ
வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (உ)

பூதமுதலாகவேநாதபரியந்தமும்
 பொய்யென்றெனைக்காட்டியென்
போதத்தினடுவாகியடியீறுமில்லாத
 போதபூரணவெளிக்கு
ளேதுமறநில்லென்றுபாயமாவைத்துநினை
 வெல்லாஞ்செய்வல்லசித்தா
மின்பவுருவைத்தந்தவன்னையேநின்னையே
 யெளியேன்மறந்துய்வனோ
வேதமுதலானநல்லாகமத்தன்மையை
 விளக்குமுட்கண்ணிலார்க்கு
மிக்கநின்மகிமையைக்கேளாதசெவிடர்க்கும்
 வீறுவாதம்புகலும்வாய்
வாதநோயாளர்க்குமெட்டாதமுக்கணுடை
 மாமருந்துக்கமிர்தமே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
 வளர்காதலிப்பெணுமையே. (ந)

மிடியிட்டவாழ்க்கையாலுப்பிட்டகலமெனவு
 மெய்யெலாமுள்ளுடைந்து
வீறிட்டசெல்வர்தந்தலைவாயில்வாசமாய்
 வேதனைகளுறவேதனுர்
துடியிட்டவெவ்வினையையேவினன்பாவிநான்
 றொடரிட்டதொழில்களெல்லாந்
துண்டிட்டசாண்கும்பியின்பொருட்டாயதுன்
 றொண்டர்பணிசெய்வதென்றோ

வடியிட்டசெந்தமிழி னருமையிட்டாரூரி
லரிவையோர்பரவைவாயி
லம்மட்டுமடியிட்டு நடைநடந்தருளடிக
ளடியீதுமுடியீதென
வடியிட்டமறைபேசுபச்சிளங்கிள்ளையே
வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெணுமையே. (௪)

பூரணிபுராதனி சுமங்கலைசுதந்தரி
புராந்தகித்ரியம்பகியெழிற்
புங்கவிவிளங்குசிவ சங்கரிசகஸ்ரதள
புட்பமிசைவீற்றிருக்கு
நாரணிமனாதீத நாயகிகுணாதீத
நாதாந்தசத்தியென்றுன்
னாமமேயுச்சரித் திடுமடியர்நாமமே
நானுச்சரிக்கவசமோ
வாரணிசடைக்கடவு ளாரணியெனப்புகழ
வகிலாண்டகோடியீன்ற
வன்னையேபின்னையுங் கன்னியெனமறைபேசு
மானந்தரூபமயிலே
வாரணியுமிருகொங்கைமாதர்மகிழ்கங்கைபுகழ்
வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெணுமையே. (௫)

பாகமோபெறவுனைப் பாடவறியேன்மல
    பரிபாகம்வரவுமனதிற்
பண்புமோசற்றுமிலை நியமமோசெய்திடப்
    பாவியேன்பாபரூப
தேகமோதிடமில்லை ஞானமோகனவிலுஞ்
    சிந்தியேன்பேரின்பமோ
சேரவென்றாற்கள்ள மனதுமோமெத்தவுஞ்
    சிந்திக்குதென்செய்குவேன்
மோகமோமதமோ குரோதமோலோபமோ
    முற்றுமாற்சரியமோதான்
முறியிட்டெனைக்கொள்ளு நிதியமோதேடவெனி
    ன் மூசுவரிவண்டுபோல
மாகமோடவும்வல்ல னெனையாளவல்லையோ
    வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
    வளர்காதலிப்பெண்ணுமையே. (௬)

தூளேறுதூசுபோல் வினையேறுமெய்யெனுந்
    தொக்கினுட்சிக்கினாளுஞ்
சுழலேறுகாற்றினிடை யழலேறுபஞ்செனச்
    சூறையிட்டறிவையெல்லா
நாளேறநாளேற வார்த்திகமெனுங்கூற்றி
    னட்பேறவுள்ளுடைந்து
நயனங்களற்றதோ ருரேறுபோலவே
    நானிலந்தனிலலையவோ

வேளேறுதந்தியைக் கனதந்தியுடன்வென்று
விரையேறுமாலைசூடி
விண்ணேறுமேகங்கள் வெற்பேறிமறைவுற
வெருட்டியகருங்கூந்தலாய்
வாளேறுகண்ணியே விடையேறுமெம்பிரான்
மனதுக்கிசைந்தமயிலே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (எ)

பூதமொடுபழகிவள ரிந்திரியமாம்பேய்கள்
புந்திமுதலானபேய்கள்
போராடுகோபாதி ராக்ஷசப்பேய்களென்
போதத்தையூடழித்து
வேதனைவளர்த்திடச் சதுர்வேதவஞ்சன்
விதித்தானிவ்வல்லலெல்லாம்
வீழும்படிக்குனது மௌனமந்த்ராதிக்ய
வித்தையையியந்தருள்வையோ
நாதவடிவாகிய மஹாமந்த்ரரூபியே
நாதாந்தவெட்டவெளியே
நற்சமயமானபயிர் தழையவருமேகமே
ஞானவானந்தமயிலே
வாதமிடுபரசமயம் யாவுக்குமுணர்வரிய
மகிமைபெருபெரியபொருளே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிபபெணுமையே. (அ)

## அகிலாண்டநாயகி.

சந

வட்டமிட்டொளிர்பிராணவாயுவெனு
  நிகளமோடுகமனஞ்செயு
மனமெனும்பெரியமத்தயானையையென்
  வசமடக்கிடின்மூமண்டலத்
திட்டமுற்றவளராஜயோகமிவன்
  யோகமென்றறிஞர்புகழவே
யேழையேனுலகினீடுவாழ்வனினி
  யிங்குதற்குமனுமானமோ
பட்டவர்த்தனர்பராவுசக்ரதர
  பாக்யமானசுகயோகமும்
பாரகாவியகவித்வநான்மறை
  பராயணஞ்செய்மதியூகமு
மட்டசித்தியுநலன்பருக்கருள
  விருதுகட்டியபொனன்னமே
அண்டகோடிபுகழ்காவைவாழுமகி
  லாண்டநாயகியெனம்மையே. (௧)

---

## பெரியநாயகி விருத்தம்.

காற்றைபபிடித்துமட்கரகத்தடைத்தபடி
  கன்மப்புனற்குளூறுங்
கடைகெட்டநவவாயில்பெற்றபசுமட்கலக்
  காயத்துளேயிருத்திச்

சோற்றைச்சுமத்திநீபந்தித்துவைக்கத்
துருத்திக்குண்மதுவென்னவே
துள்ளித்துடித்தென்னபேறுபெற்றேனருட்
டோயநீபாய்ச்சல்செய்து
நாற்றைப்பதித்ததெனஞானமாம்பயிரதனை
நாட்டிப்புலப்பட்டியு
நமனைதீப்பூடுமெனுகாமன்முன்னின்று
நாடுசிவபோகமான
பேற்றைப்பகுத்தருளியெனையாளவல்லையோ
பெரியவகிலாண்டகோடி
பெற்றநாயகிபெரியகபிலைமாநகர்மருவு
பெரியநாயகியம்மையே. (௧)

---

## தந்தைதாய்.

தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை
சகமனைத்து மௌனியரு டழைத்தபோதே
யிந்திரசா லங்கனவு கான னீரா
யிருந்ததுவே யிவ்விழற்கை யென்னேயென்னே.()

என்னைநான் கொடுக்கவொருப் பட்ட கால
மியாதிருந்தென்னெதுபோ யென்னென்னைநீங்கா
வன்னைபோ லருள்பொழியுங் கருணை வாரி
யானந்தப் பெருமுகிலே யரசே சொல்வாய். (௨)

அரசேநின் றிருக்கருணை யல்லா தொன்றை, ய
றியாத சிறியேனு னதனுன் முத்திக், கரைசேரும்
படிக்குனருட் புணையைக்கூட்டுங், கைப்பிடியே க
டைப்பிடியாக் கருத்துட் கண்டேன். (௩)

கண்டேனிங் கென்னையுமென் றனையுநீங்காக், க
ருணையுநின் றன்னையுநான் கண்டேன் கண்டேன்,
விண்டேனென் றெனைப் புறம்பாத் தள்ளவேண்டா
ம், விண்டதுநின் னருட்களிப்பின் வியப்பா லன்
ேறு (௪)

ஓவென்ற சுத்தவெளி யொன்றே நின்றிங், குயி
ரையெல்லாம் வம்மினென வுவட்டா வின்பத், தே
வென்ற நீகலந்து கலந்து முத்தி, சேர்த்தனையேற்
குறைவாமோ செகவிலாசம். (௫)

செகத்தையெல்லா மணுவளவுஞ் சிதறு வண்ண
ஞ், சேர்த்தணுவில்வைப்பையணுத்திரளையெல்லா
மகத்துவமாப் பிரமாண்டமாகச்செய்யும்வல்லவா,
நீநினைந்த வாறேயெல்லாம். (௬)

சொல்லாலே வாய்துடிப்ப தல்லா னெஞ்சந், து
டித்திருக ணீரருவி சொரியத் தேம்பிக், கல்லாலே
யிருந்தநெஞ்சுங் கல்லான் முக்கட், கனிவேநெக்
குருகிடவுங் காண்பேன்கொலலோ. (௭)

# பெற்றவட்கே.

பெற்றவட்கேதெரியுமந்தவருத்தம்பிள்ளை
பெருப்பேதையறிவாளோபேரானந்த
முற்றவர்க்கேகண்ணீர்கம்பலையுண்டாகு
முருதவரேகன்னெஞ்சமுடையராவார். (௧)

ஆவாவென்றழுதுதொழுங்கையராகி
யப்பனேயானந்தவடிகளேநீ
வாவாவென்றவர்க்கருளுங்கருணையெந்தாய்
வன்னெஞ்சர்க்கிரங்குவதெவ்வாறுநீயே. (௨)

நீயேயிங்கெளியேற்குந்தாகமோக
நினைவூடேநின்றுணர்த்திநிகழ்த்தலாலே
பேயேற்குந்தனக்கெனவேோரன்புமுண்டோ
வெம்மானேயின்னமன்புபெருகப்பாராய். (௩)

பாராயோவென்றுயரமெல்லாமையா
பகருமுன்னேதெரியாதோபாவியேன்முன்
வாராயோவின்னமொருகாலானுலு
மலர்க்காலென்சென்னிமிசைவைத்திடாயோ. ()

வைத்திடுங்காலைப்பிடித்துக் கண்ணின் மார்பில், வைத்தணைத்துக் கொண்டு கையால் வளைத்துக் காட்டிச், சித்தமிசைப் புகவிருத்திப் பிடித்துக் கொண்டு, தியக்கமற வின்பசுகஞ் சேர்வதென்றோ. (௫)

சோராமற்சிற்றினத்தைப்பிரித்தெந்நாளுந்
திருவடிப்பேரினத்துடனேசேராவண்ண
மாராகநானலந்தேனரசேநீதா
னறிந்திருந்துமாயையிலேனழுந்தவைத்தாய். ()

வைத்தபொருளுடலாவிமூன்றுநின்கை
வசமெனவேயான்கொடுக்கவாங்கிக்கொண்டு
சித்தமிசைப்புகுந்ததுதான்மெய்யோபொய்யோ
சிறியேற்கின்குளவுரையாய் திகையாவண்ணம். ()

திகையாதோவெந்நாளும்பேரானந்தத்
தெள்ளமுதமுதவாமற்றிவலைநாட்டி
வகையாகவலக்கழித்தாயுண்டுடுத்து
வாழ்ந்தேனுனிரண்டுகொன்மாடுபோலே. (அ)

மாடுமக்கள்சிற்றிடையார்செம்பொனுடை
வைத்தகனதனமேடைமாடகூடம்
வீடுமென்பாற்றொடர்ச்சியோவிடைவிடாமன்
மிக்கதிவீடன்றோவிளங்கல்வேண்டும். (கூ)

விளங்கவெனக்குள்ளுள்ளேவிளங்காநின்ற
வேதகமேபோதகமேமலமாழ்வே
களங்கரகிதப்பொருளேயென்னைநீங்காக்
கண்ணுதலேநாதாந்தகாட்சிப்பேறே. (க0)

நாதமேநாதாந்தவெளியேசுத்த
ஞாதுருவேஞானமேஞேயமேநல்

வேதமேவேதமுடிவானமோன
வித்தேயிங்கென்னையினிவிட்டிடாதே. (௧௧)

---

## கல்லாலின்.

கல்லாலி னீழறனி லொரு நால்வர்க்குங், கட
வுணீ யுணர்த்துவதுங் கைக்காட் டென்றாற், சொ
ல்லாலே சொலப்படுமோ சொல்லுந்தன்மை, துரு
ம்புபற்றிக் கடல்கடக்குந் துணிபேயன்றோ. (௧)

அன்றோவாமோவெனவுஞ்சமயகோடி
யத்தனையும்வெவ்வேறாயாற்றநேரே
நின்றாயேநினைப்பெறுமாறெவ்வாறாங்கே, நின்ன
ருள் கொண்டறிவதல்லானெறிவேறுண்டோ. ()

நெறிபார்க்கினின்னையன்றியகிலம்வேறோ
நிலநீர்தீக்கால்வானுநீயலாத
குறியாதுமில்லையென்றால்யாங்கள்வேறோ
கோதையொருகூறுடையாய்கூறாய்கூறாய். (௩)

கூறாயவைம்பூதச்சுமையைத்தாங்கி
குணமிலாமனமெனும்பேய்க்குரங்கின்பின்னே
மாறாதகவலையுடன்சுழலவென்னை
வைத்தனையேபரமேநின்மகிமைநன்றே. (௪)

நன்றெனவுந்தீதெனவுமெனக்கிங்குண்டோ
நானாகிநீயிருந்தநியாயஞ்சற்றே

யின்றெனக்குவெளியானலெல்லாம்வல்ல
விறைவாநின்னடியருடனிருந்துவாழ்வேன். (௫)

வாழ்வெனவுந்தாழ்வெனவுமிரண்டாப்பேசும்
வையகத்தார்கற்பனையாமயக்கமான
பாழ்வலையைக்கிழித்துதறிச்செயல்போய்வாழப்
பரமேநின்னானந்தப்பார்வையெங்கே. (௬)

எங்கேயெங்கேயருளென்றெமையிரந்தா
னேழையிவனெனவுமெண்ணியிச்சைகூரு
மங்கேயெங்கேயெளிவந்தென்னையாண்ட
வாரமுதேயுனைக்காண்பானலந்துபோனேன்.

போனநாட்கிரங்குவதேதொழிலாவிங்ஙன்
பொருந்துநாளத்தனையும்போக்கினேனென்
ஞானநாயகனேநின்மோனஞான
நாட்டமுற்று வாழ்ந்திருக்குநாளெந்நாளோ.

நாட்பட்டகமலமென்னவிதயமேவு
நறுந்தேனேதுன்மார்க்கநாரிமார்கண்
வாட்பட்டகாயமிந்தக்காயமென்றே
வன்கூற்றுமுயிர்பிடிக்கவருமந்நீதி. (௯)

நீதியெங்கே மறையெங்கே மண் விண் ணெங்கே, நித்தியரா மவர்க ளெங்கேநெறிதப் பாத, சாதியெங்கேயொழுக்கமெங்கேயாங்களெங்கே, தற்பரநீ பின்னுமொன்றைச் சமைப்ப தானல். (௧0)

ஆனாலும்யானெனதிங்கற்றவெல்லை
யதுபோதுமதுகதிதானல்லவென்று
போனாலும்யான்போவனல்லான்மோனப்
புண்ணியனேவேறுமொருபொருளைநாடேன்.

பொருளேநின் பூரணமேலிட்டகாலம், போக்கு வரவுண்டோதற் போதமுண்டோ, விருடானுண் டோ வல்லால் வெளிதா னுண்டோ, வின்பமுண் டோ துன்பமுண்டோ யாமங்குண்டோ. (௧௪)

உண்டோநீபடைத்தவுயிர்த்திரளிலென்போ
லொருபாவிதேகாதியுலகம்பொய்யாக்
கண்டேயுமெள்ளளவுத்துறவுமின்றிக்
காசினிக்குளலைந்தவரார்காட்டாய்தேவே. (௧௩)

தேவரெல்லாந்தொழச்சிவந்தசெந்தாண்முக்கட்
செங்கரும்பேமொழிக்குமொழிதித்திப்பாக
மூவர்சொலுந்தமிழ்கேட்குந்திருச்செவிக்கே
மூடனேன்புலம்பியசொன்முற்றுமோதான்.

முற்றுமோவெனக்கினியானந்தவாழ்வு
மூதறிவுக்கினியாய்நின்முளரித்தாலிற்
பற்றுமோசற்றுமில்லையையோவையோ
பாவிபடுங்கட்கலக்கம்பார்த்திலாயோ. (௧௫)

பார்த்தனவெல்லாமழியுமதனாற்சுட்டிப்
பாராதேபார்த்திருக்கப்பரமேமோன
மூர்த்திவடிவாயுணர்த்துங்கைக்காட்டுண்மை
முற்றியெனதல்லல்வினைமுடிவதென்றோ. (௧௬)

என்றாளே நீயன்றாளம்யாமென்பதென்னை
விதுநிற்கவெல்லாந்தாமில்லையென்றே
பொன்றிடச்செய்வல்லவனீ யெமைப்படைக்கும்
பொற்புடையாயென்னினதுபொருந்திடாதே.

பொருந்துசகமனைத்தினையும்பொய்பொய்யென்று
புகன்றபடிமெய்யென்றேபோதரூபத்
திருந்தபடியென்றிருப்பதன்றேயுன்றே
வெம்பெருமான்யான்கவலையெய்தாக்காலம்.

காலமேகாலமொருமூன்றுங்காட்டுங்
காரணமேகாரணகாரியங்களில்லாக்
கோலமேயெனைவாவா வென்றுகூவிக், குறைவற
நின்னருள்கொடுத்தாற்குறைவோசொல்லாய்

சொல்லாயதொகுதியெல்லாங்கடந்துநின்ற
சொரூபானந்தச்சுடரேதொண்டனேனைக்
கல்லாகப்படைத்தாலுமெத்தநன்றே
கரணமுடனுறவுகலக்கமாட்டேன். (௨௦)

கலங்காதநெஞ்சுடையஞானதீரர்
கடவுளுனைக்காணவேகாயமாதி
புலங்காணார்நானொருவன்ஞானம்பேசிப்
பொய்க்கூடுகாத்ததென்னபுதுமைகண்டாய்.

கண்டிலையோயான்படும்பாடெல்லாமென்று
கண்ணிருந்துந்தெரியாதோகசிந்துள்ளன்பர்

தொண்டரடித்தொண்டனன்றோகருணைநீங்காச்
சுத்தபரிபூரணமாஞ்சோதிநாதா. (௨௨)

சோதியா யிருட்பிழம்பைச் சூறை யாடுந், தூ
வெளியேயெனைத்தொடர்ந்து தொடர்ந்தெந்நாளு
ம், வாதியா நின்ற வினைப் பகையை வென்ற, வாழ்
வேயிங் குனைப்பிரிந்து மயங்குகின்றேன். (௨௩)

மயக்குறுமென் மனமணுகாப் பாதை காட்டி,
வல்வினையைப் பறித்தனையே வாழ்வே நானென்,
செயக்கடவேன் செயலெல்லா நினதே யென்று
செங்கைகுவிப் பேனல்லாற் செயல்வேறில்லை. ( )

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளே நின் விளையாட் டல்லான்
மாறுபடுங் கருத்தில்லை முடிவின்மோன, வாரிதியி
னதித்திரள்போல் வயங்கிற் றம்மா. (௨௫)

அம்மாவீ ததிசயந்தா னன்றோ வன்றோ, வக
ண்டநிலை யாக்கியென்னை யறிவாம் வண்ணஞ், சும்
மாவேயிருக்கவைத்தா யையாவாங்கே, சுகமயமா
யிருப்பதல்லாற் சொல்வானென்னே. (௨௬)

என்னேநான் பிறந்துழல வந்த வாறிங், கெனக்
கெனவோர் செயலிலையே யேழை யேன்பான்,

முன்னேசெய் வினையெனவும் பின்னே வந்து, மூ
ளும்வினை யெனவும்வர முறையே னெந்தாய்.

தாயான தண்ணருளை நிரம்பவைத்துத்
தமியேனைப்புறவாமற் றள்ளித்தள்ளிப்
போயானதென்கொலையா வேகதேசம்
பூரணத்துக்குண்டோதான் புகலல்வேண்டும்.

புகலரிய நின்விளையாட் டென்னே யெந்தாய்,
புன்மையறி வுடைய வென்னைப் பொருளாப் பண்
ணி, யிகல் விளைக்கு மலமாயை கன்மத் தூடே,
யிடருறவுஞ் செய்தனையே யிரக்க மீதோ. (௨௯)

இரக்கமொடுபொறையீ தலறிவாசார
மில்லேனனல்லோர்களீட்டங்கண்டாற்
கரக்குமியல்புடையேன் பாழ்நெஞ்சமெந்தாய்
கருந்தாதோவல்லுருக்கோ கரியகல்லோ. (௩௦)

## பராபரக்கண்ணி.

சீராருந்தெய்வத் திருவருளாம்பூமிமுதற்
பாராதியாண்ட பதியேபராபரமே. (௧)

கண்ணாரக் கண்டோர் கருப்பொருள் காணாம
லருள், விண்ணூா டிருந்த வின்ப வெற்பே பரா
பரமே. (௨)

சிந்தித்தவெல்லாமென் சிந்தையறிந்தேயுதவ
வந்தகருணை மழையேபராபரமே. (௩)

ஆராவமுதேயரசேயா னந்தவெள்ளப்
பேராறேமோனப் பெருக்கேபராபரமே. (௪)

ஆரறிவாரென்னவனந்தமறையோலமிடும்
பேரறிவேயின்பப்பெருக்கேபராபரமே. (௫)

உரையிறந்தவன்ப ருளத்தோங்கொளியாயோங்கி
கீ, கரையிறந்தவின்பக் கடலேபராபரமே. (௬)

எத்திக்குந்தானாகி யென்னிதயத்தேயூறித்
தித்திக்குமானந்தத் தேனேபராபரமே. (௭)

திக்கொடுகீழ்மேலுந் திருவருளாம் பொற்பறிந்
தோர், கைக்குள்வளர்நெல்லிக் கனியேபராபரமே.

முத்தேபவளமேமொய்த்தபசும்பொற்சுடரே
சித்தேயென்னுள்ளத்தெளிவேபராபரமே. (௯)

கண்ணே கருத்தேயென் கற்பகமே கண்ணிறை
ந்த, விண்ணேயா னந்த வியப்பே பராபரமே. (௧0)

வாக்காய்மனதாய் மனவாக்கிறந்தவர்பாற்
றூக்காதேதாக்குந் தனியேபராபரமே. (௧௧)

பார்த்தவிடமெல்லாம் பரவெளியாய்த்தோன்ற
வொரு, வார்த்தைசொல்லவந்தமனுவேபராபரமே.

வானந்த மண்ணினந்தம வைத்துவைத்துப் பா
ர்க்கவெனக், கானந்தந் தந்த வரசே பராபரமே. ()

அன்பைப் பெருக்கியென தாருயிரைக்காக்கவ
ந்த, வின்பப்பெருக்கே யிறையேபராபரமே. (க௪)

வானமெல்லாங் கொண்ட மௌனமணிப் பெட்
டகத்துக், கானபணி யான வணியே பராபரமே. ()

ஓடுமிருநிதியு மொன்றாகக்கண்டவர்க
ளூடும்பொருளான நட்பேபராபரமே. (க௬)

சித்தநினைவுஞ் செயுஞ்செயலுநீயெனவா
மூத்தமர்கட்கான வுறவேபராபரமே. (க௭)

போதாந்த புண்ணியர்கள் போற்றிசயபோற்றி
யெனும். வேதாந்த வீட்டில் விளக்கே பராபரமே.

முத்தாந்தவீதி முளரிதொழுமன்பருக்கே
சித்தாந்தவீதிவருந் தேவேபராபரமே. (க௯)

ஈனந்தருமுடல வென்னதியானென்பதற
வானந்தம்வேண்டி யலந்தேன்பராபரமே. (௨0)

என்புருகிநெஞ்சமிளகிக்கரைந்துகரைந்
தன்புருவாய்நிற்கவலந்தேன்பராபரமே. (௨௧)

சுத்தவறிவாய்ச்சுகம்பொருந்தினல்லாலென்
சித்தந்தெளியாதென்செய்வேன்பராபரமே. (௨௨)

மாறுவனுபூதிவாய்க்கினல்லாலென்மயக்கந்
தேறுதென்செய்வேன் சிவமேபராபரமே. (௨௩)

தாகமறிந்தின்பகிட்டைதாராயேலாகெடுவேன்
றேகம்விழுந்திடினென்செய்வேன்பராபரமே. (௨௪)

அப்பாவென் னெப்பில்வைப்பே யாற்றகிலே
ன் போற்றியென்று, செப்புவதல் லால்வேறென்
செய்வேன் பராபரமே. (௨௫)

உற்றறியுமென்னறிவுமுட்கருவிபோற்சவிமாண்
டற்றுமின்பந்திலேயே யையாபராபரமே. (௨௬)

சொல்லாலடங்காச் சுகக்கடலில்வாய்மடுக்கி
னல்லாலென்றாக மறுமோபராபரமே. (௨௭)

பாராயோவென்னைமுகம் பார்த்தொருகாலென்
கவலை, தீராயோ வாய்திறந்துசெப்பாய்பராபரமே.

ஓயாதோவென்கவலை யுள்ளேயானந்தவெள்ளம்
பாயாதோவையா பகராய்பராபரமே. (௨௯)

ஓகோவெனைப்பிரிந்தா ருள்ளங்கனலில்வைத்த
பாகோமெழுகோ பகராய்பராபரமே. (௩௦)

கூர்த்தவறி வத்தனையுங் கொள்ளைகொடுத்துன் னருளைப், பார்த்தவறு னென்னைமுகம் பாராய் பராபரமே. (௩௧)

கடலமுதே தேனேயென் கண்ணேகவலைப் படமுடியா தென்னைமுகம் பார்பராபரமே. (௩௨)

உள்ளமறிவா யுழப்பறிவாய்நானேழை தள்ளிவிடின்மெத்தத் தவிப்பேன்பராபரமே (௩௩)

கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போலவெ னக், கென்றிரங்கு வாய்கருணை யெந்தாய் பராபரமே. (௩௪)

எண்ணாதவெண்ணமெலா மெண்ணி யெண்ணி யேழைநெஞ்சம், புண்ணாகச்செய்ததினிப் போதும் பராபரமே. (௩௫)

ஆழித்துரும்பெனவே யங்குமிங்குமுன்னடிமை பாழிற்றிரிவதென்ன பாவம்பராபரமே. (௩௬)

கற்றவறிவா லுனைநான் கண்டவன்போற் கூத் தாடிற், குற்றமென் றென்னெஞ்சே கொதிக்கும் பராபரமே. (௩௭)

ஐயோவுனைக்காண்பானாசை கொண்டதத்தனை யும், பொய்யோவெளியாப்புகலாய் பராபரமே. ()

துன்பக்கண்ணீரிற் றுளைந்தேர்க்குன்னானந்த வின்பக்கண்ணீர்வருவ தெந்நாள்பராபரமே. (௩௯)

வஞ்சனையும் பொய்யுமுள்ளே வைத்தழுக்காறு
யுளறு, நெஞ்சனுக்குமுண்டோ நெறிதான் பராப
ரமே. (௪0)

பாசம்போய்நின்றவர்போர் பாராட்டியாறுலு
மோசம்போனேனுன் முறையோபராபரமே. (௪௧)

நன்றறியேன்றீதறியே னென்றுநின்றவனு
ரென்றறியேனு னைமை யென்னேபராபரமே. (௪௨)

இன்றுபுதிதன்றே யெளியேன்படுந்துயர
மொன்றுமறியாயோ வுரையாய்பராபரமே. (௪௩)

எத்தனைதான் சன்மமெடுத்தெத்தனைநான்பட்டது
ய, ரத்தனையுநீயறிந்த தன்றோபராபரமே. (௪௪)

இந்தநாட்சற்று மிரங்கிலேயேற்காலன்வரு
மந்தநாட்காக்கவல்லா ரார்காண்பராபரமே. (௪௫)

உற்றுற்றுநாடி யுளமருண்டபாவியைநீ
சற்றிரங்கியாளத் தகாதோபராபரமே. (௪௬)

எள்ளளவுநின்னைவிட வில்லாவெனைமயக்கிற்
றள்ளுதலாலென்னபலன்சாற்றாய்பராபரமே. (௪௭)

பாடிப்படித்துலகிற் பாராட்டிநிற்பதற்கோ
தேடியெனையடிமை சேர்த்தாய்பராபரமே. (௪௮)

சொன்னத்தைச் சொல்வதல்லாற் சொல்லற
வேன் சொல்லுறுதிக், கென்னத்தைச் சொல்வே
னெளியேன் பராபரமே. (௪௯)

சொல்லும் பொருளுமற்றுச் சும்மா விருப்பதற்கே, யல்லும் பகலுமெனக் காசை பராபரமே. (௫0)

நேசநிருவிகற்ப நிட்டையல்லாலுன்னடிமைக் காசையுண்டோநீயறியா தன்றேபராபரமே. (௫௧)

துச்சமெனை வேண்டாமித் தொல்லுலகி லல்லல் கண்டா, லச்ச மிகவுடையே னையாபராபரமே. ()

கண்ணுவாரேனுமுனைக் கைகுவியாராயினந்த மண்ணுவார்நட்பை மதியேன்பராபரமே. (௫௩)

கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க,வெல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சைபராபரமே.

எத்தாற் பிழைப்பேனோவெந்தையே நின்னருட்கே, பித்தானேன் மெத்தவுநான்பேதைபராபரமே

வாயினாற்பேசா மௌனத்தைவைத்திருந்துந் தாயிலார்போனன் றளர்ந்தேன்பராபரமே. (௫௬)

அன்னையிலாச் சேய்போ லலக்கணுற்றேன்கண்ணா, வென்னகத்திற் றாய்போ லிருக்கும் பராபரமே. (௫௭)

உற்றுநினைக் கிற்றுயா முள்ளுள்ளே செந்தீயா
ய்ப், பற்றநொந்தே னென்னைமுகம் பார்நீபராபர
மே. (௫அ)

பொய்யனிவ னென்றுமெள்ளப் போதிப்பார்,
சொற்கேட்டுக், கைவிடவும் வேண்டா மென்கண்
ணே பராபரமே. (௫௯)

எண்ணமறிந்தே யிளைப்பறிந்தேயேழையுய்யும்
வண்ணந்திருக்கருணை வையாய்பராபரமே. (௬0)

நாட்டாதேயென்னையொன்றி னட்டியிதமகிதங்
காட்டாதேயெல்லாநீ கண்டாய்பராபரமே. (௬௧)

உன்னைநினைந் துன்னிறைவி னுள்ளே யுலாவுமெ
ன்னை, யன்னைவயிற் றின்னமடைக் காதேபராபர
மே. ௬௨)

பரமுனக் கென்னறெண்ணுல் பழக்கமே மாறு,
வரமெனக்குத்தந்தருளென் வாழ்வேபராபரமே.()

வந்தித்துநின்னை மறவாக்கடனைச்
சிந்திக்கநின்னதருள் செய்யாய்பராபரமே. (௬௪)

எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவு
நின், றெய்வவருட் கருணைசெய்யாய் பராபரமே.()

விட்டவெளிப் பேதையன்யான் வேறாகபடான் றறியேன், சிட்டருடன் சேரனந்ததெண்டன் பரா பரமே. (௬௬)

இரவுபகலற்றவிடத் தேகாந்தயோகம்
வரவுந்திருக்கருணை வையாய்பராபரமே. (௬௭)

மால்காட்டிச்சிந்தை மயங்காமனின்றுசுகக்
கால்காட்டிவாங்காதே கண்டாய்பராபரமே. (௬௮)

எப்பொருளு நீயெனவே யெண்ணிநான் னேன் றோத, வைப்பையழி யாநிலையா வையாய்பராபரமே.

சும்மாவிருப்பதுவே சுட்டற்றபூரணமென்
றெம்மாலறிதற் கெளிதோபராபரமே. (௭௦)

முன்னொடுபின்பக்க முடியடிநாப் பண்ணறநின் றன்னொடுநா னிற்பதென்றோ சாற்றாய் பராபரமே.

மைவண்ணந் தீர்ந்த மௌனிசொன்ன தெவ்வ ண்ண, மவ்வண்ண நிட்டை யருளாய் பராபரமே.

வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னரு ளாஞ், சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பரா பரமே. (௭௩)

ஆங்காரமற்றுன் னறிவானவன்யருக்கே
தூங்காததூக்கமது தூக்கும்பராபரமே. (எச)

சிந்தை யவிழ்ந்தவிழ்ந்து சின்மயமா நின்னடிக்கே, வந்த வர்க்கே யின்ப நிலை வாய்க்கும் பராபரமே. (எரு)

சொல்லாடா வூமரைப் போற் சொல்லிறந்து நீயாகி, னல்லா லெனக்கு முத்தி யாமோ பராபரமே. (எசா)

பேச்சாகாமோனம் பிறவாமுளைத்ததென்றற்
காச்சாச்சுமேற்பயனுண் டாமோ பராபரமே.

கெட்டியென்றுன் னன்பர் மலங் கெட்டயர்ந்தோர் பூரணமாந், தொட்டிலுக்குட் சேய்போற்று யின்றூர் பராபரமே. (எஅ)

காட்டவருளிருக்கக் காணுதிருண்மலத்து
நாட்டமெனக்குவர னன்றேபராபரமே. (எகூ)

எத்தன்மைக்குற்ற மியற்றிடினுந்தாய்பொறுக்கு
மத்தன்மைநின்னருளு மன்றேபராபரமே.

எத்தனையோ தேர்ந்தாலு மென்னுலே யின்பமுண்டோ, சித்துருவே யின்பச் சிவமே பராபரமே.

மண்ணொடு விண் காட்டி மறைந்து மறை யாவருளைக், கண்ணொடு கண் ணுகவென்று காண்பேன் பராபரமே. (அஉ)

பஞ்சரித்துநின்னைப் பலகாலிரந்ததெல்லா
மஞ்சலெனும்பொருட்டே யன்றோபராபரமே. ()

எங்கெங்கே பார்த்தாலு மெவ்வுயிர்க்கு மவ்வு
யிரா, யங்கங்கிருப்பதுநீ யன்றோபராபரமே. ()

அனைத்துமாய்நின்றாயே யான்வேறோநின்னை
நினைக்குமாறெங்கே நிகழ்த்தாய்பராபரமே. (அரு)

நின்போதத்தாலே நினைப்புமறப்புமென்று
லென்போதமெங்கே யியம்பாய்பராபரமே. (அசு)

ஒன்றை நினைந் தொன்றை மறந் தோடு மனமெ
ல்லா, நீயென்றறிந்தா லெங்கே யியங்கும் பராப
ரமே. (அஎ)

கொழுந்தில்வயிரமெனக் கோதறவுள்ளன்பி
லழுந்துமவர்க்கேசுகமுண் டாகும்பராபரமே. ()

பற்றும்பயிர்க்குப் படர்கொழுந்து போற் பரு
வம், பெற்ற வர்க்கே நின்னருடான் பேறும் பரா
பரமே. (அகூ)

யோகியர்க்கே ஞான மொழுங்காம் பேரன்
பான, தாகியரும் யோகமுன்னே சார்ந்தோர் பரா
பரமே. (கூ0)

அல்லும்பகலு மறிவாகிநின்றவர்க்கே
சொல்லும்பொருளுஞ் சுமைகான்பராபரமே. ()

எச்சிலென்று பூவை யிகழ்ந்தோர்க் குனைப்போ
ற்றப், பச்சிலையுங்கிள்ளப் படுமோபராபரமே. ()

அந்தக்கரண மடங்கத் துறப்பதுவே
யெந்தத்துறவினுநன் றெந்தாய்பராபரமே. (௬௩)

தன்னையறிந்தாற் றலைவன்மேற் பற்றலது, பின்
னையொருபற்று முண்டோ பேசாய்பராபரமே. ()

அன்பாற் கரைந்துகண்ணீ ராறுகண்ட புண்ணி
யருக், குன்பால் வரவழிதா னுண்டோ பராபரமே.

தன்னையறிந்தருளே தாரகமாநிற்பதுவே
யுன்னையறிதற் குபாயம்பராபரமே. (௬௫)

கற்றகலை யானிலைதான் காணுமோ காண்பதெல்
லா, மற்றவிடத் தேவெளியா மன்றோ பராபரமே.

கண் மூடிக் கண் விழித்துக் காண்ப துண்டோ
நின்னருளாம், விண் மூடினெல்லாம் வெளியாம்
பராபரமே. (௬௮)

நேரே நினதருளென் னெஞ்சைக் கவரி னென்
றும், பாரேன்சுகமும் படைப்பேன் பராபரமே. ()

வான்காண வேண்டின் மலையேற லொக்கு முன்
னை, நான்காணப்பாவனைசெய் நாட்டம்பராபரமே

வாதனைவிட் டுன்னருளின் மன்னினல்லால் வே றுமொரு, சாதனை தானுண்டோநீ சாற்றாய் பரா பரமே. (௧0௧)

பாரகமும்விண்ணகமும் பற்றாகநிற்பதருட் டாரகத்தைப்பற்றியன்றோ சாற்றாய்பராபரமே.

விளக்குந்தகளியையும் வேறென்றார்நின்னைத் துளக்கமறச்சீவனென்று சொல்வார்பராபரமே.

பாராதிநீயாப் பகர்ந்தாலகமெனவு மாராயுஞ்சீவனுநீ யாங்காண்பராபரமே. (௧0௪)

பொய்யைப் பொய்யென் றறியும் போதத்துக் காதரவுன், மெய்யருளே யன்றோ விளம்பாய் பரா பரமே. (௧0௫)

வருவான்வந் தேனெனல் போன் மன்னி யழியு ஞ்சகத்தைத், தெரிவாக வில்லையென்ற தீரம்பரா பரமே. (௧0௬)

மாயாசகமிலையேன் மற்றெனக்கோர்பற்றுமிலை நீயேநானென்றுவந்து நிற்பேன்பராபரமே.

வானாதிநீயெனவே வைத்தமறையென்னையுநீ தானாகச்சொல்லாதோ சாற்றாய்பராபரமே.

வெள்ளக்கருணைமத வேழமாநின்னருட்கென் கள்ளக்கருத்தே கவளம்பராபரமே. (௧0௮)

வண்டாய்த் துவண்டு மௌன மல ரணைமேற்,
கொண்டார்க்கோ வின்பங் கொடுப்பாய் பராப
ரமே. (௧௧௦)

மாயை முதலாம் வினைநீ மன்னுயிர்நீ மன்னுயிர்
தேர்ந், தாயுமறிவானதுநீ யன்றோ பராபரமே.

என்னறிவும்யானுமென தென்பதுவு மாமிவைக
ணின்னவையே யன்றோ நிகழ்த்தாய் பராபரமே.

பாரறியாதண்டப் பரப்பறியாதுன்பெருமை
யாரறிவார்நானோ வறிவேன்பராபரமே. (௧௧௩)

அண்ட மனைத்திலுமா யப்பாலுக் கப்பாலுங்,
கொண்ட நின்னை யாரறிந்து கொள்வார் பரா
பரமே. (௧௧௪)

ஒப்புயர் வொன்றின்றி யொலிபுகா மோன வட்
டக், கப்பனுக்காம் வான்பொருணீ கண்டாய் பரா
பரமே. (௧௧௫)

என்போலெளியவரு மெங்கெங்கும் பார்த்தாலு
முன்போல் வலியவரு முண்டோ பராபரமே.

பார்க்கினண்ட பிண்டப் பரப்பனைத்து நின்செ
யலே, யார்க்குஞ் செயலிலையே யையா பராபரமே

ஒன்றேபலவே யுருவேயருவேயோ
வென்றேயழைப்பதுன்னை யென்றோ பராபரமே.

செப்புவதெல் லாஞ் செபநான் சிந்திப்ப தெல்லாநின், றெப்பிறியான மென வோர்ந்தேன் பராபரமே. (௧௧௯)

ஆரிருந் தென்னூர் போயென் னாரமுதா நின்னருளின், சீரிருந்தா லுய்வேன் சிவமே பராபரமே.

அஞ்சநமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கு மஞ்சியுனையடைந்தே னையா பராபரமே. (௧௨௧)

எந்தப்படியுன் னிதயமிருந்ததெமக் கந்தப்படிவருவ தன்றோபராபரமே. (௧௨௨)

எந்தெந்த நாளு மெனைப் பிரியா தென்னுயிராய்ச் சிந்தைகுடி கொண்டவருட் டேவே பராபரமே.

அஞ்சலஞ்ச லென்றடிமைக் கப்போதைக் கப்போதே, நெஞ்சிலுணர்த்து நிறைவே பராபரமே.

என்னை யுன்றன் கைக்களித்தார் யாவரென்னை யான் கொடுத்துப், பின்னை யுன்னாற் பெற்ற நலம் பேசேன் பராபரமே. (௧௨௫)

வாய்பேசா வூமையென வைக்க வென்றோ நீ மௌனத், தாயாக வந்தருளைத் தந்தாய் பராபரமே. (௧௨௬)

தன்னைத் தந்தென்னைத் தடுத்தாண்ட நின் கருணைக், கென்னைக் கொண்டென்ன பல னெந்தாய் பராபரமே. (௧௨௭)

மார்க்கண்டர்க்காக மறலிபட்ட பாட்டை யுன்னிப், பார்க்கி னன்பர்க் கென்ன பயங்காண் பராபரமே. (௩௨௮)

சுட்டியுணராமற் றுரியநிலையாய்வெளியில்
விட்டநின்னையாளே வியப்பேன்பராபரமே.

சூதொன் றுமின்றி யென்னைச் சும்மா விருக்க வைத்தா, யீதொன்றும் போதாதோ வின்பம் பராபரமே. (௩௩௦)

வாயொன்றும் பேசா மௌனியாய் வந்தாண்ட,
தேயொன்றும்போதாதோ வின்பம் பராபரமே.

என்றுமிருந்தபடிக் கென்னையெனக்களித்த
தொன்றும்போதாதோவுரையாய் பராபரமே.

எண்டிசை கீழ்மேலான வெல்லாம் பெருவெளியாக், கண்டவிடத் தென்னையுநான் கண்டேன்பராபரமே. (௩௩௩)

பித்தனை யேதும் மறியாப் பேதையனை யாண்டவுனக், கெத்தனை தான் றெண்டமிடுவேன் பராபரமே. (௩௩௪)

தாயர்கர்ப்பத்தூடனமுந் தண்ணீருந்தந்தருளு
நேயவுனையாரே நினையார் பராபரமே. (௩௩௫)

விரிந்தமனமொடுங்கும் வேளையினுகைப்
பரந்தவருள்வாழி பதியேபராபரமே. (௩௩௬)

சிந்தனைபோய் நானெனல்போய்த் தேக்கவின்ப மாமழையை, வந்து பொழிந்தனை நீவாழி பரா பரமே. (௧௫௭)

தந்தேனே யோர்வசனந் தந்த படிக் கின்பமுமாய் வந்தேனேயென் றனைநீ வாழி பராபரமே. (௧௫௮)

மண்ணும் விண்ணும் வந்து வணங்காவோ நின் னருளைக், கண்ணுறவுட் கண்டவரைக் கண்டாற் பராபரமே. (௧௫௯)

என்றுங் கருணை பெற்ற வின்பத் தபோதனர் சொற், சென்ற சென்ற திக்கனைத்துஞ் செல்லும் பராபரமே. (௧௬௦)

ஆடுவதும்பாடுவது மானந்தமாகநின்னைத்
தேடுவதுநின்னடியார் செய்கைபராபரமே.

பொங்கியநின் றண்ணருளைப் புட்கலமாப் பெற் றவர்கட், கெங்கெழுந் தென்ஞாயி றியம்பாய்பரா பரமே. (௧௬௨)

பாலரொடு பேயர் பித்தர் பான்மையென நிற்ப துவே, சீலமிகு ஞானியர் தஞ்செய்கை பராபரமே

உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போற்றிரியுந் தொண்டர் விளையாட்டே சுகங்காண் பராபரமே.

கங்குற்பகலற்றதிருக் காட்சியர்கள்கண்டவழி
யெங்குமொருவழியே யெந்தாய் பராபரமே. ()

காயநிலையல்லவென்று காண்பாருறங்குவரோ
தூயவருட்பற்றுத் தொடர்வார்பராபரமே. ()

அப்புமுப்பும் போன்ற வயிக்யபரா னந்தர்தமக்
கொப்புவமை சொல்லவும்வா யுண்டோபராபரமே

சித்தந்தெளிந்துசிவ மானோரெல்லோர்க்குங்
கொத்தடிமையான குடிநான்பராபரமே. (கசஅ)

தம்முயிர்போலெவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர், செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே. (கசகூ)

விண்ணுக்கும்விண்ணாகி மேவுமுனக்கியான்பூசை
பண்ணிநிற்குமாறு பகராய்பராபரமே. (கடுo)

நெஞ்சகமேகோயி னினைவேசுகந்தமன்பே
மஞ்சனநீர்பூசைகொள்ள வாராய்பராபரமே. ()

கெட்டவழியாணவப்பேய் கீழாகமேலான
சிட்டருனைப்பூசை செய்வார்பராபரமே. (கடுஉ)

கால்பிடித்துமூலக் கனலைமதிமண்டலத்தின்
மேலெழுப்பிற்றேகம் விழுமோபராபரமே. (கடுஙு)

பஞ்சசுத்திசெய்துநின்னைப் பாவித்துப்பூசைசெ
ய்தால், விஞ்சியஞானம் விளங்கும் பராபரமே.

அன்பர்பணிசெய்யவெனை யாளாக்கிவிட்டுவிட்டா
லின்பநிலைதானேவந் தெய்தும்பராபரமே. (கருரு)

மூர்த்திதலந்தீர்த்தமுறையாற்றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச்சற்குருவும்வாய்க்கும்பராபரமே.

விரும்புஞ்சரியைமுதன் மெய்ஞ்ஞானநான்கு
மரும்புமலர்காய்கனிபோ லன்றோபராபரமே.

தானந்தவந்தருமஞ் சந்ததமுஞ்செய்வர்சிவ
ஞானந்தனையணைய நல்லோர்பராபரமே. (கருஅ)

சொன்னத்தைச்சொல்லித் துடிக்கின்றவாணவ
ப்பேய்க், கின்னல்வருவதெந்நா ளெந்தாய்பராபர
மே. (கருக)

இன்றோவிருவினைவந் தேறியதுநானென்றோ
வன்றேவிளைந்ததன்றோ வாற்றேன்பராபரமே.

எண்ணமுந்தா னின்னைவிட வில்லையென்றால்யா
ன்முனமே, பண்ணவினையேது பகராய்பராபரமே.

என்னையின்னதென் றறியாவேழைக்குமா கெடு
வேன், முன்னைவினை கூடன் முறையோபராபரமே.

அறியாநான்செய்வினையை யையாநீகூட்டுங்
குறியேதெனக்குளவு கூறாய்பராபரமே. (௧௬௩)

என்னைக்கெடுக்க விசைந்தவிருவினைநோய்
தன்னைக்கெடுக்கத் தகாதோபராபரமே. (௧௬௪)

வல்லமையேகாட்டுகின்ற மாமாயைநானொருவ
னில்லையெனினெங்கே யிருக்கும்பராபரமே.

முக்குணத்தாலெல்லா முளைக்கப்பிரகிருதிக்
கக்குணத்தைநல்கியதா ரெந்தாய்பராபரமே.

ஆற்றப்படாதுதுன்ப மையவென்றாலென்மனது
தேற்றப்படாதினியென் செய்வேன்பராபரமே.

பூராயமாய்மனதைப் போக்கவறியாமலேயோ
பாராயலைந்தே னரசேபராபரமே. (௧௬௮)

சினமிறக்கக்கற்றாலுஞ் சித்தியெல்லாம்பெற்றாலு
மனமிறக்கக்கல்லார்க்கு வாயேன்பராபரமே.

வாதுக்குவந்தெதிர்த்த மல்லரைப்போற்பாழ்த்
தமனமேதுக்குக்கூத்தாடு தெந்தாய்பராபரமே.

சூதாடுவார்போற் றுவண்டுறுவண்டுமனம்
வாதாடினென்னபலன் வாய்க்கும்பராபரமே.

கொள்ளித்தேள்கொட்டிக்குதிக்கின்ற பேய்க்கு ரங்காய்க், கள்ளமனந்துள்ளுவதென் கண்டாய்ப ராபரமே. (கள௨)

வந்ததையும் போனதையும் வைத்து வைத்துப் பார்த்திருந்தாற், சிந்தையிதமகிதஞ் சேரும்பராப ரமே. (கள௩)

ஏறுமயிர்ப்பாலமுணர் விந்தவிடயங்களொருப் பாறெனவுநன்று வறிந்தேன்பராபரமே. (களச)

பொறிவழியேயேழை பொரியாயுழல்வதுநின் னறிவின்விதித்தவிதி யாமோபராபரமே. (கள௫)

பாசசாலங்களெல்லாம் பற்றறவிடஞானவைவாள் வீசுநாளெந்நாள் விளம்பாய்பராபரமே. (கள௬)

எந்தவுடலேனு மெடுத்தவுடனல்லதென்று சிந்தைசெயவந்ததிறஞ் செப்பாய்பராபரமே.

பொய்யெல்லா மொன்றாய்ப் பொருந்தி வைத்த பொய்யுடலை, மெய்யென்றென்மொய்யாய் விடுமோ பராபரமே (கள௮)

மின்னனையபொய்யுடலை மெய்யென்றுநம்பினை யோ, நின்னைமறக்கை நெறியோ பராபரமே.

நித்தியமொன்றில்லாத நீர்க்குமிழிபோன்றவுட ற், கித்தனைதான்றுன்பமுண்டோ வென்னைபராப ரமே. (கஅ0)

தேகமிரு மென்றுசடர் தேம்புவதென் னித்தி
ரையி, னூகமறிந்தாற்பயந்தா னுண்டோபராபரமே

ஏதச்சுமையா வெடுப்பாரெடுத்தவுடற்
சேதமுறின்யாதுபின்னே செல்லும்பராபரமே.

தோற்பாவை நாலாட் சுமையாகுஞ்சீவனென்றீட்
கார்ப்பாலெடுத்த தெவராலே பராபரமே.

ஞாலத்தை மெய்யெனவே நம்பி நம்பி நாளுமெ
ன்றன், காலத்தைப் போக்கி யென்ன கண்டேன்
பராபரமே. (௧அ௪)

பொய்யுலக வாழ்க்கைப் புலைச்சேரிவாதனைநின்
மெய்யருளின்மூழ்கின் விடுங்காண் பராபரமே.

நூலேணிவிண்ணேற நூற்குப்பருத்திவைப்பார்
போலேகருவிநன் னூற் போதம்பராபரமே. (௧அ௬)

சின்னஞ் சிறியார்கள் செய்த மணற் சோற்றை
யொக்கு, மன்னுங்கலைஞான மார்க்கம் பராபரமே.

வாசகஞானத்தால் வருமோசுகம்பாழ்த்த
பூசலென்றுபோமோ புகலாய்பராபரமே. (௧அஅ)

கேட்டதையேசொல்லுங் கிளிபோலநின்னருளி
னூட்டமின்றிவாய்பேச னன்றோபராபரமே.

வெளியாயருளில் விரவுமன்பர்தேக
மொளியாய்ப்பிறங்கியது முண்டோ பராபரமே.

காலமொருமூன்றுங் கருத்திலுணர்ந்தாலுமதை
ஞாலந்தனக்குரையார் நல்லோர்பராபரமே.

கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்
லோர்மற், றல்லாதார்யாரோவறியேன்பராபரமே.

இல்லாதகாரியத்தை யிச்சித்துச்சிந்தைவழி
செல்லாமைநல்லோர் திறங்காண்பராபரமே.

ஏதுவந்து மேதொழிந்து மென்ன தியானென்
னார்கள்; போதநிலை கண்ட புலத்தோர் பராபரமே

ஆயிரஞ்சொன்னாலு மறியாதவஞ்சநெஞ்சப்
பேயரொடுகூடிற் பிழைகாண்பராபரமே. (௧௬௫)

மாயமயக்கொழிந்தார் மற்றொன்றைநாடுவரோ
நேயவருணிலையி னிற்பார்பராபரமே. (௧௬௬)

நித்திரையிற் செத்த பிண நேருமுடற் கிச்சை
வையாச், சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே

எந்நெஞ்சமேனு மிரங்குமேநின்னருட்குக்
கன்னெஞ்சருமுளரோ காட்டாய்பராபரமே.

மந்தவறி வாகியின்பம் வாயா திருந்தலைந்தாற்,
சிந்தைமயங் காதோவென் செய்வேன் பராபரமே.

தேடினேன் றிக்கனைத்துந் தெண்ட மிட்டேன் சிந்தை நைந்து, வாடினே னென்மயக்க மாற்றாய் பராபரமே. (௨௦௦)

மடிமை யெனு மொன்றை மறுத்தன்றோ வென்னை, யடிமைகொளல் வேண்டு மரசே பராபரமே. ( )

காலர்பயந்தீரவின்பக் கற்கபயமென்றெழுந்த மாலைவளர்த்தனையே வாழிபராபரமே. (௨௦௨)

நீர்ப்புற் புதமாய் நினைவருட்கே நின்றழியப்பா ர்ப்பதல்லால் வேறுமொன்றைப் பாரேன் பராப ரமே. (௨௦௩)

நீர்க்குமிழி போலென் னினைவு வெளி யாய்க்க ரையப், பார்க்குமிட மெல்லாமென்பார்வை பரா பரமே. (௨௦௪)

ஆடியோய் பம்பரம்போ லாசையுட னெங்குமு ளைத், தேடியோய் கின்றே னென் செய்வேன் பரா பரமே. (௨௦௫)

வேதாந்தஞ் சித்தாந்தம் வேறென்னார் கண்களி க்கு, நாதாந்தமோன நலமேபராபரமே. (௨௦௬)

ஆனந்தமானநின்னை யன்றியொன்றையுன்னாத மோனந்தமியேற்கு முத்திபராபரமே. (௨௦௭)

ஏதுக்கு முன்னைவிட லில்லையென்று லென்கரு த்தைச், சோதிக்க வேண்டா நான் சொன்னேன் பராபரமே. (௨0௮)

முத்தியிலுந் தேக மிசை மூவிதமாஞ் சித்தி பெ ற்றோர், ரெத்தனைபே ரென்றுரைப்ப தெந்தாய்பரா பரமே. (௨0௯)

நீயன்றி நானுண்டோ நினைவாரென்னெஞ்சகமார் தாயன்றிச்சூலுமுண்டோ சாற்றாய்பராபரமே.

ஓங்கமேனின்வடிவ மானசுகர்கூப்பிடநீ யெங்குமேனேனென்ற தென்னேபராபரமே.

கொள்ளைவெள்ளத் தண்ணருண்மேற் கொண்டு சுழித் தார்த்திழுத்தாற், கள்ளமனக் கப்பலெங்கே காணும் பராபரமே. (௨௧௨)

எக்கலையுங் கற்றுணர்ந்தோ னென்ற வர்க்குஞ் சம்மதஞ்சொல், வக்கணையா லின்பம்வருமோபரா பரமே. (௨௧௩)

கல்லெறியப்பாசி கலைந்துநன்னீர் காணுநல்லோ ர், சொல்லுமெயின் ஞானம் வந்து தோன்றும்பரா பரமே. (௨௧௪)

நின்னையுணர்ந்தோர்கடமை நிந்தித்தபேயறிஞ ரென்னகதிபெறுவா ரெந்தாய்பராபரமே. (௨௧௫)

என்னதியா னென்னலற்றோ ரெங்கிருந்து பார்க்கினுநின், சன்னிதியா நீபெரிய சாமிபராபரமே.()

சோற்றுத்துருத்திச் சுமைசுமப்பக் கண்பிதுங்கக் காற்றைப்பிடித்தலைந்தேன் கண்டாய்பராபரமே.()

உள்ளபடி யொன்றை யுரைக்கினவர்க் குள்ளூற வாய்க், கள்ளமின்றி யன்பாய்க் களிப்பேன் பராபரமே. (௨௧௮)

அடுத்தவியல் பாகவொன்றை யான்பகர்வதல்லாற், றொடுத்தவொன்றை யான்வேண்டிச் சொல்லேன் பராபரமே. (௨௧௯)

உள்ளமறி யாதொருவ ரொன்றையுன்னிப்பேசிலையோ, துள்ளியிளங் கன்றாய்த் துடிப்பேன் பராபரமே. (௨௨௦)

எல்லாருமின்புற் றிருக்கநினைப்பதுவே யல்லாமல்வேறொன் றறியேன்பராபரமே. (௨௨௧)

முன்னாண்மெய்ஞ்ஞான முனிவர்தவமீட்டுதல்போலிந்நாளிற் காணவெனக் கிச்சைபராபரமே.

கன்மமென்பதெல்லாங் கரிசறவேமெய்ஞ்ஞான தன்மநிலைசார்ந்ததன்பர் தன்மைபராபரமே.

கண்டுயிலாதென்னறிவின் கண்ணூடேகாட்சிபெற
மண்டியபேரொளிநீ வாழிபராபரமே. (௨௨௪)

நானென தன்மையென்று நாடாமனுடவின்ப
வானகிநின்றனை நீ வாழிபராபரமே. (௨௨௫)

அகத்தூடனூவனூவா யண்டமெல்லாந்தானாய்
மகத்தாகிநின்றனை நீ வாழிபராபரமே. (௨௨௬)

காரகமாங் கர்ப்பவறைக் கண்ணூடு மென்கண்
ணே, வாரம்வைத்துக்காத்தனை நீ வாழிபராபரமே.

பூரந்தோர்தந்தேசமென்பார் பூமியைப்போராடி
யிரந்தோருந்தம்மதென்பா ரென்னேபராபரமே.

மூர்த்தியெல்லாம் வாழியெங்கண் மோனகுரு
வாழியருள், வார்த்தையென்றும் வாழியன்பர் வா
ழிபராபரமே. (௨௨௯

சொல்லும்பொருளுந் தொடராவருணிறைவிற்
செல்லும்படிக்கருணீ செய்தாய்பராபரமே.

இறைவரைக்குள்ளாக வெண்ணரியசித்திமுத்தி
பெற்றவர்களெத்தனைபேர் பேசாய்பராபரமே.

நாடுநகருநிசா ருட்டியபாளயமும்
வீடுசெயுமோமுடிவி லெந்தாய்பராபரமே. (௨௩௨

தேடுந்திரவியமுஞ் சேர்ந்தமணிப்பெட்டகமுங்
கூடவருந்துணையோ கூறாய்பராபரமே. (௨௩௩)

தேடாத தேட்டினரே செங்கைத் துலாக்கோல்
போல், வாடாச்சமனிலையில் வாழ்வார் பராபரமே.

நீராய்க்கசிந்துருகி நெட்டுயிர்த்துநின்றேனைப்
பாராததென்னோ பகராய்பராபரமே. (௨௩௫)

உள்ளபொருளாவி யுடன்மூன்றுமன்றேதான்
கொள்ளைகொண்டநீயென் குறைதீர்பராபரமே.

ஆழ்ந்தாயேயிவ்வுலகி லல்லலெல்லாந் தீர்ந்தரு
ளால், வாழ்ந்தாயே யென்றனைநீ வாழிபராபரமே.

தாராவருளையெல்லாந் தந்தெனையுநின்னருளில்
வாராயோவென்றனைநீ வாழிபராபரமே. (௨௩௮)

ஆசையுன்மீதல்லா லருளறியவேறுமொன்றிற்
பாசம்வையேனின்கருணைப் பாங்காற்பராபரமே.

ஆதியந்தநீகுருவா யாண்டதல்லா னின்னையன்
றிப், போதனையுமுண்டோ புகலாய் பராபரமே.

தானாகவந்து தடுத்தாண்டெனையின்ப
வானாகச்செய்தவின்ப வானேபராபரமே. (௨௪௧)

பற்றற்றிருக்குநெறி பற்றிற்கடன்மலையுஞ்
சுற்றநினைக்குமனஞ் சொன்னேன்பராபரமே.

படிப்பற்றுக்கேள்வியற்றுப் பற்றற்றுச்சிந்தைத்
துடிப்பற்றார்க்கன்றோ சுகங்காண்பராபரமே.

சத்தாகிநின்றோர் சடங்களிலிங்கமெனை
வைத்தாருமுண்டோ வென்வாழ்வேபராபரமே.

சித்தநிருவிகற்பஞ் சேர்ந்தாருடற்றீபம்
வைத்தகர்ப்பூரம்போல் வயங்கும்பராபரமே.

ஆதிகாலத்திலெனை யாண்டனையேயிப்பானீ
போதியெனினெங்கேநான் போவேன்பராபரமே.

நாவழுத்துஞ்சொன்மலரோ நாடுதிக்கும்பொ
ன்மலரோ, தேவையுனக்கின்னதென்று செப்பாய்
பராபரமே. (௨௪௭)

கன்னறரும் பாகாய்க் கருப்புவட்டாய்க் கற்க
ண்டா,யின்னமுதாயென்னுளிருந்தாய் பராபரமே.

சிற்பரமேதற்பரமே தெய்வச்சுருதிசொன்ன
வற்புதமேயன்பே யறிவேபராபரமே. (௨௪௯)

அறிவிப்பானீயென்றாலைம்புலங்கடந்த
நெறிநிற்பர்யாரேநிகழ்த்தாய்பராபரமே. (௨௫௦)

அந்தக்கரணமெனு மாகாதபேய்களெனை
வந்துபிடித்தாட்ட வழக்கோபராபரமே. (உ௫௧)

ஐவரொடுங்கூடாம லந்தரங்கசேவைதந்த
தெய்வவறிவே சிவமேபராபரமே. (உ௫உ)

அருளாகிநின்றசுக மாகாமலேயோ
விருளாகிநிற்க வியல்போபராபரமே. (உ௫௩)

அன்பரெல்லாமின்ப மருந்திடவும்யாளொருவன்
றுன்புறுதனன்றோநீ சொல்லாய்பராபரமே.

சந்ததமுநின் கருணை சாற்றுவதல்லால்வேறு
சிந்தையறியேனுன் சித்தம்பராபரமே. (உ௫௫)

நானெனைக்குளறு நாட்டத்தா லென்னைவிட்
டுப்,போனாலுமுன்னைவிட்டுப்போகேன் பராபரமே.

இக்காயம்பொய்யென்றோ ரீட்டத்துனக்கபயம்
புக்காதாருண்டோபுகலாய் பராபரமே. (உ௫௭)

தானதல்பூரணமே சாருமிடமுண்டுயிரும்
வானதியுமொழுங்காய்மன் னும்பராபரமே(உ௫அ)

உன்னுமனங்கர்ப்பூர வுண்டைபோலேகரைய
மின்னுமானந்த விளக்கேபராபரமே. (உ௫௯)

நாட்பட்டலைந்த நடுக்கமெல்லாந்தீரவுனக்
காட்பட்டுந்துன்பமெனக்காமோபராபரமே.

பாவிபடுங்கண்கலக்கம் பார்த்துமிரங்காதிருந்தா
லாவிக்குறுதுணையா ரையாபராபரமே. (௨௬௧)

நின்னிறைவேதாரகமாய் நின்றுசுகமெய்தாம
லென்னிறைவேபாவித்தே னென்னேபராபரமே.(

நின்னைச் சரண்புகுந்தா னீகாக்கல் வேண்டுமல்
லா, லென்னைப்புறம்விடுத லென்னே பராபரமே.(

மாறாத துன்பமெல்லாம் வந்துரைத்தானின்செ
வியி, லேறாதவாறே தியம்பாய் பராபரமே.(௨௬௪)

விஞ்சுபுலப் பாடனைத்தும் வீறாதுன்பஞ்செய்ய
வந்த, வஞ்சுபுல வேடருக்கு மாற்றேன்பராபரமே

கன்னங்கரியநிறக் காமாதிராக்ஷசப்பேய்க்
கென்னையிலக்காகவைத்த தென்னேபராபரமே.(

சித்திநெறிகேட்டல் செகமயக்கஞ்சென்மமற
முத்திநெறிகேட்டன முறைகாண்பராபரமே.

சிந்தைசிதையச் சிதையாதவானந்த
மெந்தவகையாலேவந்தெய்தும்பராபரமே.(௨௬௮)

கூர்த்தவறிவாலறியக் கூடாதெனக்குரவன்
றேர்த்தபடிதானே திரிந்தேன்பராபரமே. (௨௬௯

பத்தாருந்தும் பரமசுகம்யானருந்த
வெத்தனைநாள்செல்லு மியம்பாய்பராபரமே. ()

தீரத்திறற்றறவு சேராமலிவ்வுலகிற்
பாரத்தனம்பேசல் பண்போபராபரமே. (உஎக)

இந்தவெளியினையுண் டேப்பமிடப்பேரறிவாந்
தந்தவெளிக்கேவெளியாய்ச்சார்ந்தேன்பராபரமே

உணர்த்து முனைநாடா துணர்ந்தவை யேநாடி,
யிணக்குறுமென்னைமைமைதானென்னே பராபர
மே. (உஎ௩)

உண்டுபோலின்று முலகைத்திரமெனவுட்
கொண்டுநான்பெற்றபலன் கூறாய்பராபரமே.

உள்ளபடி யாதுமென வுற்றுணர்ந்தே னக்கண
மே, கள்ளமனம்போனவழி காணேன்பராபரமே.

சித்தமவுனஞ் செயல்வாக்கெலாமவுனஞ்
சுத்தமவுனமென்பாற்றேன்றிற்பராபரமே.(உஎசு)

எண்ணில்பல கோடியுயி ரெத்தனையோ வத்த
னைக்கும், கண்ணிற் கலந்தவருட் கண்ணே பராப
ரமே (உஎஎ)

எனக்கினியாருன்போலு மில்லையென்றால்யானு
முனக்கினியானாகா வளவேன்பராபரமே. (உஎஅ)

அண்டபிண்டங்காணே னகமும் புறமுமொன்றுக்
கண்டவென்னை நீகலந்த காலம்பராபரமே. (உ௭௯)

எத்தனையோகோடி யெடுத்தெடுத்துச்சொன்னா
லுஞ், சித்தமிரங்கிலையென் செய்வேன் பராபரமே

அன்றந்தநால்வருக்கு மற்புதமாநீயுரைத்த
தொன்றந்தவார்த்தையெனக்குண்டோபராபரமே

அப்பனென்று மன்னையென்று மாரியனென்று
ம்முனையே, செப்புவதுமுன்னிலையின்சீர்காண்பரா
பரமே. (உ௮உ)

கட்டுங்கனமுமந்தக் காலர்வரும்போதெதிர்த்து
வெட்டுந்தளமோ விளம்பாய்பராபரமே. (உ௮௩)

பேசாதமோனநிலை பெற்றன்றோநின்னருளாம்
வாசாமகோசரந்தான் வாய்க்கும்பராபரமே.

கற்றாலுங்கேட்டாலுங் காயமழியாதசித்தி
பெற்றாலுமின்பமுண்டோ பேசாய்பராபரமே.

கண்டவடிவெல்லாங் கரைக்கின்றவஞ்சனம்போ
லண்டமெல்லாநின்னருளே யன்றோபராபரமே.

தன்செயலாலொன்றுமிலை தானென்றனென்பாவி
நின்செயலாய்நில்லா நினைவேன்பராபரமே.(உ௮௭)

கொலைகளவுகட்காமங் கோபம்விட்டாலன்றோ
மலையிலக்காநின்னருடான் வாய்க்கும்பராபரமே.

தன்னையறியாதுசகந் தானாயிருந்துவிட்டா
லுன்னையறியவரு ளுண்டோபராபரமே. (௨௯௰)

ஒன்றிரண்டென்றுன்னுவுணர்வுகொடுத்துள்ளபடி
யென்றுமென்னைவையா யிறையேபராபரமே.

கருதுமடியார்களுளங் காணவெளியாகுந்
துரியநிறைவான சுகமேபராபரமே. (௨௯௧)

பொய்குவித்த நெஞ்சனருட் பொற்பறிந்துதிக்
கனைத்துங், கைகுவித்துநிற்பதெந்தக் காலம்பராப
ரமே. (௨௯௨)

அத்துவிதமான வயிக்யவனுபவமே
சுத்தநிலையந்நிலையார் சொல்வார்பராபரமே(௨௯௩)

வைத்த சுவரலம்பின் மண்போமோ மாயையி
னோர்க், கெத்தனைபோ தித்துமென்னா மெந்தாய்ப
ராபரமே. (௨௯௪)

பூட்டற்றுத் தேகமற்றுப் போகுமுன்னை நின்ன
ருளைக், காட்டத்தகாதோ வென்கண்ணே பராபர
மே. (௨௯௫)

சொல்லிப்பதற்கரிதாந் சொன்முடிவுகாணுதார்
செல்லிற்பதர்போல நிற்பார்பராபரமே. (உ௬௬)

அழுக்காற்றுனெஞ்ச மழுங்கியபுன்மாக்க
ளிழுக்காற்றுலின்பநல மெய்தார்பராபரமே.

தேகாதிபொய்யெனவே தேர்ந்தவுபசாந்தருக்கு
மோகாதியுண்டோமொழியாய்பராபரமே. (உ௬அ)

சாதனையெல்லாமவிழத் தற்போதங்காட்டாதோர்
போதனைநீக்குவதெப் போதோபராபரமே.

ஒன்றுமறியாவிருளாமுள்ளம் படைத்தவெனக்
கென்றுகதிவருவ தெந்தாய்பராபரமே. (௩௦௦)

சிந்திக்குந்தோறுமென்னுட் சிற்சுகமாயூற்றூறிப்
புந்திக்குணின்றவருட் பொற்பேபராபரமே (௩௦௧)

என்றுமடைந்தோர்கட் கிரங்கார்குறிப்பனைத்துங்
கன்றையுதைகாலி கதைகாண்பராபரமே. (௩௦௨)

குற்றங்குறையக் குணமேலிடவருளை
யுற்றவரேயாவிக் குறவாம்பராபரமே. (௩௦௩)

ஒருமையால் வாய்க்குமுண்மைக் கோரனந்தநா
ல்கோடிப், பேருரையாற்பேசிலென்ன பேறும்பரா
பரமே.
(௩௦௪)

சொல்லுஞ்சமயநெறிச் சுற்றுக்குளேசுழலு
மல்லலொழிவதென்றைக் கையாபராபரமே.

பிடித்ததையேதாபிக்கும் பேராணவத்தை
யடித்துத்துரத்தவல்லா ரார்காண்பராபரமே.

நேசத்தானின்னை நினைக்குநினைவுடையார்
ஆசைக்கடலி லழுந்தார்பராபரமே. (௩0௭)

கள்ளாதுகட்டுணவுங் காரியமோநாளொருசொற்
கொள்ளாததோஷமன்றோ கூறாய்பராபரமே.

சென்றவிடமெல்லாந் திருவருளேதாரகமா
நின்றவர்க்கேயானந்த நிட்டைபராபரமே. (௩0௯)

நீட்சிகுறுகலில்லா நித்யசுகாரம்பசக
சாக்ஷியாமுன்னைவந்து சார்ந்ததென்பராபரமே.

வாணுதிகத்துவமாய் மன்னிநின்றகாரணநீ
நாணுகிநிற்பதெந்த நாளோபராபரமே. (௩௧௧)

காட்டத்திலங்கிகடைய வந்தாலென்னவுன்னு
நாட்டத்தினூடுவந்த நட்பேபராபரமே. (௩௧௨)

நித்திரையாய்த்தானே நினைவயர்ந்தானித்தநித்
தஞ், செத்தபிழைப்பானதெங்கள் செய்கைபராப
ரமே. (௩௧௩)

இன்பநிட்டையெய்தாமல் யாதெனினுஞ் சென்
றமனந், துன்புறுதல் வன்பிறவித்துக்கம் பராப
ரமே. (௩௧௪)

பொய்யகலமெய்யான போதநிலைகண்டோர்க்கோ
ரையமில்லையையமில்லை யையாபராபரமே (௩௧௫)

மந்திரத்தையுன்னி மயங்காதெனக்கினியோர்
தந்திரத்தைவைக்கத் தகாதோபராபரமே.(௩௧௬)

விண்கருணைபூத்ததென்ன மேவியுயிர்க்குயிராய்த்
தண்கருணைதோன்றவருடாய்நீபராபரமே. (௩௧௭)

தன்மயமாய்நின்றநிலை தானேதானாகிநின்று
னின்மயமாயெல்லா நிகழும்பராபரமே. (௩௧௮)

ஏங்கியிடையுநெஞ்ச மேழையைநீவாவென்றே
பாங்குபெறச்செய்வதுன்மேற் பாரம்பராபரமே

ஆண்டநின்னை நீங்கா வடிமைகள்யா மாணவத்
தைப், பூண்டதென்ன கன்மம் புகலாய்பராபரமே.

எங்கணுநீயென்று லிருந்தபடியெய்தாம
லிங்குமிங்குமென்றலைய லாமோபராபரமே.(௩௨௧)

கற்குமதுவுண்டு களித்தலல்லாலின்னருளி
னிற்குமது தந்ததுண்டோ நீதான்பராபரமே.

அண்டபகிரண்ட மறியாதநின்வடிவைக்
கண்டவரைக்கண்டாற்கதியாம்பராபரமே.(௩௨௩)

கலக்கமுறநெஞ்சைக் கலக்கித்திருப்பத்
துலக்குபவனீயலையோ சொல்லாய்பராபரமே.

சிந்தையு மென்போலச் செயலற் றடங்கிவிட்டால், வந்த தெலா நின்செயலாவாழ்வேன் பராபரமே. (௩௨௫)

பந்தமெலாந்தீரப் பரஞ்சோதிநீகுருவாய்
வந்தவடிவை மறவேன்பராபரமே. (௩௨௬)

தானந்தமான சகசநிருவிகற்ப
வானந்தநிட்டையருளாயாபராபரமே. (௩௨௭)

அல்லலெல்லாந் தீரவெனக் கானந்த மாகவொரு, சொல்லையென்பால்வைத்ததையென்சொல்வேன்பராபரமே. (௩௨௮)

சிந்தைமயக்கமறச் சின்மயமாய்நின்றவுன்னைத்
தந்தவுனக்கென்னையுநான் றந்தேன்பராபரமே.

மைகாட்டுமாயை மயக்கமறநீகுருவாய்க்
கைகாட்டவுங்கனவு கண்டேன்பராபரமே. (௩௩௦)

மால்வைத்தசிந்தை மயக்கர வென் சென்னி மிசைக், கால்வைக்கவுங்கனவுகண்டேன் பராபரமே.

மண்ணுனை மாயையெல்லா மாண்டுவெளியாக விரு, கண்ணாரவுங்கனவு கண்டேன் பராபரமே.

மண்ணீர்மையாலே மயங்காதுன் கையாலென்
கண்ணீர்துடைக்கவுநான் கண்டேன்பராபரமே ()

உள்ள துணரா வுணர்விலிமா பாவியென்றோ,
மெள்ளமெள்ளக் கைநெகிழ விட்டாய்பராபரமே.

எல்லாநினதுசெய லென்றெண்ணுமெண்ணமுநீ
யல்லாலெனக்குளதோ வையாபராபரமே. (௩௩௫)

பந்தமயக்கிருக்கப் பற்றொழிந்தேனென்றுளறு
மிந்தமயக்க மெனக்கேன்பராபரமே. (௩௩௬)

காட்சியெல்லாங் கண்ணை விடக் கண்ட துன்
டோ யாதினுக்கு, மாட்சியுனதருளே யன்றோபரா
பரமே. (௩௩௭)

எட்டுத்திசையுமொன்றா யின்பமாய் நின்ற வுன்
னை, விட்டுப்பிரியவிடம் வேறோபராபரமே.(௩௩௮)

பிரியாதுயிர்க்குயிராய்ப் பின்னமறவோங்குஞ் *
செறிவேயறிவே சிவமேபராபரமே. (௩௩௯)

ஏதேதுசொன்னாலு மெள்ளளவுநீயிரங்காச்
சூதேதெனக்குளவு சொல்லாய்பராபரமே. (௩௪௦)

கற்பனையாய்ப் பாடுகின்றேன்கண்ணீருங் கம்பலை
யுஞ், சொற்பனத்துங் காணேனென் சொல்வேன்
பராபரமே. (௩௪௧)

வன்பொன்றுநீங்கா மனதிறப்பமாறுப்பே
ரன்பொன்றும்பேர்து மெனக்கையாபராபரமே. ()

ஏதுங்தெரியா வெளியேணைவாவெனநின்
போதநிலைகாட்டிற் பொறுதோபராபரமே.(௩௪௩)

ஓராமலெல்லா மொழிந்தேற்குன்றெய்வவரு
டாராதிருக்கத் தகுமோபராபரமே. (௩௪௪)

மோனந்தருஞான மூட்டியெனக்குவட்டா
வானந்தவாழ்க்கை யருளாய்பராபரமே. (௩௪௫)

வாடுமுகங்கண்டென்னை வாடாமலேகாத்த
நீடுங்கருணை நிறைவேபராபரமே. (௩௪௬)

புந்தியினு னின்னடியைப்போற்றுகின்ற மெய்ய
டியார், சிந்தையிறப்போ நின்றியானம் பராபரமே.

உனக்குவமையாக்கருணை யுள்ளவருமவன்மைக்
கெனக்குவமையானவரு மில்லைபராபரமே.(௩௪௮)

தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற்போ லெவ்விட
த்து, நீயிருந்து நான்றளர்ந்துநின்றேன் பராபரமே

வாயாற் கிணறுகெட்ட வாறேபோல் வாய்பே
சிப், பேயானர்க் கின்பமுண்டோ பேசாய் பராபர
மே. (௩௫௦)

பாவமென்றாலேதும் பயமின்றிச்செய்யவிந்தச்
சீவனுக்கார்போதந் தெரித்தார்பராபரமே.

இன்பநிருவிகற்ப மின்றேதாவன்றெனிலோ
துன்பம்பொறுப்பரிதுசொன்னேன்பராபரமே.

கற்குநிலைகற்றாற் கருவியவிழாதருளாய்
நிற்குநிலைகற்பதுவே நீதம்பராபரமே. (௩௫௩)

காச்சச் சுடர்விடும்பொற் கட்டி போனின்மல
மாய்ப், பேச்சற்றவரே பிறவார்பராபரமே.

பற்றொழிந்துசிந்தைப் பதைப்பொழிந்து தானே
தா, னற்றிருப்ப தென்றைக் கமைப்பாய் பராப
மே. (௩௫௫

உருவெளிதான் வாதனூ ருத்தமர்க் கல்லால
மூங், குருவழிநின் றார்க்குமுண்டோகூறாய்பராப
மே. (௩௫௬

தேகமியாதேனுமொரு சித்திபெறச்சீவன்முத்தி
யாகுநெறிநல்லநெறி யையாபராபரமே. ௩௫௭)

உலகநெறிபோற்சடல மோயவுயிர்முத்தி
யிலகுமெனல்பந்த வியல்போபராபரமே. (௩௫௮)

பாமாப் பரவெளியாப் பார்ப்பதல்லான் மற்றொ
வர்க்குந், திரமேது மில்லைநன்றாத்தேர்ந்தேன்பரா
பரமே (௩௫௯)

தேடுவேனின்னருளைத் தேடுமுன்னே யெய்தி னட, மாடுவேனனந்த மாவேன்பராபரமே.(௩௬௦)

உள்ளங்குழைய யுடல்குழையவுள்ளிருந்த
கள்ளங்குழையவென்று காண்பேன்பராபரமே. ()

பட்டப் பகல்போலப் பாழ்த்தசிந்தை மாளி னெல்லாம், வெட்ட வெளியாக விளங்கும் பராப ரமே. (௩௬௨)

பார்க்கினனுப் போற்கிடந்த பாழஞ் சிந்தை மாளிகென்னை, யார்க்குச் சரியிடலா மையாபரா பரமே. (௩௬௩)

பாட்டுக்கோ வன்பினுக்கோ பத்திக்கோவன்ப ரங்க, ளீட்டுக்கெல் லாங்குறுகி நின்றாய்பரா பரமே. (௩௬௪)

மூத்தாந்தவித்தே முளைக்குநிலமாயெழுந்த
சித்தாந்தமார்க்கச் சிறப்பேபராபரமே. (௩௬௫)

உன்றுவெளியா யுறங்காதபேருணர்வா
யென்னுவிக்குள்ளே யிருந்தாய்பராபரமே. ()

தத்துவ மெல்லா மகன்ற தன்மை யர்க்குச்சின் மயமா, நித்தமுத்த சுத்த நிறைவேபராபரமே. ()

உள்ளக்கொதிப்பகல வுள்ளுள்ளேயானந்த
வெள்ளமலர்கருணை வேண்டும்பராபரமே.(௩௬௮)

என்னைப்புரப்பதரு ளின்கடனுமென்கடனு
நின்னிற்பணியறவே நிற்கைபராபரமே. (௩௬௯)

தானேயாகன்னிலையைத் தந்தவருளானந்த
வானேமனாதீத வாழ்வேபராபரமே. (௩௭௦)

மண்ணாதி பூதமெல்லாம் வைத்திருந்த நின்னி
றைவைக், கண்ணாரக் கண்டுகளித்தேன்பராபரமே.

அறியாமையீதென் றறிவித்தவன்றேதான்
யாவருணிலையும் பெற்றேன்பராபரமே. (௩௭௨)

ஈதெனவுநன்றெனவுந் தேர்ந்துநான்றேர்ந்தபடி
யேதுநடக்கவொட்டா தென்னேபராபரமே.

கண்டவறிவகண்டா காரமெனமெய்யறிவிற்
கொண்டவர்க்கேமுத்தி கொடுப்பாய்பராபரமே

ஈருகவல்வினைநா னென்னுமலின்பசுகம்
பேரும்படிக்கடிமை பெற்றேன்பராபரமே. (௩௭௫)

பெற்றானுபூதி பேசாதமோனநிலை
கற்றாருனைப்பிரியார் கண்டாய்பராபரமே (௩௭௬)

நீயேநானென்று நினைப்புமறப்புமறத்
தாயயனையவரு டந்தாய்பராபரமே. (௩௭௭)

சஞ்சலமற்றெல்லாநீ தானென்றுணர்ந்தேனென்
னஞ்சலியுங்கொள்ளா யரசேபராபரமே. (௩௭௮)

பூதமுதலுதவரை பொய்யென்றமெய்யரெல்லா
ங், காதலித்தவின்பக் கடலேபராபரமே. (௩எகூ)

வாக்குமன மொன்றுபட்ட வார்த்தையல்லால்
வெவ்வேறுய்ப், போக்குடைய வார்த்தை பொருந்
தேன்பராபரமே. (௩அ௦)

வன்மை யின்றி யெல்லா மதித்துணர்வாய்க் கா
கெடுவேன்,றன்மையொன்றுந்தோயாத்தடையோ
பராபரமே. (௩அக)

பத்தர்சித்தர் வாழிபரி பக்குவர்கள் வாழிசெங்
கோல்,வைத்தவர்கள் வாழி குருவாழி பராபரமே.

கல்லாதே நுனுலுங் கற்றுணர்ந்த மெய்யடியார்,
சொல்லாலேநின்னைத் தொடர்ந்தேன் பராபரமே.

சொல்லிறப்பச் சற்குருவாய்த்தோன்றிச் சுகங்
கொடுத்த, நல்லுரைக்கே கொத்தடிமைநான்காண்
பராபரமே. (௩அச)

முத்திக்குவித்தான மோனக்கரும்புவழி
தித்தித்திடவிளைந்த தேனேபராபரமே. (௩அரு)

நித்திரையும்பாழ்த்த நினைவுமற்றுநிற்பதுவோ
சுத்தவருணிலைநீ சொல்லாய்பராபரமே. (௩அசு)

மண்ணுமறிகடலு மற்றுளவுமெல்லாமுன்
கண்ணிலிருக்கவுநான் கண்டேன்பராபரமே.

பூட்டிவைத்து வஞ்சப் பொறிவழியே யென்ற
னைநீ, யாட்டுகின்றதேதோவறியேன்பராபரமே.

பொய்யுணர்வா யிந்தப் புழுக்கூட்டைக் காத்தி
ருந்தே, னுய்யும்வகையு முளதேயபராபரமே.

---

## பைங்கிளிக்கண்ணி.

அந்தமுடனாதி யளவாமலென்னறிவிற்
சுந்தரவான்சோதி துலங்குமோபைங்கிளியே. (க)

அகமேவு மண்ணலுக் கென் னல்ல லெல்லாஞ்
சொல்லிச், சுகமான நீபோய்ச் சுகங்கொடுவா பை
ங்கிளியே. (உ)

ஆவிக்குளாவியெனு மற்புதனார்சிற்சுகந்தான்
பாவிக்குங்கிட்டுமோ சொல்லாய்நீபைங்கிளியே

ஆருமறியாமலெனை யந்தரங்கமாகவந்து
சேரும்படியிறைக்குச் செப்பிவாபைங்கிளியே. (ச)

ஆறுனகண்ணீர்க்கென் னங்கபங்கமானதையுங்
கூறுதனென்னே குதலைமொழிப்பைங்கிளியே. (ரு)

இன்பருள வாடையழுந் கேறுமெமக் கண்ணல்
சுத்த, வம்பரமா மாடை யளிப்பானே பைங்கிளி
யே. (சு)

உன்னும லொன்றிரண்டென் றோராமல் வீட்டு நெறி, சொன்னான் வரவும்வகைசொல்லாய் நீபைங் கிளியே (எ)

ஊருமிலார்பேருமிலா ருற்றார்பெற்றாருடனே யாருமிலாரென்னை யறிவாரோபைங்கிளியே. (அ)

ஊரைப்பாராமலெனக் குள்ளகத்து நாயகனார், சீரைப்பார்த் தாற்கருணை செய்வாரோ பைங்கிளி யே. (கூ)

என்றுவிடியுமிறைவாவோவென்றென்று நின்றநிலையெல்லா நிகழ்த்தாய்நீபைங்கிளியே.

எந்தமடலூடு மெழுதாவிறைவடிவைச், சிந்தை மடலாவெழுதிச் சேர்ப்பேனோ பைங்கிளியே.

கண்ணுண்மணி போலின்பங் காட்டியெனைப் பி ரிந்த, திண்ணியருமின்னம்வந்து சேர்வாரோபைங் கிளியே. (கஉ)

ஏடார் மலர்சூடே னெம்பெருமான் பொன்ன டியாம், வாடா மலர்முடிக்குவாய்க்குமோ பைங்கி ளியே (க௩)

கல்லேன் மலரேன்கனிந்தவன்பே பூசையென்ற, நல்லோர் பொல்லா வெனையு நாடுவரோ பைங்கி ளியே. (கச)

கண்டதனைக் கண்டு கலக்கந் தவிரெனவே, விண்டபெரு மானையுநான் மேவுவனே பைங்கிளியே.

காணுதகாட்சி கருத்துவந்துகாணுமல்
வீணுள்கழிந்து மெலிவேனே பைங்கிளியே. (௧௬)

காந்தமிரும்பைக் கவர்ந்திழுத்தா லென்ன வருள், வேந்த னெமை யிழுத்து மேவுவனே பைங்கிளியே. (௧௭)

காதலால் வாடினதுங் கண்டனையே யெம்மிறைவர், போதரவா யின்பம்புசிப்பேனே பைங்கிளியே

கிட்டிக்கொண் டன்பருண்மை கேளாப் பலவடிகொள், பட்டிக்கு மின்பமுண்டோ சொல்லாய் நீ பைங்கிளியே. (௧௯)

கிட்டோய்நெஞ்சிற் கிளர்வார்தழுவவென்று
னெட்டோராவரவர் நேசமென்னே பைங்கிளியே. ()

கூறுங் குணமுமில்லாக் கொள்கையினு ரென்கவலை, யாறும் படிக்கு மணைவாரோ பைங்கிளியே.

சின்னஞ் சிறியேன் றன் சிந்தைகவர்ந் தாரிறைவர், தன்னந் தனியே தவிப்பேனே பைங்கிளியே.

சிந்தைமருவித் தெளிவித்தெனையாள
வந்தகுருநாதனருள் வாய்க்குமோபைங்கிளியே.

சொல்லிறந்துநின்ற சுகரூபப்பெம்மானை
யல்லும்பகலு மணைவேனோபைங்கிளியே. (௨௪)

தற்போதத் தாலே தலைகீழதாகவைய, னற்போ
தவின்புவர நாட்செலுமோ பைங்கிளியே. (௨௫)

தன்னை யறியுந் தருணந் தனிற்றலைவ, ரென்னை
யணையாதவண்ணமெங்கொளித்தார் பைங்கிளியே.

தாங்கரிய மையலெல்லாந் தந்தெனைவிட்டின்ன
ருளாம், பாங்கியைச்சேர்ந் தாரிறைக்குப்பண்போ
சொல் பைங்கிளியே. (௨௭)

தாவியதோர்மர்க்கடமாந் தன்மைவிட்டே யண்
ணலிடத், தோவியம்போனிற்கினெனை யுள்குவ
ரோ பைங்கிளியே. (௨௮)

தீராக் கருவழக்கைத் தீர்வை யிட்டங் கென்னை
யினிப், பாரேறு தாண்டானைப் பற்றுவனோ பைங்
கிளியே. (௨௯)

தூங்கிவிழித்தென்ன பலன் றூங்காமற் றூங்கி
நிற்கும், பாங்குகண்டா லன்றோ பலன் காண்பே
ன்பைங்கிளியே. (௩௦)

தொல்லைக் கவலை தொலைத்துத்தொலையாத,வெல்லையிலா வின்பமய மெய்துவனோ பைங்கிளியே.()

நன்னெஞ்சத் தன்பரெல்லா நாதரைச் சேர்ந்தின்பணைந்தார், வன்னெஞ்சத்தாலே நான் வாழ்விழந்தேன் பைங்கிளியே. (௩௨)

நானே கருதின் வர நாடார்சும்மா விருந்தாற், றானே யணைவரவர் தன்மையென்னோ பைங்கிளியே.

நீர்க்குமிழி போன்றவுட னிற்கையிலே சாசுவதஞ், சேர்க்க வறியாமற் றிகைப்பேனோ பைங்கிளியே. (௩௪)

நெஞ்சகத்தில்வாழ்வார் நினைக்கின்வே றென்றணையார், வஞ்சகத்தா ரல்லரவர் மார்க்கமென்னோ பைங்கிளியே. (௩௫)

பன்முத் திரைச்சமயம் பாழ்படக்கல் லாலடிவாழ், சின்முத்திரையரசைச் சேர்வேனோ பைங்கிளியே. (௩௬)

பச்சை கண்ட நாட்டிற் பறக்குமுனைப் போற்பறந்தே, னிச்சையெல்லா மண்ணற்கியம்பிவா பைங்கிளியே. (௩௭)

பாசபந்தஞ் செய்ததுன்பம் பாராமலெம்மிறை வ, ராசைதந்த துன்பமதற் காற்றேனுன் பைங்கிளியே. (௩௮)

பாராசையற்றிறையைப் பற்றறநான்பற்றிநின்ற பூராயமெல்லாம் புகன்றுவாபைங்கிளியே. (௩௯)

பேதைப் பருவத்தே பின்றொடர்ந்தென் பக்கு வமுன், சோதித்த வண்ணல் வந்து தோய்வாரோ பைங்கிளியே. (௪௦)

பைம்பயிரை நாடுமுன்போற் பார்பூத்த பைங் கொடிசேர், செம்பயிரை நாடித் திகைத்தேனுன் பைங்கிளியே. (௪௧)

பொய்க்கூடு கொண்டு புலம்புவனோ வெம்மிறை வர், மெய்க்கூடு சென்று விளம்பிவா பைங்கிளியே.

பொய்ப் பணி வேண்டேனைப் பொருட் படுத்தி யண்ண லென்பான், மெய்ப்பணியுந் தந்தொருகா ன் மேவுவனோ பைங்கிளியே. (௪௩)

மண்ணுறங்கும் விண்ணுறங்கு மற்றுள வெலா முறங்குங், கண்ணுறங்கே னெம்மிறைவர் காதலாற்பைங்கிளியே. (௪௪)

மட்டுப் படாத மயக்கமெல்லாந் தீரவென்னை, வெட்ட வெளி வீட்டிலண்ணன் மேவுவனோபைங் கிளியே. (௪௫)

மாலை வளர்த்தென்னை வளர்த்திறைவர் பன்னெறியாம், பாலை வனத்தில்விட்ட பாவமென்னோ பைங்கிளியே. (௪௬)

மெய்யினோய் மாற்ற வுழந்த மெத்த வுண்டெம் மண்ணறந்த, மையனோய் தீர்க்க மருந்து முண்டோ பைங்கிளியே. (௪௭)

மேவுபஞ்ச வண்ணமுற்றாய் வீண்சிறையா லல்லலுற்றாய், பாவிபஞ்ச வண்ணம் பகர்ந்துவா பைங்கிளியே. (௪௮)

வாய்திறவா வண்ணமெனை வைத்தாண்டார்க் கென்றுயரை, நீ திறவாச் சொல்லி னிசமாங்காண் பைங்கிளியே. (௪௯)

வாட்டப் படாத மவுனவின்பங் கையாலே, காட்டிக் கொடுத்தானைக் காண்பேனோ பைங்கிளியே.

வாரா வரவாக வந்தருளு மோனருக்கென், பேராசை யெல்லாம்போய்ப் பேசிவா பைங்கிளியே.

விண்ணவர்தம் பாலமுதம் வேப்பங்கா யாகவென்பாற், பண்ணிய தெம்மண்ணன் மயல் பார்த்தாயோ பைங்கிளியே. (௫௨)

விண்ணூள் வளியடங்கி வேறற்ற தென்னவருட்
கண்ணு ளடங்கிடவுங் காண்பேனோ பைங்கிளி
யே. (௫௩)

விண்ணோர் நிலவுதவழ் மேடையிலெல் லாருமு
ற, மண்ணான வீட்டிலென்னை வைத்ததென்னோ
பைங்கிளியே. (௫௪)

உள்ளத்தி னுள்ளே யொளித்திருந்தென் கள்ள
மெல்லாம், வள்ளலறிந் தாலெனக்கு வாயுமுண்
டோ பைங்கிளியே. (௫௫)

க்குமுன்னே யாவித்துணை வரைநான்
ருகத்தின் வண்ணந் தழுவுவனோபைங்கிளியே.

தானேசுபாவந் தலைப்படநின்றான்ஞான
வானனவரும் வருவாரோபைங்கிளியே. (௫௭)

கள்ளத்தலைவரவர் கைகாட்டிப்பேசாம
லுள்ளத்தில்வந்த வுபாயமென்னோபைங்கிளியே.

---

## எந்நாட்கண்ணி.

### தெய்வவணக்கம்.

கீர்பூத்தவேணி நிலவெறிப்பமன்றாடுங்
கார்பூத்தகண்டனையாள் காணுநாளெந்நாளோ.

பொன்னுருமன்றன்மணிப் பூவைவிழி வண்டு
சுற்ற, மென்னு ரமுதினல மிச்சிப்ப தெந்நாளோ.

நீக்கி மலக் கட்டறுத்து நேரே வெளியிலெம்மைத், தூக்கிவைக்குந் தாளைத்தொழுதிடுநாளெந்நாளோ. (௩)

கருமுகங்காட்டாமலென்றுங் கர்ப்பூரம்வீசுந் திருமுகமேநோக்கித் திருக்கறுப்பதெந்நாளோ.

வெஞ்சே லெனும்விழியார் வேட்கைநஞ்சுக்கஞ்சினரை, யஞ்சே லெனுங்கைக் கபயமென்ப தெந்நாளோ. (௫)

ஆறுசமயத்து மதுவதுவாய்நின்றிலங்கும் வீறுபரைதிருத்தாண் மேவுநாளெந்நாளோ. (௬)

பச்சைநிறமாய்ச்சிவந்த பாகங்கலந்துலகை யிச்சையுடனீன்றளை யாங்காண்பதெந்நாளோ.

ஆதியந்தங் காட்டா தகண்டிதமாய் நின்றுணர்த்தும், போதவடி வாமடியைப் போற்றுநா ளெந்நாளோ. (௮)

கங்கைநிலவுசடைக் காட்டானைத் தந்தை யெனும், புங்க வெண்கோட் டானைபதம் புந்திவைப்ப தெந்நாளோ. (௯)

அஞ்சு முகங் காட்டாம லாறுமுகங் காட்ட வந்த, செஞ்சரணச் சேவடியைச் சிந்தை வைப்ப தெந்நாளோ. (௧௦)

தந்தையிரு தாடுணித்துத் தம்பிரான் ருள்சேர்ந்த, வெந்தையிரு தாளிணைக்கே யின்புறுவ தெந்நாளோ. (௧௧)

## குருமரபின் வணக்கம்.

தூய்ய கரமலராற் சொல்லாமற் சொன்ன வுண்மை, யையனைக்கல் லாலரசை யாமணைவ தெந்நாளோ. (௧)

சிந்தையினுக் கெட்டாத சிற்சுகத்தைக் காட்டவல்ல, நந்தியடிக் கீழ்க்குடியாம்நாமணைவ தெந்நாளோ. (௨)

எந்தை சனற்குமர ஞதியெமை யாட்கொள்வான், வந்ததவத்தினரை வாழ்த்துநாளெந்நாளோ.

பொய்கண்டார்காணுப் புனிதமெனுமத்துவித மெய்கண்டநாதனருண் மேவுநாளெந்நாளோ.

பாநிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகவுண்மை, சாதித்தார் பொன்னடியைத் தான் பணிவ தெந்நாளோ. (௫)

சிற்றம்பலமன்னுஞ் சின்மயராந்தில்லைநகர்க் கொற்றங்குடிமுதலைக் கூறுநாளெந்நாளோ. (௬)

ˇ , லெ னருண் ஞான முதல் கொற்றங் குடியடிக, ணறைமலர்த்தாட் கன்புபெற்று நாமிருப்ப தெந்நாளோ. (௭)

நாளவங்கள் போகாம னன்னெறியைக் காட்டி யெமை, யாளவந்த கோலங்கட் கன்புவைப்ப தெந்நாளோ. (அ)

என்னறிவை யுள்ளடக்கி யென் போல் வருமவுனி, தன்னறிவுக் குள்ளே நான் சாருநா ளெந்நாளோ (௯)

ஆறுளொன்றை நாடினதற் காறுமுண்டா மென்றெமக்குக், கூறுமவுனியருள் கூடுநாளெந்நாளோ

நில்லாமனின் றருளே நேரேபாரென்றவொரு சொல்லான்மவுனியரு டோற்றுநாளெந்நாளோ.

வைதிகமாஞ்சைவ மவுனிமவுனத்தளித்த மெய்திகழ்ந்தென்னல் லல்விடியுநாளெந்நாளோ.( )

வாக்கு மனமற்ற மவுனிமவு னத்தருளோ, தாக்கவுமென் னல்லலெல்லாந் தட்டழிவ தெந்நாளோ.

---

## அடியார் வணக்கம்.

வெம்பந்தந்தீர்த்துலகாள் வேந்தன்றிருஞான சம்பந்தனையருளாற் சாருநாளெந்நாளோ. (க)

ஏரின் சிவபோக மிங்கிவர்க்கே யென்னவுழ,வாரங்கொள் செங்கையர்தாள்வாரம் வைப்பதெந்நாளோ (உ)

பித்தரிறை யென்றறிந்து பேதைபாற் றூதனுப்பு, வித்த தமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வ தெந்நாளோ. (௩)

போதவூர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற, வாதவூ ரையனன்பை வாஞ்சிப்ப தெந்நாளோ. (௪)

ஒட்டுடன்பற் றின்றியுலகைத் துறந்தசெல்வப், பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ.

கண்டதுபொய் யென்ற கண்டா காரசிவமெய் யெனவே, விண்டசிவ வாக்கியர்தாண் மேவுநாளெந்நாளோ. (௬)

சக்கரவர்த்தி தவராசயோகியெனு
மிக்கதிருமூலனருண் மேவுநாளெந்நாளோ. (௭)

கந்தரனுபூதிபெற்றுக் கந்தரனுபூதிசொன்ன
வெந்தையருணகிரி யிருக்குநாளெந்நாளோ. (௮)

எண்ணரியசித்த ரிமையோர்முதலான
பண்ணவர்கள்பத்தருள் பாலிப்பதெந்நாளோ. ()

## யாக்கையைப்பழித்தல்.

சுக்கிலமு நீருஞ் சொரிமலமு நாறுமுடற், புக்குடலும் வாஞ்சையினிப் போதுமென்ப தெந்நாளோ. (௧)

நீர்க்குமிழிபூணமைத்து நின்றாலுநில்லாமெய்
பார்க்குமிடத்திதன்மேற் பற்றறுவதெந்நாளோ.

காக்கைநரிசெந்நாய் கழுகொருநாட்கூடியுண்டு
தேக்குவிருந்தாமுடலைச் சீயென்பதெந்நாளோ.

செங்கிருமியாதிசெனித்தசென்மபூமியினை, யிங்
கெனுடலென்னு மிழுக்கொழிவதெந்நாளோ. (௪)

தத்துவர்தொண் ணூற்றறுவர் தாமாய் வாழிந்
நாட்டைப், பித்தனென்னும்பிதற்றொழிவ தெந்
நாளோ. (௫)

ஊனொன்றிநாத னுணர்த்துமதைவிட்டறிவே
னொன்றபாவிதலை நாணுநாளெந்நாளோ. (௬)

வேலையிலாவேதன் விதித்தவிந்த்ரசாலவுடன்
மாலைவியாபார மயக்கொழிவதெந்நாளோ. (௭)

ஆழ்ந்துநினைக்கினரோசிகமாமிவ்வுடலில், வாழ்
ந்துபெறும்பேற்றை மதிக்குநாளெந்நாளோ. (௮

மும்மலச்சேறான முழுக்கும்பாகமெனு
மிம்மலகாயத்து ளிகழ்ச்சிவைப்பதெந்நாளோ.(௯

நாற்றமிகக்காட்டு நவவாயில்பெற்றபசுஞ்
சோற்றுத்துருத்தி சுமையென்பதெந்நாளோ.(௧௦

உருவிருப்ப வுள்ளேதானூறுமலக் கேணி, ய
வருப்பு வாழ்க்கையைக்கண்டஞ்சுநாளெந்நாளோ

## மாதரைப்பழித்தல்.

மெய்வீசு நாற்றமெல்லா மிக்கமஞ்சளான்மறை
ரப், பொய்வீசும் வாயார் புலையொழிவ தெந்நா
ளோ. (௧)

திண்ணிய நெஞ்சப்பறவை சிக்கக் குழற்காட்டிற், கண்ணிவைப்போர் மாயங் கடக்குநா ளெந்நாளோ. (௨)

கண்டுமொழி பேசிமனங் கண்டுகொண்டு கைவிலையாக், கொண்டுவிடு மாஞர்பொய்க் கூத்தொழிவ தெந்நாளோ. (௩)

காமனைவாவென் றிருண்ட கண்வலையைவீசுமின்னார், நாமமறந்தருளை நண்ணுநாளெந்நாளோ. (௪)

கண்களில்வெண்பூளை கரப்பக்கருமையிட்ட
பெண்கண்மயறப்பிப் பிழைக்குநாளெந்நாளோ. ()

வீங்கித்தளர்ந்து விழுமுலையார் மேல் வீழ்ந்து, தூங்கு மதன் சோம்பைத் துடைக்குநா ளெந்நாளோ. (௬)

கச்சிருக்குங் கொங்கை கரும்பிருக்கு மின்மாற்றம், வைச்சிருக்கு மாதர் மயக்கொழிவ தெந்நாளோ. (௭)

பச்சென்றகொங்கைப் பசப்பியர்பாழானமய
னச்சென்றறிந்தருளை நண்ணுநாளெந்நாளோ.(அ)

உந்திச்சுழியா லுளத்தைச்சுழித்தகன
தந்தித்தனத்தார் தமைமறப்பதெந்நாளோ. (௯)

தட்டுவைத்த சேலைப்பூங்கொய்சகத்திற் சிந்தை
யெல்லாங், கட்டி வைக்கு மாயமின்னார் கட்டழிவ
தெந்நாளோ. (௧௦)

ஆழாழியென்ன வளவுபடாவஞ்சநெஞ்சப்
பாழானமாதர்மயற் பற்றொழிவதெந்நாளோ.

தூயபனித்திங்கள் சுடுவதெனப்பித்தேற்று
மாயமடவார் மயக்கொழிவதெந்நாளோ. (௧௨)

ஏழைக் குறும்புசெயு மேந்திழையார்மோக மெ
னும், பாழைக்கடந்து பயிராவதெந்நாளோ.

விண்டு மொழி குளறி வேட்கைமது மொண்டு
தருந், தொண்டியர்கள் கட்கடையிற் சுற்றொழிவ
தெந்நாளோ. (௧௪)

மெய்யிற் சிவம்பிறக்க மேவுமின்பம் போன் மா
தர், பொய்யி லின்பின்றென்று பொருந்தா நாளெ
ந்நாளோ. (௧௫)

---

## தத்துவமுறைமை.

ஐம்பூதத்தாலே யலக்கழிந்ததோடமற
வெம்பூதநாதனரு ளெய்துநாளெந்நாளோ. (௧

சத்தமுதலாம்புலனிற் சஞ்சரித்தகள்வரெனும்
பித்தர்பயந்தீர்ந்து பிழைக்குநாளெந்நாளோ. (௨

நாளும்பொறிவழியை நாடாதவெண்ணமெமை
யாளும்பொறியா லருள்வருவதெந்நாளோ. (௩)

வாக்காதி யானகன்ம மாயை தம்பால் வீண்கா
லம், போக்காம லுண்மை பொருந்துநா ளெந்நா
ளோ. (௪)

மனமானவானரக்கைம் மாலையாகாம
லெனையாளடிகளடியெய்துநாளெந்நாளோ. (௫)

வேட்டைப்புலப்புலையர் மேவாதவண்ணமனக்
காட்டைத்திருத்திக் கரைகாண்பதெந்நாளோ. (௬)

உந்துபிறப்பிறப்பை யுற்றுவிடாதெந்தையருள்
வந்துபிறக்க மனமிறப்பதெந்நாளோ. (௭)

புத்தியெனுந்துத்திப் பொறியரவின் வாய்த்தே
ரை, யொத்துவிடா தெந்தையருளோங்குநா ளெ
ந்நாளோ. (௮)

ஆங்காரமென்னுமத யானைவாயிற்கரும்பா
யோங்காமலெந்தையரு ளெய்துநாளெந் நாளோ.

சித்தமெனும் பௌவத் திரைக்கடலில் வாழ்து
ரும்பாய், நித்தமலையாதருளி னிற்குநா ளெந்நா
ளோ. (௧௦)

வித்தியாதத்துவங்க ளேழும்வெருண்டோடச்
சுத்தபரபோகத்தைத் துய்க்குநாளெந்நாளோ. ()

சுத்தவித்தை யேமுதலாத் தோன்றுமோ ரைந்துவகைத், தத்துவத்தை நீங்கியருள் சாருநாளெந்நாளோ. (௧௨)

பொல்லாதகாமப் புலைத்தொழிலிலென்னறிவு
செல்லாமனன்னெறியிற் சேருநாளெந்நாளோ. ()

அடிகளடிக் கீழ்க்குடியா யாம் வாழா வண்ணங், குடிகெடுக்கும் பாழ்மடிமைக் கூறொழிவ தெந்நாளோ. (௧௪)

ஆனபுறக்கருவி யாறுபத்துமற்றாவும்
போனவழியுங்கூடப் புன்மூளைப்பதெந்நாளோ. ()

அந்தகனுக்கெங்குமிரு ளானவாறுவறிவில்
வந்தவிருள்வேலை வடியுநாளெந்நாளோ. (௧௬)

புன்மலத்தைச் சேர்ந்துமல போதம் பொருந்துதல் போய், நின்மலத்தைச்சேர்ந்து மல் நீங்குநாளெந்நாளோ. (௧எ)

கண்டுகண்டுந் தேறுங் கலக்க மெல்லாந் தீர்வண்ணம், பண்டைவினை வேரைப் பறிக்குநா ளெந்நாளோ. (௧அ

பைங்கூழ்வினைதான் படுசாவியாகவெமக்
கெங்கோன்கிரணவெயி லெய்துநாளெந்நாளோ.(

குறித்த விதமாதியாற் கூடும் வினை யெல்லாம் வறுத்த வித்தாம் வண்ணமருள் வந்திடுநா ளெந்நாளோ. (௨0

சஞ்சிதமேயாதி சரக்கானமுச்சேறும்
வெந்தபொரியாகவருண் மேவுநாளெந்நாளோ.

தேகமுதனான்காத் திரண்டொன்றாய்நின்றிலகு
மோகமிகுமாயை முடியுநாளெந்நாளோ. (௨௨)

சத்தமுதலாத் தழைத்திங்கெமக்குணர்த்துஞ்
சுத்தமாமாயை தொடக்கறுவதெந்நாளோ. (௨௩)

எம்மைவினையை யிறையையெம்பாற்காட்டாத
வம்மைதிரோதை யகலுநாளெந்நாளோ. (௨௪)

நித்திரையாய்வந்து நினைவழிக்குங்கேவலமாய்
சத்துருவைவெல்லுஞ் சமர்த்தறிவதெந்நாளோ.

சன்னல்பின்னலான சகலமெனுங்குப்பையிடை
முன்னவன்ஞானக்கனலை மூட்டுநாளெந்நாளோ. (

மாயாவிகார மலமொழிசுத்தாவத்தை
தோயாவருளைத் தொடருநாளெந்நாளோ. (௨௭)

## தன்னுண்மை.

உடம்பறியுமென்னுமந்த வூழலெல்லாந்தீரத்
திடம்பெறவேயெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ.

செம்மையறிவாலறிந்து தேகாதிக்குள்ளிசைந்த
வெம்மைப்புலப்படவே யாமறிவதெந்நாளோ. (௨)

தத்துவமாம்பாழ்த்த சடவுருவைத்தான்சுமந்த
சித்துருவாமெம்மைத் தெரிசிப்பதெந்நாளோ.(௩)

பஞ்சப்பொறியையுயி ரென்னுமந்தப்பஞ்சமறச்
செஞ்செவேயெம்மைத் தெரிசிப்பதெந்நாளோ.

அந்தக்கரணமுயிரா மென்றவந்தரங்க
சிந்தைக்கணத்திலெம்மை தேர்ந்தறிவதெந்நாளோ

முக்குணத்தைச் சீவனென்னு மூடத்தை விட்டருளா, லக்கணமேயெம்மை யறிந்துகொள்வ தெந்நாளோ. (௬)

காலையுயிரென்னுங் கலதிகள்சொற்கேளாமற்
சீலமுடனெம்மைத்தெளிந்துகொள்வதெந்நாளோ

வான்கெடுத்துத்தேடு மதிகேடர்போலவெமை
நான்கெடுத்துத்தேடாம னன்கறிவதெந்நாளோ.

---

## அருளியல்பு.

ஈனந்தருநா டிதுநமக்குவேண்டாமென்
றூனந்தநாட்டி லவதரிப்பதெந்நாளோ. (௧)

பொய்க்காட்சியான புவனத்தைவிட்டருளா
மெய்க்காட்சியாம்புவன மேவுநாளெந்நாளோ.(௨)

ஆதியந்தங்காட்டாம லம்பரமபோலேநிறைந்த
நீதிலருட்கடலைச் சேருநாளெந்நாளோ. (௩)

எட்டுத்திசைக்கீழ்மே லெங்கும்பெருகிவரும், வெ
ட்டவெளிவிண்ணூற்றின்மெய்தோய்வதெந்நாளோ

சூதானமென்று சுருதியெல்லாமோலமிடு
மீதானமானவெற்பை மேவுநாளெந்நாளோ. (௫)

வெந்துவெடிக் கின்றசிந்தை வெப்பகலத் தண்
ணருளாய், வந்துபொழிகின்ற மழைகாண்பதெந்
நாளோ. (௬)

சூரியர்கள்சந்திரர்க டோன்றாய்ச்சுயஞ்சோதிப்
பூரணதேயத்திற் பொருந்துநாளெந்நாளோ. (௭)

கன்றுமனவெப்பக் கலக்கமெலாந்தீரவருட்
டென்றல்வந்துவீசுவெளிசேருநாளெந்நாளோ. ()

கட்டுநமன்செங்கோல் கடாவடிக்குங்கோலாக
வெட்டவெளிப்பொருளை மேவுநாளெந்நாளோ. ()

சாலக்கபாடத் தடைதீரவெம்பெருமா
ளாலக்கமண்டபத்து ளோடுநாளெந்நாளோ. ()

விண்ணவன்றாளென்னும் விரிநிலாமண்டபத்திற்
றண்ணீரருந்தித்தளர் வொழிவதெந்நாளோ. (௧௧)

வெய்யபுலிபார்த்து விழித்திருந்தவல்லலறத்
துய்யவருளிற் றுயிலுநாளெந்நாளோ. (௧௨)

வெய்யபிறவிவெயில் வெப்பமெலாம்விட்டகல
வையனடிநீழலணையுநாளெந்நாளோ. (௧௩)

வாதைப்பிறவி வளைகடலைநீந்தவையன்
பாதப்புணையிணையைப் பற்றுநாளெந்நாளோ.(௧௪)

ஈனமில்லா மெய்ப்பொருளை யிம்மையிலேகாண
வெளி, ஞானமெனு மஞ்சனத்தை நான்பெறுவதெ
ந்நாளோ. (௧௫)

எல்லாமிறந்தவிடத் தெந்தைநிறைவாம்வடிவைப்
புல்லாமற்புல்லிப் புணருநாளெந்நாளோ. (௧௬)

சடத்துளுயிர்போலெமக்குத் தானுயிராய்ஞான
நடத்துமுறைகண்டுபணி நாம்விடுவதெந்நாளோ()

எக்கணுமாந்துன்ப விருட்கடலைவிட்டருளாம்
மிக்ககரையேறி வெளிப்படுவதெந்நாளோ. (௧௮)

---

## பொருளியல்பு.

கைவிளக்கின் பின்னேபோய்க் காண்பார்போ
ன் மெய்ஞ்ஞான, மெய்விளக்கின் பின்னேபோய்
மெய்காண்பதெந்நாளோ. (௧)

கேடில்பசுபாசமெல்லாங் கீழ்ப்படவுந்தானே
மேலாடுஞ்சுகப்பொருளுக் கன்புறுவதெந்நாளோ.

ஆணவத்தைநீக்கி யறிவுடையைவகையாக்
காணவத்தைக்கப்பாலைக் காணுநாளெந்நாளோ.')

நீக்கப்பிரியா நினைக்கமறக்கக்கூடாப்
போக்குவரவற்ற பொருளணைவதெந்நாளோ. ()

அண்டருக்கு மெய்ப்பில் வைப்பா மாரமுதை யென்னகத்திற், கண்டுகொண்டு நின்று களிக்கு நாளெந்நாளோ. (௫)

காட்டுந்திருவருளேகண்ணாகக்கண்டுபர
வீட்டின்பமெய்ப்பொருளை மேவுநாளெந்நாளோ.

நானானதன்மை நழுவியேயெவ்வுயிர்க்குந்
தானானவுண்மைதனைச் சாருநாளெந்நாளோ. (௭)

சிந்தை மறந்து திருவருளாய் நிற்பவர்பால், வந் தபொருளெம்மையுந்தான் வாழ்விப்ப தெந்நாளோ. (௮)

எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கும் வியாபகமா, யுள்ளவொன்றை யுள்ளபடியோரு நாளெந் நாளோ. (௯)

அருவுருவமெல்லா மகன்றதுவாயான
பொருளெமக்குவந்து புலப்படுவதென்னாளோ.

ஆரணமுங்காணாவகண்டிதாகாரபரி
பூரணம்வந்தெம்மைப்பொருந்துநா ளெந்நாளோ.

சத்தொடுசித்தாகித் தயங்கியவானந்தபரி
சுத்தவகண்டசிவந் தோன்றுநாளெந்நாளோ.

எங்கெங்கும் பார்த்தாலு மின்புருவாய் நீக்கமின்றித், தங்குந் தனிப்பொருளைச் சாருநா ளெந்நாளோ. (கரு)

அடிமுடிகாட்டாதசுத்த வம்பரமாஞ்சோதிக்
கடுவெளிவந்தென்னைக் கலக்குநாளெந்நாளோ.

ஒன்றனையுங்காட்டா வுளத்திருளைச்சூறையிட்டு
நின்றபரஞ்சோதியுட னிற்குநாளெந்நாளோ.

எந்தச்சமயமிசைந் தூமறிவூடறிவாய்
வந்தபொருளேபொருளாவாஞ்சிப்ப தெந்நாளோ.

எவ்வாறிங் குற்றுணர்ந்தார் யாவரவர் தமக்கே, யவ்வாறாய் நின்ற பொருட் கன்பு வைப்ப தெந்நாளோ. (கஎ)

பெண்ணு ணலி யெனவும் பேசாம லென்னறிவின், கண்ணூடே நின்றவொன்றைக் காணுநாளெந்நாளோ. (கஅ)

நினைப்பு மறப்புமற நின்றபரஞ்சோதி, தனைப்புலமா வென்னறிவிற் சந்திப்பதென்றோ.

## ஆனந்தவியல்பு.

பேச்சுமூச்சில்லாத பேரின்பவெள்ளமுற்று
நீச்சுநிலைகாணு மனிற்குநாளெந்நாளோ. (க)

சித்தந்தெளிந்தோர் தெளிவிற்றெளிவான
சுத்தசுகக்கடலுட் டோயுநாளெந்நாளோ. (௨)

சிற்றின்ப முண்டேழ் சிதைய வனந் தங்கடல்போன், முற்றின்ப வெள்ளமெமை மூடுநா ளெந்நாளோ. (௩)

எல்லையில்பே ரின்பமய மெப்படியென்றோர் தமக்குச், சொல்லறியா வூமர்கள் போற் சொல்லுநாளெந்நாளோ. (௪)

அண்டரண்டகோடி யனைத்துமுகாந்த வெள்ளங்,கொண்ட தெனப் பேரின்பங் கூடுநா ளெந்நாளோ. (௫)

ஆதியந்தமில்லாத வாதியனாதியெனுஞ்
சோதியின்பத்தூடே துலையுநாளெந்நாளோ. (௬)

சாலோகமாதி சவுக்கியமும்விட்டநம்பான்
மேலானஞானவின்ப மேவுநாளெந்நாளோ. (௭)

தற்பரத்தி னுள்ளேயுஞ் சாலோக மாதியெனும், பொற்பறிந்தா னந்தம் பொருந்துநாளெந்நாளோ.

உள்ளத்தினுள்ளே தா னூறுஞ்சிவானந்த
வெள்ளந்துலைந்து விடாய்தீர்வதெந்நாளோ. (௯)

கன்னலுடன் முக்கனியுங் கற்கண்டுஞ் சீனியுமாய், மன்னுமின்ப வாரமுதைவாய்மடுப்பதெந்நாளோ. (௧௦)

மண்ணூடுமூன் றமயக்கமெல்லாந்தீர்ந்திடவும்
விண்ணூடெழுந்தசுக மேவுநாளெந்நாளோ. ( )

கானற்சலம்போன்ற கட்டுழலைப்பொய்தீர
வானமுதவாவி மருவுநாளெந்நாளோ. (௧௨)

தீங் கரும்பென் றுலினியா தின்று லினிப்பன போற், பாங் குறும்பே ரின்பம் படைக்குநாளெந் நாளோ. (௧௩)

புண்ணிய பாவங்கள் பொருந்தா மெய் தன்ப ரெல்லா, நண்ணியபே ரின்பசுக நாமணைவதெந்நா ளோ. (௧௪)

---

## அன்புநிலைமை.

தக்கரவிகண்ட சரோருகம்போலென்னிதய
மிக்கவருள்கண்டு விகசிப்பதெந்நாளோ. (௧)

வானமுகில்கண்ட மயூரபட்சிபோலையன்
ஞானநடங்கண்டு நடிக்குநாளெந்நாளோ. (௨)

சந்திரனைநாடுஞ் சகோரபக்ஷிபோலறிவில், வந்த
பரஞ்சோதியையாம் வாஞ்சிப்பதெந்நாளோ. (௩

குத்திரமெய்ப்புற்றகத்துக் குண்டலிப்பாம்பொ ன்றூட்டுஞ், சித்தனை யென்கண்ணாற் றெரிசிப்பதெ ந்நாளோ. (௪

அந்தரத்தேநின்றாடு மானந்தக்கூத்தனுக்கென்
சிந்தைதிறைகொடுத்துச் சேவிப்பதெந்நாளோ. (

கள்ளனிவ னென்று மெள்ளக் கைவிடுதல் காரி
யமோ, வள்ளலே யென்று வருந்துநாளெந்நாளோ.

விண்ணுடோர்காணு விமலாபரஞ்சோதி
பண்ணுவாவாவென் றரற்றுநாளெந்நாளோ. (எ)

ஏதேது செய்தாலு மென் பணிபோய் நின்பணி
யா, மாதேவாவென்றுவருந்துநா ளெந்நாளோ. ()

பண்டுங்கா ணேனுன் பழம்பொருளே யின்றுமு
னைக், கண்டுங்கா ணேனெனவுங் கைகுவிப்பதெந்
நாளோ. (௯)

பொங்கேதமான புழுக்கமெல்லாந்தீரவின்ப
மெங்கேயெங்கேயென் றிரங்குநாளெந்நாளோ.

கடலின்மடைகண்டதுபோற் கண்ணீராறுக
வுடல்வெதும்பிமூர்ச்சித் துருகுநாளெந்நாளோ.

புலர்ந்தேன்முகஞ்சருகாய்ப் போனேனிற்காண
வலந்தேனென்றேங்கி யழுங்குநாளெந்நாளோ.

புண்ணீர்மையாளர் புலம்புமாபோற்புலம்பிக்
கண்ணீருங்கம்பலையுங் காட்டுநாளெந்நாளோ.

போற்றேனென் றுலுமென்னைப் புந்திசெய்யும்
வேதனைக்கிங், காற்றேனாற் றேனென் றரற்றுநா
ளெந்நாளோ. (௧௪)

பொய் முடங்கும் பூமி சில போட்டலறப் பூங்க மலன், கைமுடங்க நான் சனனக் கட்டறுவ தெந்நாளோ. (௧௫)

கற்குணத்தைப் போன்றவஞ்சக் காரர்கள் கைகோவாம், னற்குணத்தார் கைகோத்து நான்றிரிவ தெந்நாளோ. (௧௬)

துட்டனெமாமாயைச் சுழனீக்கியந்தரமே
விட்டனையோவென்று வியக்குநாளெந்நாளோ. ( )

## அன்பர்நெறி.

அத்துவாவெல்லா மடங்கச்சோதித்தபடிச்
சித்துருவாய்நின்றார் தெளிவறிவதெந்நாளோ. (௧)

மூச்சற்றுச்சிந்தை முயற்சியற்று மூதறிவாய்ப், பேச்சற்றோர்பெற்ற வொன்றைப்பெற்றிடுநாளெந்நாளோ. (௨)

கோட்டாலையான குணமிறந்தநிர்க்குணத்தோர்
தேட்டாலேதேடுபொருள் சேருநாளெந்நாளோ.

கெடுத்தே பசுத் துவத்தைக் கேடிலாவானந்த, மடுத்தோ ரடுத்த பொருட் கார்வம்வைப்ப தெந்நாளோ (௪)

கற்கண்டா லோடுகின்ற காக்கைபோற் பொய்ம்மாயச், சொற்கண்டா லோடுமென்பர் தோய்வறிவ தெந்நாளோ. (௫)

மெய்த்த குலங் கல்விபுனை வேடமெல்லா மோ டவிட்ட, சித்த மொன்றுஞ் சேராச் செயலறிவ தெந்நாளோ. (௬)

குற்றச் சமயக் குறும்படர்ந்து தற்போத,மற்ற வர்கட்கற்றபொருட் கன்புவைப்பதெந்நாளோ.

தர்க்கமிட்டுப்பாழாஞ் சமயக்குதர்க்கம்விட்டு நிற்குமவர்கண்டவழி நேர்பெறுவதெந்நாளோ.

வீறியவே தாந்தமுதன் மிக்க கலாந்தவரை,யா று முணர்ந் தோருணர்வுக் கன்பு வைப்ப தெந்நா ளோ. (௯)

கண்டவிட மெல்லாங் கடவுண்மய மென்றறிந் து, கொண்டநெஞ்சர் நேயநெஞ்சிற் கொண்டிரு ப்ப தெந்நாளோ. (௧0)

பாக்கியங்களெல்லாம் பழுத்துமனம்பழுத்தோர் நோக்குந்திருக்கூத்தை நோக்குநாளெந்நாளோ. ()

எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோத னர்கள், செவ்வறிவை நாடிமிகச் சிந்தை வைப்ப தெந்நாளோ. (௧௨)

---

## அறிஞருரை.

இருநிலனைத் தீயாகி யென்ற திருப்பாட்டின், பெருநிலையைக் கண்டணைந்து பேச்சறுவ தெந்நா ளோ. (௧)

அற்றவர்கட்கற்றசிவ மாமென்ற வத்துவித, முற்றுமொழி கண்டருளின் மூழ்குநாளெந் நாளோ.

தானென்னை முன்படைத்தா னென்ற தகவுரையை, நானென்று முண்மைபெற்று நாமுணர்வதெந் நாளோ. (௩)

என்னுடைய தோழனுமா மென்ற திருப்பாட்டி, னன்னெறியைக் கண்டுரிமை நாஞ்செய்வதெந் நாளோ. (௪)

ஆருடனேசேரு மறிவென் றவவ்வுரையைத்
தேரும்படிக்கருடான் சேருநாளெந்நாளோ. (௫)

உன்னி லுன்னுமென்ற வுறுமொழியா லென்னிதயந், தன்னிலுன்னி னன்னெறியைச்சாருநாளெந் நாளோ. (௬)

நினைப்பறவேதானினைந்தே னென்றநிலைநாடி
மனைத்துமாமப்பொருளி லாழுநாளெந்நாளோ. ( )

சென்றுசென்றே யணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாகி, நின்றுவிடு மென்றநெறி நிற்குநாளெந் நாளோ. (௮)

ஆதியந்தமில்லா வரியபரஞ்சோதியென்ற
நீதிமொழிகண்டதுவாய்நிற்குநாளெந்நாளோ. (௯)

பிறிதொன்றி லாசையின்மைப்பெற்றிருந்தே னென்ற, நெறியுடையான் சொல்லினிலை நிற்குநாளெந் நாளோ. (௰)

திரையற்றநீர்போற் றெளியவெனத்தேர்ந்த
வுரைபற்றியுற்றங் கொடுங்குநாளெந்நாளோ. ()

யாவற்றி லவிழுநம் தற்பவன ற
நெறியாமுறையுணர்ந்து நிற்குநாளெந்நாளோ. ()

எனக்குணியென்று மியற்கையாய்ப்பின்னு
முனக்குணென்ற வுறுதிகொள்வதெந்நாளோ.

அறிவை யறிவதுவேயாகும்பொருளென், றுறு
திசொன்ன வுண்மையினை யோருநா ளெந்நாளோ.

---

## நிற்கு நிலை.

பண்ணினிசைபோலப் பரமன்பானின்றதிற
லெண்ணியருளாகி யிருக்குநாளெந்நாளோ. (௧)

அறிவோடறியாமை யற்றறிவினூடே
குறியிலறிவுவந்து கூடுநாளெந்நாளோ. (௨)

சொல்லான்மனத்தாற் றொடராச்சம்பூரணத்தி
னில்லாநிலையாய் நிலைநிற்பதெந்நாளோ. (௩)

செங்கதிரின் முன்மதியந் தேசடங்கி நின்றிடல்
போ, லங்கணனார்தாளி லடங்குநா ளெந்நாளோ.

வானூடடங்கும் வளிபோலவின்புருவாங்
கோனூடடங்குங் குறிப்பறிவதெந்நாளோ. (௫)

செப்பரியதண்கருணைச் சிற்சுகனார்பூரணத்தி
லப்பினிடையுப்பா யணையுநாளெந்நாளோ. (௬)

தூயவறிவான சுகரூபசோதிதன்பாற்
றீயினிரும்பென்னத் திகழுநாளெந்நாளோ. (எ

தீதணையாக்கர்ப்பூர தீபமெனநான்கண்ட
சோதியுடனொன்றித் துரிசறுவதெந்நாளோ. (அ

ஆராருங்காணாத வற்புதனார்பொற்படிக்கீழ்
நீரார்நிழல்போ னிலாவுநாளெந்நாளோ. (கூ

எட்டத்தொலையாத வெந்தைபிரான்சந்நிதியில்
பட்டப்பகல்விளக்காய் பண்புறுவதெந்நாளோ. (

கருப்பு வட்டை வாய் மடுத்துக் கண்டார் நா
போல, விருப்பு வட்டா வின்புறுவை மேவுநாளெ
நாளோ. (கக

துச்சப்புலனாற் சுழலாமற்றண்ணருளா
லுச்சிக்கதிர்ப்படிக மொவ்வுநாளெந்நாளோ. கஉ

இம்மாநிலத்தி லிருந்தபடியேயிருந்து
சும்மாவருளைத் தொடருநாளெந்நாளோ. (கந

தானவனாந் தன்மையெய்தித்தண்டமென வன
டமெங்கு,ஞானமதயானைநடத்துநாளெந்நாளோ

ஒன்றிரண்டு மில்லதுவா யொன்றிரண்டு முள்ள
துவாய், நின்ற சமத்து நிலை நேர்பெறுவ தெந்ந
ளோ. (கரு

பாசமகலாமற் பதியிற்கலவாமன்
மாசில்சமத்துமுத்தி வாய்க்குநாளெந்நாளோ.

சிற்றறிவுமெள்ளச் சிதைந்தெம்மான்பேரறிவை
யுற்றறியாவண்ணமறிந் தோங்குநா ளெந்நாளோ.

தந்திரத்தை மந்திரத்தைச் சாரினவை யாமறி
வென், றெந்தையுணர் வேவடிவா வெய்துநா ளெந்
நாளோ. (௧௯)

போக்குவர வற்றவெளி போனிறைந்த போத
நிலை, நீக்கமறக்கூடி நினைப்பறுவ தெந்நாளோ. ()

காண்பானுங் காட்டுவதுங் காட்சியுமாய் நின்ற
வந்த, வீண்பாவம் போயதுவாய் மேவுநா ளெந்
நாளோ. (௨௦)

வாடாதேநாளுவாய் மாயாதேயெங்கோவை
நாடாதேநாடி நலம்பெறுவதெந்நாளோ. (௨௧)

ஆடலையே காட்டியெம தாடலொழித் தாண்
டான்பொற், றாடலைமேற் சூடித் தழைக்குநா ளெ
ந்நாளோ. (௨௨)

மேலொடு கீழில்லாத வித்தகனார் தம்முடனே
பாலொடுசேர்போற்கலந்து பண்புறுவதெந்நாளோ

அறியாதறிந்தெமையா ளண்ணலைநாமாகக்
குறியாதவண்ணங் குறிக்குநா ளெந்நாளோ.

ஓராமன் மந்திரமு முன்னுமனம்பரனைப்
பாராமற்பார்த்துப் பழகுநாளெந்நாளோ. (உ௫)

ஊன்பற்று மென்னை றுறவுபற்றும் பூரணன்பா
ல்,வான்பற்றுங் கண்போன் மருவுநாளெந்நாளோ.

ஆண்டான்மவுனி யளித்தவறிவாலறிவைத்
தூண்டாமற்றூண்டித் துலங்குநாளெந்நாளோ.

ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞான
தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ.

---

## நிலைபிரிந்தோர் கூடுதற்குபாயம்.

கன்மநெறிதப்பிற் கடுநரகென்றெந்நாளு
நன்மைதருஞானநெறி நாமணைவதெந்நாளோ. (க)

ஞானநெறிதானே நழுவிடினு மப்பதத்து
மானமுத்திநல்குமென வன்புறுவதெந்நாளோ.

பன்மார்க்கமான பலவடிபட்டேனுமொரு
சொன்மார்க்கங்கண்டு துலங்குநாளெந்நாளோ.

அத்துவித மென்ற வந்நியச் சொற்கண்டுணர்ந்து
சுத்தசிவத்தைத் தொடருநாளெந்நாளோ. (ச)

கேட்டன்முதனன்காலே கேடிலாநாற்பதமும்
வாட்டமறவெமக்கு வாய்க்குநாளெந்நாளோ.

என்னதியா னென்பதற வெவ்விடமு மென்னு
சான், சன்னிதியாக் கண்டு நிட்டை சாதிப்பதெந்
நாளோ. (௬)

நாம்பிரம மென்று னடுவேயொன் றுண்டாமா,
றேம்பியெல்லாமொன்றுய்த்திகழுநாளெந்நாளோ.

மூச்சகமேயாதி முழுதுமகண்டாகார
சச்சிதானந்தசிவந் தானென்பதெந்நாளோ. (அ)

எவ்வடிவும் பூரணமா மெந்தையுரு வென்றி
ந்த,வவ்வடிவுக்குள்ளே யடங்குநாடெந்நாளோ.()

சிந்தித்ததெல்லாஞ் சிவபூரணமாக
வந்தித்துவாழ்த்தி வணங்குநாளெந்நாளோ. (௧௦)

தாங்கியபார்விண்ணாதி தானேஞானக்கினியா
யோங்குமியோகவுணர் வுற்றிடுநாளெந்நாளோ.

ஆசனமூர்த்தங்க ளறவகண்டாகாரசிவ
பூசைசெயவாசை பொருந்துநாளெந்நாளோ.

அஞ்செழுத்தினுண்மை யதுவானவப்பொருளே
நெஞ்சழுத்தியொன்றுகி நிற்குநாளெந்நாளோ.

அவ்வுயிர்போ லெவ்வுயிரு மானபிரான் றன்ன
டிமை, யெவ்வுயிறு மென்று பணி யாஞ்செய்வ
தெந்நாளோ. (௧௪

தேசிகர்கோனான திறன்மவுனிநந்தமக்கு
வாசிகொடுக்க மகிழுநாளெந்நாளோ. (௧௫)

குருலிங்கசங்கமமாக்கொண்டதிருமேனி, யரு
மயமென்றன்புற் றருள்பெறுவதெந்நாளோ. (௧௬)

---

## காண்பேனோவென்கண்ணி.

சிந்திக்குந்தோறுந் தெவிட்டாவமுதேயென்
புந்திக்குணீதான் பொருந்திடவுங்காண்பேனோ

கேவலத்திலுன் கிடந்து கீழ்ப்படா தின்பவருட்
காவலன்பா லொன்றிக்கலந்திடவுங்காண்பேனோ.

துரியங்கடந்த வொன்றே தூவெளியாய்நின்ற,
பெரியநிறைவே யுனைநாம் பெற்றிடவுங் காண்பே
னோ. (௩)

மாசற்றவன்பர்நெஞ்சே மாளுதபெட்டகமாத்
தேசுற்றமாமணிநின் றேசியையுங் காண்பேனோ.

மாயாவிகார மலமகலவெந்தைபிரா
னேயானுபூதி நிலைபெறவுங்காண்பேனோ.

பொய் யுலகும் பொய்யுறவும் பொய் யுடலும்
பொய் யெனவே, மெய்யநினை மெய்யெனவேமெய்
யுடனே காண்பேனோ. (௬)

வாலற்றபட்டமென மாயா மனப்படலங், காலற்
றுவீழவுமுக் கண்ணுடையாய் காண்பேனோ. (எ)

உள்ளும் புறம்பு மொருபடித்தாய் நின்று சுகங்
கொள்ளும்படிக்கிறை நீ கூட்டிடவுங்காண்பேனோ

காட்டுகின்றமுக்கட் கரும்பே கனியேயென், னூ
ட்டமெல்லாந் தீரவுன தாடலையுங் காண்பேனோ.()

தூங்காமற் றூங்கிச் சுகப்பெருமானின்னிறைவி
னீங்காமனிற்கு நிலைபெறவுங்காண்பேனோ. (௧௦)

வாதவூராளிதனை வான் கருணையால்விழுங்கும்
போதவூரேறேநின் பொன்னடியுங்காண்பேனோ ()

சாட்டையிலாப் பம்பரம்போ லாடுஞ் சடசால
நாட்டமறவெந்தைசுத்தஞானவெளிகாண்பேனோ.

மன்றாடும்வாழ்வே மரகதஞ்சேர் மாணிக்கக், கு
ன்றேநின் றாட்கீழ்க் குடிபெறவுங் காண்பேனோ.()

பொய்யென் றறிந்துமெமைப் போக வொட்டா
தையவிந்த, வையங் கனமயக்க மாற்றிடவுங்காண்
பேனோ. (௧௪)

தாயினும் நல்ல தயாளுவே நின்னையுன்னித், தீ
யின் மெழு கொத்துருகுஞ் சிந்தை வரக்காண்பே
(௧௫)

என்செயினு மென்பெறினு மென்னிறைவா வே
ழையன்யா, னின்செயலென் றுன்னு நினைவு வரக்
காண்பேனோ. (௧௬)

எள்ளத்தனையு மிரக்கமிலாவன்பாவி
யுள்ளத்துமெந்தை யுலாவிடவுங்காண்பேனோ.

வஞ்சகத்துக் காலயமாம் வல்வினையே னுகெடவே
னெஞ்சகத்தி லையாநீ நேர்பெறவுங் காண்பேனோ.

தொல்லைப்பிறவித் துயர்கெடவுமெந்தைபிரான்
மல்லற்கருணை வழங்கிடவுங்காண்பேனோ. (௧௯)

வாளாருங்கண்ணார் மயற்கடலிலாழ்ந்தேன்சற்
றுளாகவெந்தை யருள்செயவுங்காண்பேனோ.

பஞ்சாய்ப் பறக்குநெஞ்சப் பாவியைநீ கூவியையா
வஞ்சாதேயென் றின்னருள் செயவுங்காண்பேனோ.

ஆடுகறங்காகி யலமந்துழன் றுமனம்
வாடுமெனையையாநீ வாவெனவுங்காண்பேனோ.

சிட்டர்க்கெளிய சிவனேயோ தீவினையேன்
மட்டற்றவாசைமயக்கறவுங்காண்பேனோ. (௨௪)

உண்ணின் றுணர்ந்து மூலப்பிலா வொன்றேநின், ற
ண்ணென் றசாந் தவருள்சார்ந்திடவுங்காண்பேனோ

ஓடுங்கருத்தொடுங்க வுள்ளுணர்வுதோன் றநினைக்
கூடும்படிக்கிறைநீ கூட்டிடவுங்காண்பேனோ.(உ௫)

வாக்கான்மனத்தான் மதிப்பரியாய்நின்னருளை
நோக்காமனேக்கிநிற்கு நுண்ணறிவுகாண்பேனோ.

இவ்வுடம்புநீங்குமுன்னே யெந்தாய்கேளின்ன
ருளா, மவ்வுடம்புக்குள்ளே யவதரிக்கக்காண்பே
னோ. (உ௭)

நித்தமாயொன்றாய் நிரஞ்சனமாய் நிர்க்குணமா
ஞ், சுத்தவெளிநீவெளியாய்த்தோன் றிடவுங்காண்
பேனோ. (உ௮)

கண்ணிறைந்த மோனக் கருத்தேயென் கண்
ணேயென், னுண்ணிறைந்தமாயையொழிந்திடவுங்
காண்பேனோ. (உ௯)

அத்தாவிமலா வருளாளாவானந்த, சித்தாவெ
னக்குனருள் செய்திடவுங்காண்பேனோ. (௩0)

வீணேபிறந்திறந்து வேசற்றேனாசையறக்
காணேனிறைநின் கருணைபெறக்காண்பேனோ.(௩௧)

சட்டையொத்தவிவ்வுடலைத் தள்ளுமுன்னேநா
ன்சகச, நிட்டையைப்பெற்றறையா நிருவிகற்பங்கா
ண்பேனே. (௩௨

எல்லாந்தெரியுமிறைவாவென் னல்லலெல்லாஞ்
சொல்லாமுனீதான்றெருத்திரங்கக் காண்பேனே

அண்டபகிரண்ட மனைத்துமொரு படித்தாக்
கண்டவர்கள்கண்டதிருக் காட்சியையுங் காண்பே
னே. (௩௪

ஊனிருந்தகாய முடனிருப்ப வெந்தைநின்பால்
வானிருந்த தென்னவுநான் வந்திருக்கக் காண்பே
னே. (௩௫

தினையத்தனையுந் தெளிவறியாப்பாவியே
னினைவிற்பரம்பொருணீநேர்பெறவுங்காண்பேனே

துன்பமெனுந்திட்டனைத்துஞ் சூறையிடவையா
வே, யின்பவெள்ளம்வந்திங் கெதிர்ப்படவுங்காண்
பேனே. (௩௭

## ஆகாதோவென்கண்ணி.

கல்லாதநெஞ்சுங் கரைந்துருகவெத்தொழிற்கும்
வல்லாய்நின்னின்பம் வழங்கினலாகாதோ. (௧)

என்னையறிய வெனக்கறிவாய் நின்னருணின்
றன்னையறிந் தின்பநலஞ் சாரவைத்தா லாகாதோ.

பொய்ம்மயமே யானபுரைதீர வெந்தையின்ப,
மெய்ம்மயம்வந் தென்னை விழுங்கவைத்தா லாகா
தோ. (௩)

மட்டிலாச்சிற்சுகமாம் வாழ்வினின்னின்பமயம்,
சிட்டர்போல் யானருந்தித் தேக்கவைத்தா லாகா
தோ. (௪)

அத்தாநின்பொற்று ளடிக்கேயனுதினமும்
பித்தாக்கியின்பம் பெருகவைத்தாலாகாதோ. (௫)

மெல்லியலார்மோக விழற்கிறைப்பேனையாநின்
னெல்லையிலானந்தநல மிச்சித்தாலாகாதோ. (௬)

சுட்டழகாயெண்ணுமனஞ் சூறையிட்டானந்த
மயக், கட்டழகாநின்னைக் கலக்கவைத்தா லாகா
தோ. (௭)

சோதியேநந்தாச் சுகவடிவேதூவெளியே
ஆதியேநின்னை யறியவைத்தாலாகாதோ. (௮)

நேசஞ்சிறிதுமிலே னின்மலனேநின்னடிக்கே
வாசஞ்செயவிரங்கி வாவென்றாலாகாதோ. (௯)

என்னறிவுக்குள்ளே யிருந்ததுபோலையாவே, நி
ன்னறிவுணின்னுடன்யா னிற்கவைத்தாலாகாதோ

ஆதிப்பிரானேயென் னல்லிருளகலச்
சோதிப்ரகாசமயந் தோன்றுவித்தாலாகாதோ. ()

ஆசைச்சுழற்கடலி லாழாமலேயாநின்
நேசப்புணைத்தா ணிறுத்தினலாகாதோ. (கஉ)

பாசநிகளங்களெல்லாம் பஞ்சாகச்செஞ்சேவே
யீசவெனைவாவென் றிரங்கினலாகாதோ. (கங)

ஓயாவுள்ளன்பா யுருகிவாய்விட்டரற்றிச்
சேயாகியெந்தைநின்னைச் சேரவைத்தாலாகாதோ

ஆதியாம்வாழ்வா யகண்டிதமாய்நின்றபரஞ்
சோதிநீயென்னைத் தொழும்பனென்றாலாகாதோ.

விண்ணாக்கண்ட விழிபோற்பரஞ்சோதி
கண்ணாரநின்னிறைவைக் காணவைத்தாலாகாதோ

சோராமற்சேர்ந்துநின் றுசின்மயனேநின்மயத்தைப்
பாராமற் பாரெனநீ பக்ஷம்வைத்தாலாகாதோ.

கண்ணாடிபோலவெல்லாங் காட்டுந்திருவருளை
உண்ணாடியையா வுருகவைத்தாலாகாதோ. (கஅ)

மூலவிருள்கால்வாங்க மூதறிவுதோன்றவருட்
கோலம்வெளியாகவெந்தை கூடுவித்தாலாகாதோ.

சாற்றரிய வின்பவெள்ளந் தாக்குமதி னீமூளைக்
கி, லூற்றமுறு மென்னவதி லுண்மைசொன்னா லா
காதோ. (௨0)

கையுங்குவித்திரண்டு கண்ணருவிபெய்யவரு
ளையநின்றாட்கீழே யடிமைநின்றாலாகாதோ. (௨௧)

---

## இல்லையோவென் கண்ணி.

ஏதுந்தெரியா தெனை மறைத்தவல்லிருளை
நாதநீக்கவொரு ஞானவிளக்கில்லையோ. (௧)

பணியற்றுநின்று பதைப்பறவென் கண்ணுண்
மணியொத்த சோதியின்ப வாரியெனக்கில்லையோ

எம்மாலறிவதற வெம்பெருமான் யாதுமின்றிச்
சும்மாவிருக்கவொரு சூத்திரந்தானில்லையோ. (௩)

நாய்க்குங்கடையானே னுதாநின்னின்பமயம்
வாய்க்கும்படியினியோர் மந்திரந்தானில்லையோ.( )

ஊனாகநிற்கு முணர்வைமறந்தையாநீ
தானாகநிற்கவொரு தந்திரந்தானில்லையோ. (௫)

அல்லும்பகலு மகண்டவடிவேயுனைநான்
புல்லும்படியெனக்கோர் போதனைதானில்லையோ.

---

## வேண்டாவோவென்கண்ணி.

கண்டவடிவெல்லாநின் காட்சியென்றே கைகு
வித்துப், பண்டுமின்று நின்றவென்னைப் பார்த்திர
ங்கவேண்டாவோ. (க)

வாதனையோடாடு மனப்பாம்புமாயவொரு
போதனைதந்தையா புலப்படுத்தவேண்டாவோ.

தன்னையறியத் தனியறிவாய்நின் றருளு
நின்னையறிந்தென்னறிவைநீங்கிநிற்கவேண்டாவோ

அள்ளக்குறையா வகண்டிதானந்தமெனும்
வெள்ளமெனையா வெளிப்படுத்தவேண்டாவோ

அண்டனேயண்டரமுதேயென்னாருயிரே, தொ
ண்டனேற்கின்பந் தொகுத்திரங்க வேண்டாவோ.

பாராதேநின்று பதையாதேசும்மா தான்
வாராயெனவும் வழிகாட்டவேண்டாவோ. (௬)

---

## நல்லறிவேயென்கண்ணி.

எண்ணிறைந்த மேன்மைபடைத் தெவ்வுயிர்க்கு
மவ்வுயிராய்க், கண்ணிறைந்தசோதியைநாங்காண
வா நல்லறிவே. (க)

சித்தான நாமென் சடத்தைநா மென்னவென் றுஞ், சத்தான வுண்மைதனைச் சாரவாநல்லறிவே.

அங்கு மிங்கு மெங்கு நிறை யற்புதனைப் பொற் பறிந்து, பங்கயத்துள் வண்டாய்ப் பயன் பெறவா நல்லறிவே. (௩)

கான்றசோ றென்னவிந்தக் காசினிவாழ் வத்த னையுந், தோன்ற வருள்வெளியிற் றோன்றவா நல் லறிவே. (௪)

## பலவகைக்கண்ணி.

என்னரசே கேட்டிலையோ வென்செயலோ வே துமிலை, தன்னரசு நாடாகித் தத்துவங்கூத்தாடிய தே. (௧)

பண்டொருகா லின்பாற் பழக்கமுண்டோ வெ ந்தைநினைக், கண்டொருகாற்போற்றக் கருத்துங் கருதியதே. (௨)

வேறு.

கண்டனவே காணுமன்றிக் காணுவோ காணு வென், கொண்டறிவே னெந்தைநினைக்கூடுங்குறிப் பினையே. (௩)

கல்லா லடியில்வளர் கற்பகமே யென்னளவோ பொல்லா வினைக்குப்பொருத்தந்தான் சொல்லாயே

தப்பிதமொன் றின்றியதுதானாகநிற்கவுண்மை,
செப்பியது மல்லாலென் சென்னியது தொட்ட
னையே. (௫)

வேறு.

மாசான நெஞ்சனிவன் வஞ்சனென்றோ வாய்
திறந்து, பேசா மௌனம் பெருமான் படைத்தது
வே. (௬)

கற்பதெல்லாங் கற்றேமுக் கண்ணுடையாய்நின்
பணியாய், நிற்பது கற்றன்றோ நிருவிகற்பமாவது
வே. (௭)

முன்னளவில்கன்ம முயன்றானிவனென்றோ
வென்னளவிலெந்தா யிரங்காதிருந்ததுவே. (௮)

வேறு.

நெஞ்சகம்வேறாகி நினைக்கூட வெண்ணுகின்ற,வஞ்
சகனுக்கின்ப மெந்தாய் வாய்க்குமா றெவ்வாறே.

வேறு.

பள்ளங்கடோறும் பரந்தபுனல்போலுலகி
லுள்ளம்பரந்தா லுடையாயென்செய்வேனே. ()

முன்னினைக்கப் பின்மறைக்கு மூடவிருளாகெடு
வே, னென்னினைக்க வென்மறக்க வெந்தை பெரு
மானே. (௧௧)

வல்லாளாமோனுநின் வான்கருணையென்னிடத்தே
யில்லாதேபோனுனெவ்வண்ணமுய்வேனே (௧௨)

வேறு.

வாக்குமனமு மவுனமுற வெந்தைநின்னை
நோக்குமவுனமிந்த நூலறிவிலுண்டாமோ. (௧௩)

ஒன்றாய்ப்பலவா யுலகமெங்குந்தானேயாய்
நின்றாயையாவெனை நீ நீங்கற்கெளிதாமோ. (௧௪)

ஆவித்துணையே யருமருந்தேயென்றனை நீ
கூவியழைத்தின்பங் கொடுத்தாற்குறைவாமோ. ()

எத்தனையோநின் விளையாட் டெந்தாய்கே ளிவ்
வளவென், றத்தனையுமென்னு லறியுந் தரமாமோ.

தேடுவார்தேடுஞ் சிவனேயோநின் றிருத்தாள்
கூடுவான்பட்டதுயர் கூறற்கெளிதாமோ. (௧௭)

வேறு.

பற்றினதைப் பற்றுமெந்தாய் பற்றுவிட்டாற்
கேவலத்தி, லுற்றுவிடு நெஞ்சமுனை யொன்றிநிற்ப
தெப்படியோ. (௧௮)

ஒப்பிலாவொன்றேநின் னுண்மையொன்றுங்கா
ட்டாமற், பொய்ப்புவியைமெய்போற் புதுக்கிவை
த்த தென்னேயோ. (௧௯)

காலால் வழிநடவுங் காலத்தே கண்மூளைத்தாற்
போலே யெனதறிவிற் போந்தறிவாய் நில்லாயோ.

தன்னரசுநாடாஞ் சடசாலபூமிமிசை
யென்னரசேயென்னை யிறையாகநாட்டினையோ.

வேறு.

திங்களமுதாநின் றிருவாக்கைவிட்டரசே
பொங்குவிடமனைய பொய்ந்நூல்புலம்புவதேன்.

உன்னவுன்ன வென்னையெடுத் துள்விழுங்குநின்
னிறைவை, யின்னமின்னங்காணமலெந்தாய்சுழ
ல்வேனே. (உரு

ஆராவமுதனைய வானந்தவாரியென்பாற்
றூராமலையாநீ தள்ளிவிடவந்ததென்னே. (உசு

---

## நின்ற நிலை.

நின்றநிலையேநிலையாகைத்தானந்த
நிலைதானேநிருவிகற்பநிலையுமாகி
யென்றுமழியாதவின்பவெள்ளந்தேக்கி
யிருக்கவெனைத்தொடர்ந்துதொடர்ந்திழுக்கு
ந்தோ. (க

இருக்காதிமறைமுடிவுஞ்சிவாகமாதி
யியம்பமங்கைகாட்டெனவேயிதயத்துள்ளே

யொருக்காலேயுணர்ந்தவர்கட்கெக்கலுந்தா
ளொழியாதவின்பவெள்ளமுலவாநிற்கும். (௨)

கற்றதுங்கேட்டதுந்தானேயேதுக்காகக்
கடபடமென்றுருட்டுதற்கோ கல்லாலெம்மான்
குற்றமறக்கைகாட்டுங்கருத்தைக்கண்டு
குணங்குறியற்றின்பநிட்டைகூடவன்றோ. (௩)

## பாடுகின்றபனுவல்.

பாடுகின்றபனுவலோர்க
டேடுகின்றசெல்வமே
நாடுகின்றஞானமன்றி
லாடுகின்றவழகனே. (௧)

அத்தனென்றநின்னையே
பத்திசெய்துபனுவலால்
பித்தனின்றுபேசவே
வைத்ததென்னவாரமே. (௨)

சிந்தையன்புசேரவே
நைந்துநின்னைநாடினேன்
வந்துவந்துளின்பமே
தந்திரங்குதாணுவே. (௩)

அண்டரண்டம்யாவுநீ
கொண்டுநின்றகோலமே

